


# 1. மந்தமாருதம்

"ஜெயம்! ஜெயம்!" என்ற சங்கரின் அழைப்புச் சொற்களில் கேலி கலந்த ஒரு பொய்க் கோபம், இதயத்திலிருந்து அவிழ்ந்து கொட்டிக் கொண்டிருந்த கொள்ளை ஆசை, சிறிதளவும் அமுலுக்கு வரமுடியாத வீண் அதிகாரம், இத்தனையும் ஊடுருவி நின்றதன்றி, அவன் தனது ஆள்காட்டி விரலையும், கட்டை விரலையும் சேர்த்துச் சின்முத்திரை காட்டும் தட்சிணாமூர்த்தியைப் போல் வளைத்து, கட்டை விரலிலிருந்து ஆள்காட்டி விரலை விண் விண்ணென்று விடுவித்துக் கதவை மும்முறை தட்டிய பாணியிலும், அனாவசிய மிடுக்கொன்று இருக்கத்தான் செய்தது. இப்படி வாய் விட்டும் கதவைத் தட்டியும் அழைத்தது போதாதென்ற காரணத்தாலோ என்னவோ, தொண்டையையும் இருமுறை கனைத்த சங்கர், தான் அதிக நேரம் காத்திருக்கத் தகாதவன் என்பதையும் அறிவுறுத்தினான். அவனுடைய இத்தனை ஆர்ப்பாட்டத்திற்கும் கதவு அப்படி யொன்றும் துரிதமாக திறக்கப்படவில்லை. அப்படித் திறக்கப்படவில்லையென்பதற்காக அவனும் மேற்கொண்டு அதிகக் கோபத்தையோ அதிகாரத்தையோ காட்டவும் முற்படவில்லை. அவ்விதக் கோபமோ அதிகாரமோ ஏற்படுவதாயிருந்தாலும், அந்த இரண்டையும் உள்ளேயிருந்து வாயிற் கதவை அணுகி வந்து கொண்டிருந்த 'டக் டக்' என்ற மெட்டிகளின் ஒலிகள் பட்டென்று அடக்கி விட்டன.

மெட்டிகளின் மென்னொலிகள் சங்கரின் கெட்டி
காரத்தனத்தை யெல்லாம் கண்ணிமைக்கும் நேரத்தி
பறக்க அடித்து விட்டதையும், அவன் மிடுக்கெல்லா
தளர்ந்து முகத்தில் ஆசை குழைய நின்றதையும், சி
வயல் கிராமத்தின் அந்தச் சிறிய ஓட்டு வீட்டு முன் கத
கூடப் புரிந்து கொண்டிருக்க வேண்டும். அக் கதவி
நடுவேயிருந்த இரும்புப் பிடியின் அடியிலிருந்த பித்தளை
தட்டிலிருந்த சிங்க முகமும் அவனைப் பார்த்து நகைத்த
அது மட்டுமா நகைத்தது ? வீட்டின் எதிரேயிருந்த பெரி
இலுப்பை மரம் கூடத் தனது கிளைகளைக் காற்றி
ஆட்டி, பூக்களை கலகலவென்று உதிர்த்து நகைத்த
அந்த இலுப்பை மரத்தில் உட்கார்ந்து கொண்டிருந்
மைனா தலையை நீட்டியது. இருளில் கண் தெரியவில்லை
யென்றாலும், அது கூ கூ என்று கூவிக் கேலி செய்த
காதுக்குக் கேட்கவே செய்தது. வீட்டுக் கதவின் இ
புறத்திலுமிருந்த சுவர் மாடங்களில் ஏற்றியிருந்த இரண்
அகல் விளக்குகளின் சுடர்களும் கேலியுடன் இப்படி
அப்படியும் அசைந்தன.

இயற்கையும் செயற்கையும் இப்படிப் பலவிதமாக
கேலி செய்ததை இம்மியும் லட்சியம் செய்யாத சங்கர
உள்ளேயிருந்து வந்த மெட்டி ஒலிகளைச் சுத்தமா
கர்னாடக சங்கீதத்தைக் காதில் வாங்கும் ரசிகன் போ
வாங்கி மெய் மறந்து நின்றான். அந்த மெட்டியொலிக
கதவுக்கருகில் சட்டென்று நின்று விட்டதிலிருந்து, அவ
கதவுக்கருகில் வந்து விட்டதை அறிந்து கொண்ட சங்கர
உணர்வு, காதிலிருந்து கண்ணுக்கு மாறி விட்டதா
கண்களிரண்டும் தேவி தரிசனத்துக்குத் தங்களைத் தயா
செய்து கொண்டன. அடுத்த வினாடி கதவைத் திறந்
ஒருக்களித்து வைத்த ஜெயம், சற்று விலகி நின்று சங்
உள்ளே போக வழி விட்டாள். அவள் அப்படி ஒது
நின்ற கோலத்தைத் தனது கண்களால் பருகிய சங்
உள்ளே உடனே செல்லாமல், சில வினாடிகள் வாய
படிக்கு வெளிப்புறத்திலேயே நின்றான்.



காணாததைக் கண்டவன்போல் சங்கரன் தன்னைப்
பார்ப்பதைக் கண்ட ஜெயத்தின் உள்ளம் மகிழ்ச்சி
வெள்ளத்தில் ஆழ்ந்தது உண்மை யென்றாலும், அதை
அவள் வெளிக்குக் காட்டாமல் முகத்தில் பாதி கோபத்தை
யும், பாதி வெட்கத்தையும் கலந்து படரவிட்டுக்கொண்டு,
''ஏன் ? அவசரம் தீர்ந்து விட்டதா ?'' என்று கேட்டாள்

சங்கரின் இதழ்களில் விஷமப் புன்முறுவலொன்று
தவழ்ந்தது. "அவசரம் எப்படித் தீரும் ? அதுவும் உன் தய
வில்லாமல்..." என்று அரைகுறையாக வார்த்தைகளைச்
சொல்லி அவளைப் பார்த்த பார்வையில், அவளுக்கும்
தனக்கும் மட்டுமே புரியக்கூடிய மீதி விஷயங்களையும்
வெளியிட்டான் சங்கர். ஜெயம் அவனைப் பார்த்து
மெல்ல நகைத்தாள். "சரி சரி, போதும். உங்கள் சாமர்த்
தியத்தை வாசற்படியிலிருந்து காட்ட வேண்டாம்..."
என்று கோபத்துடன் கூறவும் செய்தாள்.

"அப்படியானால், சாமர்த்தியத்தை உள்ளே வந்து
காட்டட்டுமா ?" என்றான் மேலும் சங்கர்.

"காட்டுவீர்கள், காட்டுவீர்கள்! ஏன் காட்ட மாட்டீர்
கள்? போதும் சமத்து. உள்ளே வாருங்கள். உம்...'' என்று
அதட்டலாகச் சொன்ன ஜெயம், வாசலில் யாராவது
பார்த்துவிடப் போகிறார்கள் என்று வாசலில் கண்ணை
ஓட்டி உள்ளே வரும்படி சங்கருக்குத் தலையை ஆட்டிச்
சைகையும் செய்தாள்.

அவள் சைகையைத் தொடர்ந்து, அவளுக்கும் ஒருக்
களித்த கதவுக்குமிருந்த இடைவெளியில் நுழைந்த சங்கர்,
வேண்டுமென்றே ஜெயத்தின் மேல் இடித்துக் கொண்டு
உள்ளே சென்றான். சங்கரின் இடது தோளும் மேல்கையும்
தன் மீது இடித்ததைக் கண்டு அவன்மீது பொய்க் கோபப்
பார்வையொன்றை வீசிவிட்டுக் கதவை மீண்டும்
தாளிட்ட ஜெயம், ''உங்களுக்கு ஒன்றும் புரியவில்லை''
என்றான், அந்தப் பொய்க் கோபம் குரலிலும் ஊடுருவ.

"என்ன புரியவில்லை எனக்கு?" என்று கேட்டுக் கொண்டே சங்கரன் உள்ளறையை நோக்கி நடந்தான்.

அவனைத் தொடர்ந்து நடந்து கொண்டே ஜெயமும் சொன்னாள், "தலைகால் புரியவில்லை" என்று.

"எனக்கா!" சங்கரின் கேள்வியில் மிடுக்கு இருந்தது.

"ஆமாம்! உங்களுக்கேதான்!" இந்தச் சொற்களை ஜெயம் அழுத்தியே உச்சரித்தாள்.

"என்னை இப்படியெல்லாம் சொல்லக் கூடாது," என்று சங்கர் எச்சரிக்கும் பாவனையில் பேசினான்.

"ஏனாம்?" ஜெயத்தின் குரலில் இகழ்ச்சி ஒலித்தது.

"நான் உன் புருஷன்!"

"அது நீங்கள் சொல்லித் தெரிய வேண்டியதில்லை."

"அப்படியா!"

"ஆமாம்."

"என்ன ஆமாம்?"

"அது ஊருக்கெல்லாம் தெரிந்து வருஷம் ஆறு ஆகி விட்டது."

"ஏன்? இவன் என் புருஷன், என் புருஷன் என்று கழுத்தில் தமுக்கைக் கட்டிக்கொண்டு ஊர் முழுதும் அடித் திருக்கிறாயா?" மிகவும் சாமர்த்தியமாக இந்தக் கேள்வியைக் கேட்டு விட்டதாகச் சங்கர் நினைத்தான்.

அதைவிடச் சாமர்த்தியமாகப் பதில் சொன்னாள் ஜெயம். "தமுக்கைக் கட்டியதும் நானல்ல, பறையடித்ததும் நானல்ல," என்றாள் அழுத்தமாக.

"அதுவும் நான் தானாக்கும்?" என்று கேட்டான் சங்கர், உள்ளறையிலிருந்த ஆணியில் சட்டையை கழற்றி மாட்டிக் கொண்டே.



"ஆம், நீங்களே தான்," என்றாள் ஜெயம்.

சட்டையை மாட்டிவிட்ட சங்கர் சரேலென்று திரும்பி "என்ன! எதற்கெடுத்தாலும் என்னை மடக்குவதென்று வைத்துக் கொண்டு இருக்கிறாயா?" என்று கேட்டான்.

சட்டையைக் கழற்றி மாட்டிவிட்டதால், திறந்த மார்புடனும் அரை வேஷ்டியுடனும் சிறு பையன்போல் எதிரே நின்ற தன் கணவனை, ஆசையெல்லாம் கண்களில் வழியப் பார்த்த ஜெயலட்சுமி, கணவன் பார்வை தன் உடலில் பல இடங்களில் உலாவுவதைக் கண்டு தலையைச் சிறிது தாழ்த்திக் கொண்டாள். அவள் இடது தோளில் ஒரு கையை வைத்து இன்னொரு கையால் முகவாய்க் கட்டையைப் பிடித்து அவள் தலையை நிமிர்த்திய சங்கர் சில வினாடிகள் அவள் முகத்தை ஆராய்ந்தான். பிறகு இரண்டு கைகளாலும் அவள் தோள்களைப் பற்றித் தன்னிடமிருந்து எட்ட நிறுத்திப் பார்த்தான். கண்ணியமாக வகிடு எடுக்கப்பட்டிருந்த அவள் கருங்குழலுக்குக் கீழ் தெரிந்த களைசொட்டும் தாமரை வதனமும், மீனைப்போல் வளைந்த கண்ணோரமும், மை திட்டியதால் கறுத்துக் கிடந்த இரப்பைகளும், மை திட்டாமலே கருமையும் நீரோட்டமும் கலந்த அழகிய கண்ணின் மணிகளும், குவிந்த செவ்விய இதழ்களும், அவன் கண் முன்னே எழுந்தன. அவன் ஆராய்ச்சிக் கண்ணையும் ஏமாற்றிய சின்னஞ்சிறு இடையும், அவன் கண்களைச் சிறிதும் ஏமாற்ற இஷ்டப்படாமல் நின்ற இரட்டை அழகும், அவனை எங்கோ கனவுலகுக்குக் கொண்டு சென்றன.

அனைத்தும் அவன் கண்டவைதான். தினம் காண்பவைதான். ஆனால் காணாததைக் கண்டுவிட்டவன் போல் நின்றான் சங்கரன். "கற்புடைய அழகு எத்தனை நிரந்தரமானது! எப்படி ஆடாமல் அசையாமல் கருத்தைக் கவர்ந்து நிற்கிறது!" என்றெண்ணிய சங்கரன், அவளைப் பார்த்தபடியே வைத்த கண் வாங்காமலேயே நின்று

விட்டான். அந்தப் பார்வை அவளுக்கும் புதிதல்ல. பழகிய பார்வைதான். தினம் தினம் அவன் பார்க்கிற பார்வைதான். இருப்பினும் அவள் சங்கடத்தால் நெகிழ்ந்தாள். நித்தம் நித்தம் ஏதோ புதிதாக நிகழ்ந்துவிடுகிறது போன்ற பிரமையையும், சங்கடத்தையும் தம்பதிகளுக்கு அளிக்கும் இயற்கையின் அந்த விசித்திர நிலையை ஆராயக் கூட இருவருக்கும் சக்தியில்லை, அந்தச் சில வினாடிகளில் மௌனம் சங்கடத்தை அதிகப்படுத்திக் கொண்டிருந்ததால், அதிலிருந்து விடுபடச் சொற்களை உதிர்த்தாள் ஜெயம். "ஏதோ கேட்டீர்கள், பாதியில் நிறுத்திவிட்டீர்கள்..." என்று.

"என்ன கேட்டேன்?" கனவுலகிலிருந்து பேசினான் சங்கர்.

"அதற்குள் மறந்துவிட்டதா?" என்ற ஜெயம், அவன் கண்களுடன் தன் கண்களைக் கலக்க விட்டாள்.

"உன்னைப் பார்த்தால் எது நினைப்பிலிருக்கிறது?"

"எல்லாம் மறந்து விடுகிறதாக்கும்?"

"ஆமாம்."

"நல்லவேளை! என்னை மறக்கவில்லை!"

"உன்னை எப்படி மறக்க முடியும்? உன்னால்தானே மற்றவை மறந்து போகிறது."

"என்னைப் பார்த்தவுடன் மறதி வந்து விடுகிறதா?"

"முதலில் வருவதில்லை."

"முதலில் என்ன வருகிறதாம்?"

"மயக்கம்!" இதைச் சொன்ன சங்கர் மெல்ல நகைத்தான். அவன் நகைப்பைக் கேட்டதாலும், தோள்களிலிருந்த அவன் இரு கைகளும் தன்னை வலிக்கப் பிடித்ததாலும், மயக்கம் அவனுக்கா தனக்கா என்பதைப் புரிந்து கொள்ள முடியாத ஜெயம், "வரும் வரும்! மயக்கம் வராதோ?" என்றாள் முகத்தில் கோபத்தை படரவிட்டுக் கொண்டு.



சங்கர் அதைக் கண்டு அஞ்சவில்லை. அந்தக் கோபத்துக்குப் பின்னால் என்ன இருக்கிறது என்பதை அவன் அறிந்தேயிருந்தான். இனிய இளநீரை மூடி நிற்கும் தேங்காயின் முரட்டு மூடிபோல், அன்பை உள்ளடக்கி நிற்கும் அந்தக் கோபத்தைக் கண்டு சங்கர் அஞ்சவில்லையானாலும், அஞ்சுவது போல் பாசாங்கு செய்து, "ஆமாம்! நான் ஏதோ மறந்துவிட்டதாகச் சொன்னாயே?" என்று வினவினான்.

"ஆம், சொன்னேன்!" கோபத்துடன் உதிர்ந்த ஜெயத்தின் சொற்களில், கோபத்தின் சாயை சிறிதும் காணோம்.

"என்ன மறந்து விட்டேன்?" என்று வினவினான் சங்கர்.

தமுக்கை நான் கழுத்தில் கட்டிக் கொண்டிருப்பதைப் பற்றியும், இவர்தான் என் புருஷன் என்று ஊரார் கேட்கும்படி அடிப்பதாகவும் சொன்னீர்களே!''

"ஆம்! சொன்னேன்!''

"தமுக்கைக் கட்டியதும், அடிப்பதும் நீங்கள்தானே?"

"எப்படி?"

"இதோ பாருங்கள்." என்று சேலைக்குள் மறைந்து கிடந்த தாலியை எடுத்துக் கட்டை விரலில் ஏந்தி, ஆள் காட்டி விரலாலும் இறுகப் பிடித்துக் காட்டிய ஜெயம் சொன்னாள், "இதோ இருக்கிறது தமுக்கு. இதைக் கட்டியதும் நீங்கள், இதைக் கொண்டு ஊருக்கு முழக்கியதும் நீங்கள்,'' என்று.

இதைச் சொன்ன ஜெயத்தின் முகத்தில் தெய்வீகப் பொலிவு மண்டிக் கிடந்தது. தாலியைத் தாங்கிய கட்டை

விரலும் வளைத்துப் பிடித்த ஆள்காட்டி விரலும் உயிரைப் பிடித்துக் கொள்வதுபோல் அதைத் தாங்கிக் கொண்டிருந்தன. அவள் வாழ்வின் சகலமும் அந்தச் சிறுபொன் தகட்டில் உறைந்து கிடப்பது அவனுக்கு நன்றாகத் தெரிந்தது. அந்தச் சமயத்தில் அவள் உணர்ச்சிகளில் கூட மாறுபாடிருந்தது. வேடிக்கைப் பேச்சு, பொய்க் கோபம் எல்லாமே அவளிடமிருந்து மறைந்துவிட்டன. சொற்கள் விவரித்தற்கரிய உணர்ச்சிகளுடன் அவள் தன் கணவன் எதிரே நின்றாள்.

அவள் நின்ற நிலை, முகத்தில் சுழன்ற உணர்ச்சிகளின் வேகம், இவற்றைக் கண்ட சங்கர் அவளை நன்றாகத் தன்னிடம் இழுத்துக் கொண்டான். உணர்ச்சிகள் கொந்தளித்தன. இருவரும் சொர்க்கத்தைக் கண்டவர்கள்போல் நீண்ட நேரம் நின்று கொண்டேயிருந்தனர். நேரம் போவது தெரியாமல் நிலைகுலைந்து நின்ற அந்த இருவரும், அறைக் கதவு திறந்திருந்ததையோ மூன்றாவது தலையொன்று அந்த அறைக்குள் எட்டிப் பார்த்ததையோ சிறிதும் கவனிக்கவில்லை. சொர்க்கம் வீசிய சுகத்தின் மந்தமாருதம் அவ்விருவர் கண்களை மட்டுமல்ல, வெளி உலகம் ஒன்றிருக்கிறது, என்ற உணர்வைக் கூட அடியோடு மறைத்து விட்டது.

## 2. மருதநாயகத்தின் மூளை

கண்கள் கண்களைக் கவர்ந்து நிற்க, கைவிரல்கள் பரஸ்பரம் ஊடுருவி நெருடியும் வருடியும் சங்கடம் செய்ய, வெளியுலகம் ஒன்றிருக்கிறது என்பதையே அடியோடு மறந்து நின்ற அந்த இருவரின் மயங்கிய நிலையை; அறைச் சாளரத்துக்கு வெளியிலிருந்து வந்த காற்றுதான் உடைக்க முடியவில்லை யென்றால், வாயிற்படிக்கருகே எட்டிப் பார்த்த உருவத்தால் ஏன் முடியவில்லை யென்பது விளக்கத்திற்கும் அப்பாற்பட்ட விந்தையாகவே இருந்தது.



காதலின் நிலைக்கு விளக்கம் எப்பொழுது இருந்திருக்கிறது? மனிதன் ஏற்பட்ட நாளாய் எந்த அறிஞனும் விளக்கம் தர முடியாத ஒரே ஒரு விசித்திரம் இன்ப நேரத்தின் இந்திர ஜாலமல்லவா? அப்படி அறிஞர்களாலேயே முடியாத அத்தகைய விந்தையைக் கண்டு, உள்புறத்தை எட்டிப் பார்த்த அந்த மூன்றாவது உருவத்தின் குறுகுறுத்த கண்கள் திருதிருவென்று விழித்ததில் வியப்பில்லையல்லவா?

மூன்றடி உயரத்துக்குச் சற்றுக் குறைவாகவே யிருந்த அந்தச் சின்னஞ்சிறு உருவம், உள்ளே விரிந்த காட்சியை வாயிற்படிக்கு வெளியில் இருந்து உடலைச் சாய்த்து தலையை மட்டும் உள்ளுக்கு நீட்டி விழித்து விழித்துச் சில விநாடிகள் தான் பார்த்தது. பிறகு கால் தண்டைகள் இரண்டும் ஜல்ஜல் என்று ஒலிக்க நடந்து, வாயில் சூப்பியிருந்த கட்டை விரலை நீக்கி, "அப்பா! அப்பா!" என்று கோபத்துடன் அழைக்கவும் செய்தது. அந்தத் தண்டை ஒலி கேட்டும் கூடத் தன் மனைவியின் கைகளை விடாமல் விஷமம் செய்து கொண்டே வாயிற்படியை நோக்கிய சங்கர், "யாரது?" என்று செல்லமாகக் கேட்டான். ஜெயம் அவனையும் பார்த்துத் தன் செல்லக் குழந்தையையும் பார்த்தாள். பிறகு சொன்னாள், "ருசு!" என்று.

சங்கர் குழந்தையை விழுங்கி விடுபவன் போல் பார்த்துக் கொண்டே, "என்ன! ருசுவா?" என்று கேட்டான்.

"ஆம்! ருசுதான்." ஜெயத்தின் சொற்களில் விஷமம் இருந்தது.

"என்ன ருசு?"

"சற்று முன்பு கேட்டீர்களே?"

"என்ன கேட்டேன்?"

"உங்களை என் புருஷன் என்று ஊருக்குத் தமுக்கடிக்கிறேனா என்று?"

"ஆமாம், கேட்டேன்."

"ஒரு தமுக்கைக் காட்டியாயிற்று. இது இன்னொரு தமுக்கு. இது ஏற்பட்டு வருஷம் ஆறாகிறது" என்று, தங்கள் பெண் குழந்தையைக் காட்டிச் சிரித்தாள் ஜெயம்.

சங்கர் அவள் விரல்களை விட்டு மீண்டும் தோள்களைப் பிடித்துக் கொண்டு, "கணக்குத் தப்பு; வருஷம் ஐந்துதான்," என்றான்.

"இல்லை! ஆறு" என்றாள் ஜெயம்.

"மதுவுக்கு வயது ஆறா?"

"இல்லை! ஐந்துதான்."

"அப்படியானால்..."

"மதுவுக்கு வயது ஐந்துதான், இருந்தாலும்..." என்ற ஜெயம் முகத்தை வேறுபுறம் திருப்பிக் கொண்டாள்.

"என்ன இருந்தாலும்?"

"முன்பு ஒருவருஷம்கூட்டிக்கொள்ளவேண்டாமா?..." என்ற ஜெயம், அவனைப் பார்க்கவேயில்லை.

"ஆம் ஆம், வேண்டும்! வேண்டும்?" என்ற சங்கரன் அவளை அதிகமாக அழுத்திப் பிடித்து, "கணக்கு ரொம்ப சரி, ரொம்ப சரி" என்று கூவினான்.

அவன் கூச்சலையும், அவன் ஜெயத்தின் தோளை அழுத்திப் பிடித்ததையும் கண்ட மது, மிகுந்த கோபத்துடன் கலீர் கலீரென்று வேகமாக நடந்து வந்து, சங்கரின் வேட்டியைப் பிடித்து இழுத்து, "விடுஅம்மாவை! விடு" என்று மிரட்டி இளம் கையை முஷ்டியாகப் பிடித்து அவன் காலில் இரண்டு குத்தும் விட்டது.

அந்தக் குத்துக்களைப் பெற்றதால் ஏற்கெனவே இருந்த சொர்க்கம் பன்மடங்காகவே ஜெயத்தின் தோளை



விடாமலே கீழே குனிந்து மதுவைப் பார்த்தான் சங்கர். மதுவின் மதுர இதழ்கள் ரோஜா மொட்டுகளைப் போல் கோபத்தால் குவிந்து நின்றன. அப்பொழுதுதான் அது சாதம் சாப்பிட்டு விட்டு வந்திருந்ததால் அதன் உதடுகளில் மேல்பாகம் பூராவும் நெய் கலந்த ரசச் சோறு படிந்து கிடந்தது. அதன் குண்டுக் கன்னங்களிலும் இரண்டொரு பருக்கைகள் சுவரிலிருந்த 'வால் லாம்ப்'பின் ஒளியில் பளபளத்தன. அதன் கரிய முரட்டு மயிரை நாலா பக்கமும் சேர்த்தெடுத்து உச்சித் தலையில் கட்டியிருந்தபடியால் கொண்டை பார்ப்பதற்கு மிக அழகாயிருந்தது. ஜட்டி அமுலுக்கு வராத காலமாகையால், அதன் இடையில் கட்டியிருந்த சிட்டி நாடாப் பாவாடை சற்றே முடிச்சவிழ்ந்து ஒரு பக்கம் சரிந்து விட்டபடியால், அதை இடது கையால் கஷ்டப்பட்டுப் பிடித்துக் கொண்டு நின்றது மது. தட்டையாகவும் கூர்சாகவும் லேசாக நீண்டிருந்த சின்னஞ்சிறு மூகவாய்க்கட்டை அதன் அழகை எத்தனையோ மடங்கு உயர்த்திக் காட்டியது. பாவாடைக்கு மேல் சொக்காய் எதுவும் போடாததால், அதன் வெள்ளை உடம்பும் கொழு கொழுவென்ற தொந்தியும் முத்தமிடத் தூண்டின. பாதிச் சாப்பாட்டை விட்டு வந்ததால், வலக்கையில் இருந்த சாதப் பூச்சுக்கூட அதன் அழகை அதிகப்படுத்தியது.

மதுவின் அழகைப் பருகியதாலும் அதன் குண்டுக் கையின் குத்துக்களைப் பெற்றதாலும் இன்பத்தின் எல்லையைத் தொட்டுவிட்ட சங்கர், தன் மனைவியை விட்டுத் தரையில் உட்கார்ந்து தன் குழந்தையின் தோள்களைப் பிடித்துக் கொண்டான். பிறகு, "மதுக் கண்ணு!" என்று அழைக்கவும் செய்தான்.

"உன்னோட நான் பேசமாட்டேன்," என்றது மது.

"ஏன்," என்று கேட்டான் சங்கரன், குரலில், ஆசை வழிய.

''நீதான் அம்மாவைக் கிள்ளினையே?'' என்றது மது, அப்பொழுதும் கோபத்தை விடாமல்.

"இல்லையே!"

"பொய் சொல்றே."

"இல்லைம்மா."

"தோளைப் பிடிச்சு கிள்ளலே நீ?"

"கிள்ளலைம்மா?"

''பின்னே தோளைப் பிடிச்சு என்ன பண்ணினே?"

இதற்கு என்ன பதில் சொல்வதென்று தெரியாத சங்கர் சில விநாடிகள் விழித்தான். 'ஜெயத்தின் தோளை வலிக்கப் பிடிப்பதற்கும் கிள்ளுவதற்கும் வித்தியாசமுண்டு அடே! அப்படியே கிள்ளினாலும்...' என்று எண்ணிய சங்கர் பதில் சொல்லத் தெரியாமல் அண்ணாந்து ஜெயத்தைப் பார்த்தான்.

ஜெயத்தின் முகத்தில் ஆனந்தம் பரவிக் கிடந்தது. இதழ்களில் விரவிய புன்முறுவல் அவனைக் கேலி செய்தது. அவளிடமிருந்து உதவி எதுவும் கிடைக்காமல் போனதாலும் பதில் சொல்ல வழியில்லாதபடியாலும், சங்கர் மதுவை அணைத்து அதன் இடக் கன்னத்தில் முத்தமிட்டான். ''எங்கே? எனக்கொரு முத்தம்'' என்று பதிலுக்கும் கேட்டான்.

மது தன் சாத வாயுடன் அவன் கன்னத்தில் முத்தம் கொடுத்து, அவன் கன்னத்திலும் நெய்யை லேசாகத் தடவி விட்டது. அத்துடன் சொல்லவும் செய்தது, "நீ அம்மாவுக்குக் கொடுக்க மாட்டியே?" என்று.

"எதை அம்மா?'' என்றான் சங்கர்.

"இப்போ எனக்குக் கொடுத்தயே அதை!" என்றது மது.



சங்கர் கலகலவென நகைத்தான். "என்ன சொல்லட்டும் ஜெயம்?" என்றும் கேட்டான். பதிலுக்கு ஜெயம் பொய்க் கோபத்தை நிரம்பக் காட்டினாள்; "அப்பாவும் பெண்ணும் பேசுகிறது ரொம்ப அழகு!" என்று கடிந்து கொண்ட ஜெயம், "ஏண்டி கிண்ணியிலே இருந்த சாதத்தை முழுக்கச் சாப்பிட்டியா, இல்லையா?" என்றாள் குழந்தையை நோக்கி.

"இல்லே." அலட்சியமாக வந்தது மதுவின் பதில்.

"அதுக்குள்ளே இங்கே என்ன அவசரம் கொட்டிக்கிறது?" என்றாள் ஜெயம்.

"அப்பா வர்லே?"

"வந்தா என்ன?"

"பாக்க வந்தேன்."

"பார்த்தாச்சோ இல்லையோ?"

"ஆச்சு."

"பின்னே போ! சாப்பிடு!"

"மாட்டேன்!" என்று சொன்னதன்றி, தனது நாரதர் கொண்டைத் தலையை இருமுறை அப்படியும் இப்படியும் ஆட்டவும் செய்தது.

ஜெயம் கோபத்துடன் கணவனைப் பார்த்தாள். "நீங்களாவது வரப்போகிறீர்களா இல்லையா?" என்றாள் கடுமையுடன்.

"மாட்டேன்." மதுவைப் போலவே தலையைத் திடமாக ஆட்டினான் சங்கர்.

ஜெயம் அந்தப் பிடிவாதக்காரர்கள் இருவரையும் பார்த்து உள்ளூரப் பூரித்தாள். இருப்பினும் அதை வெளிக்குக் காட்டாமல், "உங்கள் இரண்டு பிடிவாதத்துக்கும் என்னால் சரிப்படாது," என்றாள் ஜெயம்.

"சரிப்படாமல் போனால் போயேன்'' என்றான் சங்கர்.

"ஆமாம் போயேன்" என்றது மது.

ஜெயம் சங்கரை நோக்கிக் கோப விழி விழித்தாள். "நீங்கள் வரப்போகிறீர்களா இல்லையா ?'' என்று கேட்டாள், கோபம் குரலிலும் ஒலிக்க.

"ஊஹூம்."

"அப்புறம் என்மேல் கோபித்துப் பயனில்லை."

"எதற்கு ?"

ஜெயம் தன் உதடுகளை மெல்ல மடித்தாள் அழகாக. "வெந்நீர் ஆறிப் போகிறது,'' என்றாள் மெல்ல.

சங்கர் குழந்தையையும் தூக்கிக் கொண்டு துள்ளி எழுந்தான். ஏதோ புது சொர்க்கம் ஒன்றை ஜெயத்தின் பார்வையும் சொற்களும் அவன் சிந்தனைக் கண்கள் முன்பு உதயமாக்கியிருக்க வேண்டும். "இதையேன் முன்னாடியே சொல்லவில்லை ?" என்று கேட்டுக் கொண்டு, அறையை விட்டு நடந்தான். ஜெயம் அவனைத் தொடர்ந்து நடந்து, "மது, இப்படி வா" என்று கையை நீட்டினாள். மது வர மறுத்தது.

"நாழியாச்சு வாம்மா! அப்பா எண்ணெய் தேய்ச்சுக்க வேண்டாம் ?" என்றாள் ஜெயம்.

இதைக் கேட்ட மது, "நீ தேய்க்கக் கூடாது" என்றது.

ஜெயம் சங்கரைப் பார்த்துக் கொண்டே குழந்தையையும் பார்த்துக் கேட்டாள்: "பின் உங்க அப்பாவுக்கு யார் தேய்ப்பார்கள் ?" என்று.

"நான்தான் தேய்ப்பேன்," என்றது மது.

"உன் கையெல்லாம் பத்தாயிருக்கம்மா,'' என்று சங்கர் கெஞ்சினான்.



"கழுவிக்கிறேன்,'' என்றது மது.

"இன்னிக்கு ஒரு நாள் அம்மா தேய்க்கட்டும் கண்ணு" என்று மீண்டும் கெஞ்சினான் சங்கர்.

"இப்படித்தான் நீ எப்பவும் சொல்றே," என்றது மது.

"அதற்குத்தான் நான் எப்பவும் சொல்றது..." என்று குறுக்கே புகுந்தாள் ஜெயம்.

"என்ன சொல்லி விட்டாய் எப்பவும் ?''

"அவரவர் வேலைகளை அவரவர்களே செய்து கொள்வது நல்லதென்று."

"உபதேசம் வேண்டாம்."

"நான் இப்பொழுது உபதேசம் பண்ணி என்ன பயன்? ஆரம்ப முதலே கெட்ட பழக்கம் உங்களுக்கு ?"

"என்ன கெட்ட பழக்கம் ?"

"இருந்த வரையில் உங்கம்மா எண்ணெய் தேய்த்து விட்டார்கள். அடுத்தபடி நான் அகப்பட்டுக் கொண்டேன்."

"இதெல்லாம் நீ ஒப்புக்கொண்டது தானே ?"

"எப்போது ?"

"நலங்கிட்டு நாலு பேர் முன்னிலையில் எண்ணெய் தேய்க்கவில்லை ?"

"அது கல்யாணத்தின் போது ; சம்பிரதாயம்."

"நான் சம்பிரதாயத்தைக் கடைபிடிப்பவன். பழைய பண்பாடு எனக்குப் பிடிக்கும்," என்று மார்தட்டினான் சங்கர்.

"பிடிக்கும், பிடிக்கும். சௌகரியமானதுக்கெல்லாம் சம்பிரதாயம் பிடிக்கும்," என்ற ஜெயம், மதுவை அவனிட மிருந்து பலவந்தமாக வாங்கிக் கொண்டு, சமையலறைக் குச் சென்று அதைச் சாப்பிடச் சொல்லி உட்கார வைத்து

விட்டு, வால் கிண்ணத்துடன் எண்ணெயை எடுத்துக் கொண்டு, வெந்நீர் உள்ளுக்கெதிரிலுள்ள தாழ்வாரத்துக்கு வந்தாள். அதற்குள், வேஷ்டியைக் களைந்து வைத்து விட்டுத் துண்டை உடுத்துக் கொண்டு பத்மாசனம் போட்டுக் கொண்டு அர்ஜுன சந்நியாசிபோல் உட்கார்ந்திருந்த சங்கருக்கு முன்பு 'டக்'கென்று ஓசைப்படும்படியாக வால்கிண்ணத்தை வைத்த ஜெயம், இரண்டு கரண்டியாக முட்டை எண்ணெயை எடுத்து வலது கையில் ஊற்றிக் கொண்டு பிறகு இரண்டு கைகளிலும் அதைப் பங்கிட்டுக் கொண்டு, அவன் தலையில் மெள்ளத் தேய்த்தாள்.

சங்கர் சொர்க்கத்திலிருந்தான்! எண்ணெய் படாதிருப்பதற்காக, அவள் புடவையைத் தூக்கி இடுப்பில் செருகியிருந்ததால், முழங்கால்களுக்கு மேல் இரண்டங்குலமே தெரிந்தவெண்ணிற அழகுகள் அவனை என்னவோ செய்தன. "உம் ஜாக்கிரதை," என்று எச்சரிப்பவைபோல் அவன் காதுகளில் ஒலித்த ஜெயத்தின் கை வளையல்கள், பெரிய வித்வான் யாரோ மிக நாசூக்காகக் கஞ்சிரா வாசித்து, காசுகளின் நாதத்தைஎழுப்புவதுபோலிருந்தது. அடிக்கடி நிற்காமல் விழுந்த புடவையை அவள் தனது வலக்கை முன் பகுதியால் தூக்கித் தூக்கித் தள்ளி விட்டுக் கொண்டதுகூட இன்பமாயிருந்தது அவனுக்கு. இதன் நடுவே மெள்ள அவன் எண்ணெயின் ஒரு சொட்டை எடுத்து அவள் கன்னத்தில் தடவினான். "உம்! என்ன இது!" என்று சீறினாள் ஜெயம் பதிலுக்கு.

சங்கர் சிரித்தான்.

"இதோ பாருங்கள், ஏதாவது விஷமம் செய்தால் நான் இப்படியே விட்டு விட்டுப் போய் விடுவேன்" என்றாள் ஜெயம்.

"இல்லை, இல்லை" என்று மன்னிப்புக் கேட்டுக் கொண்ட சங்கரனுக்குத் தலையில் எண்ணெய் தேய்த்து விட்டு, "உம்! போய்ச் சீக்கிரம் குளித்துவிட்டு



வாருங்கள்," என்று அதிகாரத்துடன் உத்தரவும் போட்டு விட்டு, உள்ளே சென்றாள் ஜெயலக்ஷ்மி.

அவள் சென்ற பின்பு சங்கர் அவசர அவசரமாக உடம்புக்கு எண்ணெயைத் தடவி நீராடி முடித்தான். அவன் நீராடியதும் வேஷ்டியுடனும் துண்டுடனும் காத்திருந்தாள் ஜெயம். அவன் தலை துவட்டி வேஷ்டி உடுத்து விபூதி பூசி ஆண்டவனை நினைத்துச் சமையலறையில் நுழைந்ததும் இலைபோட்டுத் தயாராயிருந்தது. அவன் உணவருந்திவிட்டு மதுவையும் தூக்கிக் கொண்டு காமிரா உள்ளுக்குள் வந்து அதைப் படுக்கையில் படுக்க வைத்துத் தட்டித் தூங்க வைப்பதற்கும், ஜெயம் உணவருந்தி அடுப்பங்கரை வேலையை முடித்துக்கொண்டு வருவதற்கும் சரியாயிருந்தது.

அந்தக் காமிரா அறையில் ஓர் அலமாரியைத் தவிர இரண்டு விசுபலகைகள் மட்டுமே இருந்தன. அதிக வசதிகள் இல்லாததால், அறையிலிருந்த ஒரே ஒரு கிருஷ்ணன் பொம்மையை அறை ஜன்னலிலேயே வைத்திருந்தாள் ஜெயம். விசுபலகையிலிருந்த மெத்தை, வருஷம் ஆறு ஆகிவிட்டதால் பல இடங்களில் மேல் சாட்டின் கிழிந்து உள்ளேயிருந்த காடாவைக் காட்டிக் கொண்டிருந்தது. மொத்தமிருந்த இரண்டே தலையணிகளின் கதியும் அப்படித்தானிருந்தன. இந்த மெத்தையில் படுத்துக் கொண்டிருந்த சங்கரை அணுகி வந்த ஜெயம் விசுபலகையின் ஓரத்தில் உட்கார்ந்து கொண்டாள். அந்த விசுபலகையும் கிழிந்த மெத்தையும் பேசமுடியுமானால் அந்தத் தம்பதிகளைப் பற்றிய ஆனந்தக் கதைகளை ஆயிரமாயிரம் சொல்லும். அத்தகைய இணையற்ற ஆனந்தக் கதைக்கு மீண்டும் அடிகோலும் சிந்தனைகளை அந்த இருவரும் அன்றும் தீட்டிக் கொண்டனர்.

அவர்கள் மட்டுமல்ல சிந்தனையிலிறங்கியது அன்றைய இரவில். அந்த வீட்டிலிருந்து நான்கு வீடுகளுக்கு அப்பா

விருந்த வீட்டில் படுத்துக் கிடந்த மருதநாயகம் தம்பதிகளும் அந்த ஆனந்த வேளையில்தான் சிந்தனையில் இறங்கினர். அந்தச் சிந்தனையில் பிறந்தது கருத்து ஒன்று! லேசுப்பட்ட கருத்தல்ல அது. மருதநாயகத்தின் மூளையில் உதித்த யுக்தி எப்படி லேசாகிவிடும்? யாரைத்தான் பாதிக்காமல் விடும்? அப்படி யாரையும் பாதிக்காமல் விட்டால் மருதநாயகத்தின் மூளைக்குத்தான் என்ன மதிப்பு!

## 3. தூண்டில் வீச்சு

கருத்தின் கதையே ஒரு தனிக்கதை. அது, முளைக்கும் இடத்தில்தான் விளைவு ஏற்பட வேண்டுமென்பதில்லை. எங்கோ முளைக்கும் ஒரு கருத்து வேறு ஏதோ ஓர் இடத்துக்குப் பலனைக் கொடுப்பது சர்வ சகஜம். பலன் சில வேளைகளில் சில பேருக்கு நல்லதாக இருப்பதும் உண்டு. ஆனால் மருதநாயகத்தின் மூளையில் முளைத்த கருத்து, சங்கருக்கு மட்டும் பெரும் தீமையாகவே விளைந்தது. அப்படித் தீமையை விளைவிக்க வேண்டுமென்ற எண்ணம் மருதநாயகத்துக்கு இல்லைதான். ஏதோ பொது நன்மையை முன்னிட்டு அவர் செய்த அந்த முடிவு, சங்கரை அத்தனை தூரம் பாதிக்கும் என்பதை, அது தோன்றிய சமயத்தில் மருதநாயகம் எள்ளளவும் நினைக்கவில்லை.

மருதநாயகமென்ன, சங்கரும் நினைக்கவில்லை. உலகத்தையே அந்த இரவில் மறந்துவிட்ட சங்கர், போயும் போயும் மருதநாயகத்தைப் பற்றியும் அவர் என்ன நினைப்பார் என்பதைப் பற்றியுமா நினைத்துக் கொண்டிருப்பான்?

இரவின் அந்த ஆனந்த வேளையில் அந்த நினைப்புக்கு இடம்தானேது? இருந்த இடமும், அருகே கிடந்த



குழந்தையும், அவன் எதிர்பார்த்துக் கொண்டிருந்த ஏந்திழையும், வேறெந்த நினைப்புக்கும் இடம் கொடுக்காததால், சொல்லவொண்ணா ஆனந்தத்துடன் காமிரா உள்ளின் அந்த விசுபலகையில் படுத்துக் கிடந்தான் சங்கர் — உணவருந்தி மதுவைத் தூக்கிக்கொண்டு வந்த சங்கர், காமிரா உள்ளுக்கு வந்ததும் விசுபலகை ஓரத்திலிருந்த மெத்தையைப் பிரித்து, மேல் துண்டால் மெத்தையைத் தட்டி, தலையணைகளையும் சரியாக வைத்தான்.

அந்தக் காமிரா உள் அப்படியொன்றும் பிரமாதமானதல்ல. காட்டு மரத்தால் செய்யப்பட்ட விசுபலகை எத்தனை விமரிசையோ, அத்தனை விமரிசைதான் உள்ளின் சுவரணையும். சிறுவயல் பஞ்சாயத்தின் மற்ற வீடுகளைப் போலவே சங்கர் இருந்த ஓட்டு வீட்டின் சுவர்கள் மண்ணாலேயே கட்டப்பட்டிருந்ததால், அடிக்கடி காமிரா உள்ளின் பல இடங்களில் கறையான் நீள நீளமாகப் பிடித்ததன்றிச் சில வேளைகளில் அவை மேலிருந்து உதிருவதும் உண்டு. ஓடுகளைத் தாங்கி நின்ற கூரையின் உத்திரங்களுக்குக் கறையான் மட்டுமல்ல இருப்பிடம்; வெய்யில் காலங்களில் தேள் குட்டிகளும் நெளிந்து விழுந்து, சங்கரின் வேட்டியிலிருந்தும் ஜெயத்தின் துடைப்பத்திலிருந்தும் தப்பித்துக் கொள்ள விடுவிடுவென்று மூலைகளுக்கு ஓடுவதும் வழக்கம். அப்படித் தேள் விழுந்த மறுநாள், ஜெயம் பிள்ளையார் கோவிலுக்கு எண்ணெய் போடத் தவறமாட்டாள். என்ன காரணமோ ஏது காரணமோ, எண்ணெய் போட்ட பிறகு சில நாட்களுக்காவது தேள் விழுவதில்லை. அவ்வூரிலிருந்த சில முற்போக்காளர் பிள்ளையாருக்கு அப்படியெல்லாம் சக்தி எதுவும் கிடையாதென்று எத்தனையோ வலியுறுத்தியும், ஜெயமும் சரி, அந்த ஊரிலுள்ள மற்றப் பெண்களும் சரி, அதைக் காதில் வாங்கிக் கொள்வதில்லை. வாங்கிக் கொள்ளாததற்குக் காரணமுமிருந்தது. அவர்களில் பிரதான புருஷரும் பஞ்சாயத்துத் தலைவருமான மருதநாயகத்தின் மனைவியே பிள்ளையார் கோவிலுக்கு

விளக்குப் போட்டுக் கணவனைப் பகிரங்கமாக அவமானப்படுத்திக் கொண்டிருந்ததால், அந்த ஊரிலிருந்த மற்றவர்களுக்கு, மருதநாயகத்தின் வார்த்தையிலும் பிரசங்கத்திலும் நம்பிக்கையில்லாதிருந்தது. தவிர, மருதநாயகத்தின் குழந்தையொன்றுக்குக் 'காற்று தோஷம்' ஏற்பட்டபோது, பிள்ளையார் கோவில் பூசாரி, அவர் வீட்டுக்குச் சென்று வேப்பிலை அடித்துவிட்டு வந்ததும், திருவயல் மக்களுக்கு அவர்மீது ஏற்கனவேயிருந்த அவநம்பிக்கை அதிகமாயிற்று. இருப்பினும், மருதநாயகத்தை எதிர்த்து, அந்தக் கிராமவாசிகள் யாரும் ஒரு வார்த்தை கூடப் பேச மறுத்தார்கள். மருதநாயகத்தின் பெரிய உடலும் பயங்கர மீசையும் மக்களைச் சற்று எட்டவே வைத்திருந்தன. இப்படி எல்லோரும் பயந்த மருதநாயகத்திடம் அவர் மனைவியும் உத்திரத்துத் தேள்களும் பயப்படாததால், இருவர் கொடுமைக்கும் பல சமயங்களில் மருதநாயகம் ஆளாகியிருந்தார்.

அப்படி மருதநாயகத்தையும் கொடுமைப்படுத்திய தேள் வர்க்கத்தின் ஒரு பிரதிநிதி அந்த இரவிலும் காமிரா உள்ளின் பூவரச உத்திரத்தின்மீது போய்க் கொண்டிருந்ததைப் பற்றி அறியாமலே, படுக்கையை விரித்துத் தலையணைகளைத் திருத்தித் தனது அருமந்தக் குழந்தையை நட்ட நடுவில் படுக்கவைத்து, அதன் பக்கத்தில் தானும் படுத்துக்கொண்ட சங்கர், மிக இன்பமாக மெல்லிய குரலில் பாடவே, மெள்ள மெள்ள மதுவும் தூங்கியது. அது தூங்கி அரை மணி நேரமாகியும் ஜெயம் வராததைக் கண்ட சங்கர், அவஸ்தைப்பட்டுப் படுக்கையில் நெளிந்தான். அடுப்பறைக்கும் புழக்கடைத் தாவாரத்துக்குமாக அவள் போய் வந்து கொண்டிருந்ததை அவள் மெட்டிச் சத்தம் உணர்த்தவே, 'இத்தனை நேரம் என்ன செய்கிறாள்?' என்று கோபமும் எழுந்தது அவன் இதயத்தில். ஆனால், அந்தக் கோபத்தின் ஜ்வாலைதான் எத்தனை சக்தியற்றது! ஜெயம் வேலையை முடித்துக்கொண்டு பால்



செம்புடன் உள்ளே நுழைந்ததும், அந்தக் கோபத்தை அவள் புன்சிரிப்பு ஒரே விநாடியில் அணைத்து விட்டது.

படுக்கையில் கிடந்த கணவன் முகத்தைப் பார்த்ததுமே அவன் உள்ளத்தே பொங்கிக் கொண்டிருந்த கோபத்தைப் புரிந்து கொண்ட ஜெயம், அவனை நோக்கி விஷமப் புன்முறுவல் செய்தாள். கோபத்தின் காரணம் அவளுக்கு நன்றாகப் புரிந்திருந்ததால், "ஆண்களுக்குத்தான் எத்தனை அவசரம்?" என்று தனக்குள்ளேயே கேட்டுச் சிரித்துக்கொண்ட ஜெயம், பால் செம்பை ஜன்னலில் வைத்துவிட்டுக் கீழே தரையைத் தட்டிவிட்டுப் பாயொன்றை எடுத்துப் போட்டாள்.

மனைவியின் புன்முறுவலைக் கண்டதும் அணைந்த சினம், அவள் பாயைப் போடத் துவங்கியதும் மீண்டும் உதயமாகவே, "எதற்குப் பாய்?" என்று கடுமையாகக் கேட்டான் சங்கர்.

"படுக்கத்தான்" என்று அலட்சியமாகச் சொன்ன ஜெயம், "பால் சாப்பிடுகிறீர்களா?" என்று, வேறு திசையில் பேச்சைத் திருப்பினாள்.

ஆனால் கொக்குக்கு ஒன்றே மதியென்றிருந்த சங்கர், "பால் வேண்டாம்" என்று கடுப்புடன் சொன்னான்.

"ஏன்?" என்று கேட்டாள் ஜெயம், காரணம் தெரிந்திருந்தும், தெரியாதவள் போல்.

"உடம்பு ஜுரம் வரும் போலிருக்கிறது" என்று சொன்னான் சங்கர்.

அது சுத்தப் பொய்யென்பது ஜெயத்துக்குத் தெரிந்திருந்தபடியால், "அப்படியானால் எண்ணெயைத் தேய்த்துக்கொள்வானேன்?" என்று கடிந்து கொண்டாள்.

"உன்னை யார் வெந்நீர் போட்டு வைக்கச் சொன்னது?" என்று சீறினான் சங்கர், அர்த்தமில்லாமல்.

"நீங்கள்தான்."

"தலையில் எண்ணெய் வைத்தபோதுகூடச் சூடு தெரிய வில்லையா உன் கைக்கு?"

"இல்லை, தெரியவில்லையே!"

"அப்படியானால் நான் சொல்கிறது பொய்யா?"

"நீங்கள் எங்கே பொய் சொல்லப் போகிறீர்கள்?"

"வேண்டுமானால் தலையைத் தொட்டுப் பார். வலி அதிகமாய் இருக்கிறது. கண்ணும் எரிகிற மாதிரி இருக் கிறது."

கண்ணும் எரியவில்லை, ஒரு மண்ணும் எரியவில்லை யென்பது நன்றாகத் தெரிந்திருந்தது ஜெயத்துக்கு. இருப் பினும், பாயை விரித்துவிட்டு விசுபலகையின் அருகில் வந்து, சங்கரின் நெற்றியில் தளிர்க் கரத்தை வைத்தாள். அவள் கையை சட்டென்று பிடித்துக்கொண்ட சங்கர், "அங்கேயில்லை, இங்கே வலிக்கிறது," என்று தன் வலது பொட்டில் வைத்துக் காட்டினான். அத்துடன், "ஏன் நிற்கிறாய்? உட்கார்ந்து கொண்டு பிடி" என்று உபசாரம் செய்தான்.

"வேண்டாம் வேண்டாம். நின்று கொண்டே பிடிக் கிறேன்" என்றாள் ஜெயம் உள்ளூர நகைத்துக் கொண்டு.

அவன் அவள் இடையைப் பிடித்துப் பலவந்தமாக விசுபலகையின் ஓரத்தில் உட்கார வைத்தான். மெள்ள அவனிஷ்டப்படி உட்கார்ந்த ஜெயம், அவன் தலையை மீண்டும் மீண்டும் அமுக்கினாள். தலைவலி சிறிதும் இல்லாதிருந்தும், அவள் பிடித்ததை நிறுத்தச் சொல் லாத சங்கர், "இப்பொழுது எப்படியிருக்கிறது?" என்றான்.

"பிடிப்பது நான், நீங்களல்லவா சொல்ல வேண்டும்?" என்றாள் ஜெயம்.



"வலியைச் சொல்லவில்லை...!"

"வேறு எதைச் சொல்கிறீர்கள்?"

"சூட்டை."

"சூடு ஏறித்தான் இருக்கிறது."

"நான் சொன்னது சரியாகப் போய்விட்டதா?"

"ஆம் போய்விட்டது."

சிறிது நேரம் சங்கர் மௌனமாயிருந்தான். பிறகு மெள்ள, "ஜெயம்," என்று அழைத்தான்.

அந்த அழைப்பிலிருந்த கொள்ளை அன்பை ஜெயம் உணர்ந்தாள். அவள் உள்ளத்திலும் அன்பு பொங்கி வழிந்து கொண்டிருந்தாலும், அதைக் குரலில் காட்டா மலே, "ஏன்?" என்று கேட்டாள் சற்றுக் கடுமையாக.

"மது தூங்கிவிட்டது," என்றான் சங்கர், அவளுக்குத் தெரியாததைச் சொல்பவன் போல.

"ஆமாம்," என்றாள் ஜெயம், அவன் பூர்வ பீடிகைக் குக் காரணத்தை உணர்ந்து கொண்டு.

"அதை எடுத்துப் படுக்கைக் கோடியில் விட்டுவிடு" என்றான் சங்கர்.

"இப்படித்தான் இருக்கட்டுமே?"

"கோடியில் மதுவை விட்டுவிட்டால்."

"உம்."

"நான் நகர்ந்து கொள்வேன்."

"ஏன் நகர வேண்டும்?"

"நீ இப்படியே படுத்துக்கொண்டு இன்னும் சிறிது நேரம் என் தலையைப் பிடிக்கலாம்."

"ஏன் உட்கார்ந்துகொண்டே பிடிக்கிறேனே !"

"எத்தனை நேரம் வேலை செய்திருக்கிறாய் ? அலுப்பாய் இருக்காதா ?"

"ஆகா ! என்ன கருணை ! என்ன கருணை !" என்றாள் ஜெயம்.

சங்கரின் முகத்தில், கோபம் மீண்டும் துளிர்த்தது. "பிடித்தது போதும், விடு" என்று அவள் கையை எடுத்து விட்டுத் திரும்பி, மதுவைப் பார்த்துக்கொண்டு படுத்துக் கொண்டார் சங்கர்.

சில வினாடிகள் சங்கரையும் அவனருகில் படுத்துக் கிடந்த மதுவையும் பார்த்தாள் ஜெயம். பிறகு விசுபலகையிலிருந்து எழுந்து சென்று, சுவரிலிருந்த வால் லாம்பின் திரியை இறக்கி வைத்துவிட்டு, மீண்டும் விசுபலகையிடம் வந்தாள். அவள் முகத்தில் எல்லையில்லா ஆனந்தம் விரிந்து கிடந்தது. கணவன் மீது வளைந்து குனிந்து, அவனை ஒட்டிப் படுத்திருந்த மதுவை விசுபலகைக்கும் சுவருக்குமிடையிலிருந்த கோடிக்கு நகர்த்தினாள். பிறகு பால் செம்பை எடுக்கச் சென்றாள். அவள் திரும்பி வந்ததும், சங்கர் விசுபலகையில் படுக்கையின் நடுவுக்குச் சென்றுவிட்டதைக் கண்டு புன்முறுவல் கொண்டு, பாலைக் குவளையில் ஊற்றி, "இந்தாருங்கள் பால்," என்றாள்.

வேண்டா வெறுப்பாகப் பாலை வாங்கி மடமட வென்று குடித்த சங்கர், மீண்டும் முன்படிப் பிடித்து மெத்தையில் விழுந்தான். இம்முறை அவன் சற்றுத் தள்ளியே விழுந்ததால், தனக்குப் படுக்கையில் நிரம்ப இடம் அளிக்கப்பட்டிருப்பதைக் கண்டு உள்ளூரச் சிரித்துக் கொண்ட ஜெயம், பால் செம்பை வைத்துவிட்டுத் திரும்பி வந்து விசுபலகையில் உட்கார்ந்தாள். அவள் உட்கார்ந்த பின்பும் ஒருக்களித்து அவளுக்கு முதுகைக் காட்டிக்



கொண்டே படுத்திருந்த சங்கரை, அவள் மெள்ளத் தொட்டாள். வீம்பு பிடித்திருந்த அந்தப் புருஷனைத் தன் கையொன்றால் திரும்பவும் செய்தாள்.

"உம்" என்று அலுத்துக் கொள்பவன்போல் பாசாங்கு செய்து கொண்டு, முரட்டுத்தனமாகத் திரும்பிய சங்கரை நோக்கி, ஜெயத்தின் கண்கள் சிரித்தன. அவை மட்டுமல்ல, சாடின் மெத்தையின் கிழிந்த இடங்களிலிருந்த காடாவும் நகைத்தது.

இப்படித்தான், அதேவேளையில் நான்கு வீடுகளுக்கு அப்பால் படுத்திருந்த மருதநாயகமும், பஞ்சணையில் முரட்டுத்தனமாகத் திரும்பிப் பூதாகார சரீரத்துடனும் பெரு மீசையுடனும், எட்டப்பன் வீட்டில் கிடந்த கட்டபொம்மன் போல் பயங்கரமாக மல்லாந்து கிடந்தார். அவர் கருங்காலி மரக்கட்டிலிலிருந்த பட்டுமெத்தை புதிதானதால், அதற்குள்ளிருந்த காடா நகைக்கவில்லை. காடாவின் குணம் மருதநாயகத்தின் மனைவிக்கும் இருந்ததால், அவள் நகைக்காதது மட்டுமல்ல, புன்முறுவல்கூடச் செய்ய மறுத்தாள். அதைக் கூட லட்சியம் செய்யாமல் தன் சிந்தனையில் பிறந்த கருத்தை எடுத்து மனைவியிடம் சொன்னார் மருதநாயகம். அதையும் அவள் சிறிதும் லட்சியம் செய்யாதிருக்கவே வெகுண்ட மருதநாயகம், "நீ எப்பொழுதும் இப்படித்தான். நாளை சங்கரிடம் சொல்கிறேன். அவன் கண்டிப்பாய் ஒப்புக் கொள்வான் பார்," என்றார்.

"அவன் பாட்டுக்காரனோ இல்லையோ !" என்றாள் அவர் மனைவி.

"அதற்கென்ன ?"

"உங்களுக்குச் சரியாய்த் தாளம் தட்டுகிறான். நீங்கள் சொல்கிறதைக் கேட்டு யார் உருப்பட்டான் ?" என்றாள் மருதநாயகத்தின் மனைவி. அந்த வாக்கு வேதவாக்காகுமென்று பகுத்தறிவாளரான மருதநாயகத்துக்குக் கூடப்

புரியவில்லை. காலம் புரிய வைத்தது. காலத்தின் முதல் படியாக, மறுநாள் மருதநாயகம் தனது ஆபீஸ் அறையில் சில முக்கியஸ்தர்களைக் கூட்டினார். அங்கு முதன் முதலாகத் தமது கருத்தை வெளியிட்டார் மருத நாயகம். அதைக் கேட்ட முக்கியஸ்தர்கள் வாயைப் பிளந்தார்கள். அந்தத் திட்டத்தின் துணிவு மற்றவர்களை வியக்க வைத்ததென்றால், சங்கரைப் பெரும் பிரமிப்பில் ஆழ்த்தியது. அப்படிப் பிரமித்த சங்கரைத் தன்னிட மிழுக்கத் தூண்டிலை அந்தக் கூட்டத்தில் வெகு பக்குவமாக வீசினார் மருதநாயகம்.

## 4. தாமோதரத்தின் பலவீனம்

மறுநாள் காலையில், பஞ்சாயத்து ஆபீஸ் அறையில் மருதநாயகம் வெளியிட்ட யோசனையைக் கேட்டதும், சிறுவயல் முக்கியஸ்தர்கள் பெரும் பிரமிப்பை அடைந்தார்களென்றால், அதற்குக் காரணம் இருக்கவே செய்தது. அந்த யோசனை அவர்கள் சிந்தனைக்கு மீறியதாக இருக்கவே, மருதநாயகத்தை திகைத்த கண்கள் நிலைத்த படி அத்தனை பேரும் பார்த்தார்கள். அவர்களில் ஒருவரான சிவக்கொழுந்து, தமது வியப்புக்கு அறிகுறியாக, "ஹாம், ஹாம்," என்று இருமுறை ஹுங்காரத்தைச் சற்றுக் கடுமையாகவே வெளியிட்டதன்றித் தமது கட்டுக் குடுமித் தலையை மகிழ்ச்சியுடன் ஆட்டவும் செய்தார். மருதநாயகத்தின் யோசனை மட்டும் நிறைவேறினால், அது சிறுவயல் கிராமத்தின் மதிப்பை ஆயிரம் மடங்கு உயர்த்திவிடும் என்பதில் சந்தேகமில்லையென்றாலும், அதை நிறைவேற்றுவது அத்தனை சுலபமில்லையென்று, அந்த அறையில் கூடியிருந்த அத்தனை பேருக்கும் தோன்றவே, சக்திக்கு மீறிய கோட்டையை மருதநாயகம் கட்டுவதாக அவர்கள் நினைத்தார்கள். அந்த மனக் கோட்டைக்கு முக்கிய காரணம், மருதநாயகத்துக்குச்



சிறுவயல் கிராமத்திடமிருந்த அபரிமித அன்பே என்பதையும் அவர்கள் அறிந்திருந்தார்களாகையால், பல விநாடிகள் வரை அவர் யோசனைக்குச் சிறிதும் எதிர்ப்புத் தெரிவிக்காமலே உட்கார்ந்திருந்தார்கள்.

மருதநாயகத்திடம் வீண் படாடோபமும் முரட்டுத் தனமும் இருந்தபோதிலும், உண்மையில் அவர் மனம் மிக நல்லதென்பதையும், அந்த பெரிய உருவத்திற்குள் அடங்கியிருந்தது அன்பு நிரம்பிய உள்ளமென்பதையும், சிறுவயல் கிராமத்தைச் சேர்ந்த அனைவரும் உணர்ந்திருந்தார்கள். அவர் சிறுவயல் கிராமத்தை உயிருக்கும் மேலாக நேசித்து வந்ததையும், அதன் அபிவிருத்தியை முன்னிட்டே அவர் சகல பணிகளையும் செய்து வந்திருக்கிறார் என்பதையும், அவ்வூர் மக்கள் உணர்ந்திருந்ததாலேயே, அவரையே மீண்டும் மீண்டும் பஞ்சாயத்துத் தலைவராகத் தேர்ந்தெடுத்தார்கள். அவ்வூர் பஞ்சாயத்துக்கு கிரமப்படி காலா காலத்தில் தேர்தல் நடந்தாலும், அது பெயரளவில்தான் தேர்தலாயிருந்து வந்தது. மருதநாயகம் யார் யாரை ஆதரித்தாரோ, அவரவர்களுக்குத்தான் ஓட்டுக்கள் விழுந்தனவே யொழிய, மற்றவர்கள் தேர்தலில் தலை தூக்கவும் சாத்தியமில்லாதிருந்தது. உள்ளூர அபிப்பிராய பேதங்கள் பலபடி இருந்தாலும், தேர்தல் சம்பந்தப்பட்ட வரை மருதநாயகம் சுயேச்சையாகவே நின்று, கணக்கற்ற முறையில் தேசபக்தர்களை மட்டுமின்றி, தேச விரோதிகளையும் மண்ணைக் கவ்வ வைத்திருந்தாரென்றால், அதற்குக் காரணம் அவருக்கு ஊரின் நலத்திலிருந்த சிரத்தைதான். அவர் தேர்தலில்தான் சுயேச்சையாக இருந்தாரே தவிர, வீட்டில் சுயேச்சை அவருக்குச் சிறிதும் கிடையாதென்பதைச் சிறுவயல் கிராம மக்கள் நன்றாகப் புரிந்து கொண்டிருந்தார்கள். பார்ப்பதற்குப் பயங்கரமாகவும், பொதுவிடங்களில் சிங்கமாகவும் இருந்த மருத நாயகம், வீட்டில் ஆட்டுக்குட்டியாயிருந்தாரென்பதை அனைவரும் அறிந்திருந்தார்கள். அதனால் பலருக்கு லாபமும் கிடைத்திருந்தது. பஞ்சாயத்து யூனியன் ஆபீஸ்

சிப்பந்திகள் கூட, ஏதாவது தவறு செய்து விட்டால், "அம்மா தான் சொன்னாங்க" என்று கூறித் தப்பித்துக் கொள்வது வழக்கமாயிருந்தது.

கோவில், குளம், பூசை, புனஸ்காரம் முதலிய பல விஷயங்களில் மருதநாயகமும் அவர் மனைவியும் மாறுபட்டிருந்தபடியால், அநேக விஷயங்களில் மருதநாயகம் தலைகுனிய வேண்டியிருந்தது. அந்த ஊர்ப் பிள்ளையாரின் மகத்துவத்தை ஒப்புக்கொள்வது பகுத்தறிவுக்கு ஒவ்வாதது என்று மருத நாயகம் கருதி, அந்தக் கோவிலைக் கண்ணால் கூடப் பார்க்காவிட்டாலும், பிள்ளையாரின் சந்தனாபிஷேகத்துக்கு வேண்டிய சகல சாமான்களும் மருதநாயகத்தின் வீட்டிலிருந்து போய்க்கொண்டிருந்தன. தவிர, 'அம்மாவின் உத்தரவு'ப்படி அர்ச்சனையையும் மருதநாயகத்தின் பேரில் பூசாரி செய்து வந்தார். பூசை முடிந்ததும், தட்டில் பிரசாதத்தை வைத்து நல்ல அழுக்குத் துணியால் மூடி, மருதநாயகத்தின் வீட்டுக்குப் பிரசாதம் வரும்போது சில சமயங்களில் வீட்டுத் திண்ணையில் மருத நாயகம் உட்கார்ந்திருந்தாலும், அதைக் கவனிக்காமல் முகத்தை அப்புறம் திருப்பிக் கொள்வார். மருதநாயகத்தைக் கண்டதும் பிரசாதம் கொண்டுவரும் கோவில் பூசாரி சற்றுக் காலை மடித்தும் ஒதுங்கியும் மருதநாயகத்திடம் பயத்தைக் காட்டி, உள்ளே நுழைவதை ஊரார் பலரும் பார்த்திருந்தாலும், அந்தக் கோவில் பூசாரிக்கு அவரிடம் லவலேசமும் பயமில்லை என்பதை அறிந்தேயிருந்தார்கள்.

இப்படி வீட்டிலொரு வாழ்க்கையும், வெளியிலொரு வாழ்க்கையும் மருதநாயகம் நடத்தி வந்தாரானாலும், மருத நாயகம் சிறுவயலை உள்ளூர நேசித்தார். சாயந்திர வேளைகளில் உலாவச் சென்ற சமயங்களில், அந்த ஊர் வயல்களின் செழுமையைக் கண்டு மனம் பூரிப்பார். அந்தக் கிராமத்திற்குப் பின்னாலிருந்த மலையில் புல் பூண்டு ஏதுமின்றி செம்மண்ணும் கல்லுமாக மலை காட்சியளித்த



போதிலும், அதுவும் ரம்மியமாகவே அவர் கண்களுக்குக் காட்சியளித்தது. மருதநாயகம் அந்த ஊர்ப் பெரிய பண்ணைப் பரம்பரையைச் சேர்ந்தவர். அவர்கள் முன்னோர்கள் அந்த ஊரில் கோவில்களைக் கட்டியும் குளங்களை வெட்டியும் அதைச் சிறப்பித்திருந்தார்களென்றால், மருதநாயகமும் அந்த ஊருக்கு ஒரு சினிமாக் கொட்டகையையும், இரண்டொரு ஹோட்டல்களையும், பல டீக்கடைகளையும் அளித்திருந்தார். தவிர ஊரில் உள்ள பையன்களின் அநாகரீகக் குடுமிகளை நீக்கவும், சிகைகளை அழகு செய்யவும், பட்டணத்துச் சலூன்காரர் ஒருவருக்குக் கைசெலவும் கொடுத்து, சிகையலங்கார நிலையம் ஒன்றையும் ஏற்பாடு செய்தார். உண்மையில் அந்த ஊருக்கு எலக்ட்ரிக் லைட்டைக் கொணர்ந்தவரும், பெண்களுக்கென்று தனிப் பள்ளிக்கூடம் ஏற்படுத்தியவருங்கூட, மருதநாயகம் தான்.

இத்தனை சௌகரியங்களை ஊருக்குச் செய்து கொடுத்த மருதநாயகம், தனது தலைமையின் கீழ் இயங்கிய அந்தப் பஞ்சாயத்துக்கு ஒரு கூட்டுறவுப் பண்டக சாலையையும் திறந்திருந்தார். அந்தப் பண்டகசாலையின் ஐந்தாவது ஆண்டு விழாவை எப்படி நடத்தினால் சிறப்பாக இருக்கும் என்று சுமார் ஒரு மாத காலமாகச் சிந்தித்ததன் விளைவாகவே, அந்தப் புதிய யோசனை அவர் புத்தியில் உதித்தது. அதை மற்றவர்களுடன் பங்கிட்டுக் கொள்ளவே, மறுநாள் கூட்டுறவு சங்க டைரக்டர்களை அவர் தமது காரியாலயத்துக்கு அழைத்தார். பஞ்சாயத்துக்கு எப்படித் தமக்கு வேண்டியவர்களைத் தேர்ந்தெடுத்தாரோ, அம்மாதிரியே கூட்டுறவுச் சங்கத்துக்கும் மருதநாயகம் டைரக்டர்களைத் தமது இஷ்டப்படி தேர்ந்தெடுத்திருந்ததால், அவர் சொல்லியனுப்பியவுடன் கூட்டுறவு டைரக்டர்களும் ஊர் முக்கியஸ்தர்களுமான பன்னிரண்டு பேர்கள், அவர் அறைக்கு வந்து சேர்ந்தார்கள். அவர்களில் சங்கரும் ஒருவன்.

அந்தக் கூட்டத்தில் வந்திருந்த மற்றவர்கள் எல்லோரும் பணக்காரர்கள். பஞ்சாயத்து யூனியனில் குமாஸ்தா வேலை பார்த்துக் கொண்டிருந்த சங்கர் ஒருவன்தான் பணவசதி இல்லாதவன். பொருளாதார ஏற்றத்தாழ்வில் தமக்கு நம்பிக்கையில்லை யென்பதை வலியுறுத்த, சொளைபடியில் சங்கரையும் ஒரு டைரக்டராகப் பிடித்துப் போட்டிருந்தார் மருதநாயகம். சங்கரை அவர் தேர்ந்தெடுத்ததற்கு அவனிடம் பணமில்லாதது மட்டும் காரணமல்ல. பல இடங்களில் பஞ்சாயத்துக் குமாஸ்தாக்கள் சங்கம் சேர்ந்து குறைந்தபட்ச வேலை செய்ததல்லாமல், குறைந்தபட்சக் கோரிக்கைகளையும் வெளியிட்டு வந்ததை மருதநாயகம் அடிக்கடி பத்திரிகைகளில் படித்து வந்ததாலும், சங்கர் அம்மாதிரி நடவடிக்கைகளில் சேராத 'நல்ல பிள்ளை' யானதாலும், அவனை டைரக்டராக்கினார் மருதநாயகம்.

இன்னொரு ஒற்றுமையும் தனக்கும் அவனுக்கும் இருந்ததை மருதநாயகம் உணர்ந்திருந்தார். வீட்டில் தான் செலுத்தும் அதிகாரம் எவ்வளவோ அவ்வளவுதான் சங்கராலும் அவன் வீட்டில் செலுத்த முடிகிறதென்பதையும், சங்கருக்குத் தான் வேலை கொடுத்ததாலும், வேலைக்கு வந்த வருஷத்திலேயே சங்கருக்குக் குழந்தை பிறந்ததாலும், அவன் மனைவி போகிறவர் வருகிறவர்களிடமெல்லாம் தமது கைராசியை உயர்த்திச் சொல்லுகிறாளென்பதையும் மருதநாயகம் அறிந்திருந்தார். 'நம்ம சங்கர் யூனியன்லே சேர்றதானாலும் அம்மா உடாதுங்க; ஏதோ மகானுபாவர் வேலை குடுத்தாரு. அவர் வேலை கொடுத்த ராசி எங்களுக்கு ஒண்ணும் குறைச்சலில்லேன்னு அம்மா சொல்லுதுங்க' என்று, பஞ்சாயத்து பியூன் முருகபூபதியும் அவர் காதில் பல முறை போட்டிருந்தான். ஆகவே சங்கர் எப்பொழுதும் தனது ஆள் என்று மருதநாயகம் தீர்மானித்திருந்தார். சங்கரும் அவர் எதிர்பார்த்தபடி வேலை கொடுத்த அவரிடம் மிகுந்த நன்றியுடன் நடந்து கொண்டான்.



சங்கருக்கு சிறுவயல் பூர்வீகமல்ல. அங்கிருந்து பத்து மைல் தூரத்திலிருந்த மண்டங்குடி கிராமத்தைச் சேர்ந்தவன். மிகவும் ஏழைக் குடும்பத்தில் பிறந்தவனாதலால், தகப்பனார் இறந்து நிலபுலனும் சொந்த ஊரில் இல்லாது போகவே, வேலை தேடிச் சிறுவயலுக்கு வந்து சேர்ந்தான். அவன் வந்த சமயத்தில் மருதநாயகம் வீட்டில் இல்லை. வெளியே போயிருந்தபடியால், திண்ணையில் உட்கார்ந்து 'படமுடியா தினித்துயரம் படமுடியாதரசே' என்ற அருட்பாவைப் பல ராகங்களில் மென்மையாக இசைத்துக் கொண்டிருந்தான். அந்த ஒலியும் பக்திச் சுவையும் மருதநாயகத்தின் மனைவியை வெளியே இழுத்தது. வெளியே வந்த மருதநாயகத்தின் மனைவி, "யாரப்பா நீ? பாட்டு வாத்தியாரா? இங்கே அவருக்கு அதெல்லாம் பிடிக்காதே. எங்க வீட்டிலே பாட்டுச் சொல்லிக்கிற குழந்தையுமில்லையே," என்றாள்.

சங்கர், தான் பாட்டு வாத்தியார் அல்லவென்பதையும் எஸ். எஸ். எல். சி. யென்பதையும், பஞ்சாயத்து யூனியனில் வேலையிருப்பதாகக் கேள்விப்பட்டு வந்திருப்பதாகவும், கூறினான். மருதநாயகத்தின் மனைவி அவனைக் காத்திருக்கச் சொல்லி உள்ளே சென்றபின், நீண்ட நேரம் கழித்துவந்த மருதநாயகம், தெருக்கோடியில் வரும்போது திண்ணையில் உட்கார்ந்திருந்த வாலிபனை முறைத்துப் பார்த்துக் கொண்டு வந்தார். வீட்டு வாயிற்படிக்கு அருகில் வந்தும், திண்ணையில் இருந்து கீழே குதித்த அவனை யாரென்றுகூட விசாரிக்காமல் வேகமாக உள்ளே நுழைந்துவிட்டார். அவரோடு டவாலியுடன் வந்த முருகபூபதி மட்டும் சங்கர் வந்த காரணத்தை விசாரித்தான். விசாரித்ததல்லாமல், "இங்கே ஏதய்யா வேலை? ஐயா வீட்டிலே யாரையும் பார்க்க மாட்டாரு; நாளைக்கு ஆபீஸில் வந்து பாரு," என்று யோசனையும் சொன்னான். ஆனால் 'ஐயா' பார்க்கத்தான் பார்த்தார்; அதுவும் சுமுகமாகப் பார்த்தார்; மறுநாள் வேலையும் போட்டுக் கொடுத்தார். இத்தனையும் யாராலென்பது

சங்கருக்கு மட்டுமல்ல, முருகபூபதிக்கும் தெரிந்ததால், சங்கர் வெளியே சென்றபோது, முருகபூபதி செய்த உபசாரமும் குழைந்தை குழைவும் கொஞ்ச நஞ்சமல்ல. வழக்கப்படி சங்கர் நன்றி தெரிவிக்க நீட்டிய வெள்ளி நாலணாவைக் கூட வழக்கத்துக்கு விரோதமாக முருகபூபதி வாங்க மறுத்து விட்டான்.

இப்படி மருதநாயகத்தின் தயவால் துவங்கிய சங்கரின் சிறுவயல் வாழ்க்கை, கடந்த ஐந்து வருஷங்களில் சொர்க்க போகமாகவே இருந்தது. ஆனால் அந்தச் சொர்க்கத்தின் தலையில் இடியை வீசுவதற்காகவே விதித்தாதன் விசிய வித்தென முளைத்தது மருதநாயகத்தின் சிந்தனையில் அந்த யோசனை. அதை மறுநாள் ஆபீஸ் அறையில் ஊர் முக்கியஸ்தர்களின் முன்னிலையில் சமர்ப்பிக்க முற்பட்ட மருதநாயகம் தமது பெரு மீசை உதடுகளை மறைத்து மூடியிருந்ததால் அதை விலக்க முயன்று சண்டைக்குச் சவால் விடும் பயில்வான்போல் இருமுறை தமது நான்கு விரல்களாலும் அதைத் தூக்கி விட்டுக் கொண்டார். பிறகு மெள்ளப் பேச்சைத் துவக்கி, "அடுத்த மாதம் மூன்றாம் தேதி நமது கூட்டுறவுப் பண்டகசாலைக்கு ஐந்து ஆண்டுகள் பூர்த்தியாகி ஆறாவது ஆண்டு துவங்குகிறது," என்று மற்றவர்களைத் தமது பெரு விழிகளை உருட்டி உற்றுப் பார்த்தார்.

அதற்கு யாரும் பதில் சொல்லவில்லை. அந்த அறிவிப்பு வேறு அறிவிப்புகளுக்குப் பூர்வ பீடிகை என்பதை உணர்ந்திருந்த மற்ற முக்கியஸ்தர்கள், ஆடுகள் போல் தலையாட்டினார்கள். "அதைச் சிறப்பாகக் கொண்டாட வேண்டாமா?" என்று பிறந்தது தலைவரின் அடுத்த கேள்வி.

"ஆமாம். அவசியம். சந்தேகமென்ன?" இப்படி எழுந்தன டைரக்டர்களின் குரல்கள்.

"அதற்கு ஒரு பெரிய மனிதரைக் கொண்டுவர வேண்டும்" என்று அறிவித்தார் மருதநாயகம்.



"யார் பெரிய மனிதர்?" என்று மெள்ளக் கேட்டார், தலையில் கட்டுக் குடுமியுடனும் கழுத்தில் ருத்திராக்ஷத்துடனும் பரம வைதிகராகக் காணப்பட்ட சிவக்கொழுந்து.

மருதநாயகம் தமது பெரிய உதடுகளை அகல விரித்து "யாருக்குக் கூட்டம் சேருகிறதோ அவர்தான் பெரிய மனிதர்," என்றார். இதைக் கேட்ட மற்ற டைரக்டர்கள், "உண்மை, வாஸ்தவம், ஆமாங்க," என்று பலபடி ஆமோதித்தார்கள்.

"அதற்குத் தலைமை தாங்க..." என்று துவங்கி வாசகத்தை வேண்டுமென்றே 'சஸ்பென்ஸி'ல் விட்டார் மருதநாயகம், மற்றவர்கள் ஆவலைத் தூண்ட.

அவருக்கெதிரில் உட்கார்ந்திருந்த சாரதி கேட்டார்: "தலைமை தாங்க?" என்று.

பெரு வெடியை எடுத்து அவர்கள் முன்பு வீசினார் மருதநாயகம். அவர் சொன்ன பெயர் அதிர்ச்சியைத் தந்தது அனைவருக்கும். "டைரக்டர் தாமோதரம்" என்ற சொல்லைச் சர்வசாதாரணமாகச் சொன்ன மருதநாயகம், எதிரே உட்கார்ந்திருந்தவர்களின் முகத்தில் கண்ட அதிர்ச்சியைப் பார்த்து திருப்தியடைந்தவராய், முகத்தில் வெற்றிக் குறியுடன் ஆசனத்தில் நன்றாகச் சாய்ந்து கொண்டார்.

சென்னையிலிருந்த பிரபல பாங்கி டைரக்டரும், அரசியல் அரங்கத்திலும், பொருளாதார அரங்கத்திலும் பெரும் புள்ளியும், கவர்னருக்கே உ பார்ட்டி கொடுக்கக் கூடியவருமான தாமோதரத்தை, தஞ்சை, திருச்சி போன்ற பெரிய பெரிய நகரங்களாலேயே அழைக்க முடியாதிருந்த அவரை சிறுவயல் கிராமத்துக்கு, கேவலம் ஒரு சொஸைட்டியின் வருடாந்தர விழாவுக்கு அழைப்பது நடக்கக்கூடிய காரியமாவென்று பன்னிரண்டு டைரக்டர்களும் நினைத்தார்கள். அந்த நினைப்பைச் சொற்களில் வடித்த சாரதி, "அவரைக் கொண்டு வர முடியாதே" என்றார்.

"ஏன் முடியாது ?" என்று மருதநாயகம் கேட்டார்.

"அவர் ரொம்பப் பெரிய மனுஷராச்சே," என்றார் சாரதி.

மருதநாயகம் ஒரு விநாடி சாரதியை ஊன்றிப் பார்த்தார். பிறகு கவட்டுத் தனமாகக் கூறினார். "எந்தப் பெரிய மனிதனுக்கும் ஒரு பலவீனம் உண்டு," என்று.

அவர் சொன்னது மற்றவர்களுக்குப் புரியாததால், அந்தப் பலவீனத்தை விளக்கினார் மருதநாயகம். அந்த விளக்கத்தைக் கேட்டதும், "பிரமாதம் போங்கள். சபாஷ், இங்கேதான் மருதநாயகம் இருக்காரு," என்று பாராட்டுதல்கள் கிளம்பின. சங்கர் ஏதும் பேசவில்லை. பிரமை பிடித்து உட்கார்ந்திருந்தான். தாமோதரத்தின் பலவீனத்தை மருதநாயகம் தொட்டபோது, தன் பலவீனத்தையும் தொட்டுவிட்டார் என்பதை உணர்ந்து கொண்டான் சங்கர். மருதநாயகம் சங்கரைக் கள்ளத்தனமாகப் பார்த்தார். அவர் வீசிய தூண்டிலில் சிக்கினான் சங்கர். மருதநாயகம் தமது வெற்றியை நினைத்து உள்ளூர நகைத்துக் கொண்டார்.

# 5. உருவாகிய புயல்

சென்னையின் பிரபல பாங்கியொன்றின் டைரக்டரும் கவர்னருக்கே விருந்து வைக்கக்கூடிய பிரபலஸ்தரும், சாதாரணமாக யாரும் அணுகக் கூடமுடியாத புள்ளியுமான தாமோதரத்தை, சிறுவயல் கிராமத்துக்கு இழுக்க மருதநாயகம் வகுத்த திட்டத்தைக் கேட்டதும், பஞ்சாயத்து செயலகத்தில் கூடியிருந்த கூட்டுறவுப் பண்டகசாலையின் டைரக்டர்கள் பன்னிருவரும் பிரமித்துப் போனார்களென்றால், அதற்குப் பலமான காரணம் இருக்கவே செய்தது. மருதநாயகம் எந்தக் காரியத்தையும் சாதிக்க வல்லவரென்பதையும், சிறுவயல் கிராமத்தின் மதிப்பை



உயர்த்த வேண்டுமானால் அதற்காக அவர் எந்த முயற்சியையும் மேற்கொண்டு விடுவாரென்பதையும், அப்படி ஒருமுறை ஏதாவதொன்றில் மனத்தை ஊன்றிவிட்டால் அதைச் சாதித்தாலொழியத் தூங்கமாட்டாரென்பதையும் அந்தப் பன்னிரண்டு டைரக்டர்களும் உணர்ந்திருந்தார்களென்றாலும், மருதநாயகத்தின் யுக்தி எந்தனை தூரம் வேலை செய்யுமென்பதைப் பல வருடங்கள் அவருடன் பழகிய பன்னிரண்டு டைரக்டர்களாலேயே புரிந்துகொள்ள முடியவில்லை. மருதநாயகம் தேர்தலில் எப்படியோ, அப்படியேதான் மற்ற விவகாரங்களில் என்பதையும், எந்த அலுவலிலும் ஊருக்கெல்லாம் ஒரு வழியென்றால் அவருக்கு ஒரு குறுக்கு வழி உண்டென்பதையும் அவர்கள் அறிந்திருந்தாலும், பட்டணத்துப் பிரமுகரை 'அமுக்கும்' அளவுக்கு அவருக்கு அத்தகைய சிறந்த குருட்டு யோசனை தோன்றும் என்பதை அவர்கள் யாரும் நினைக்கவேயில்லை. அவர்கள் நினைத்திருக்க முடியாதென்பதை மருதநாயகமும் உணர்ந்திருந்ததால், விஷயத்தை வெகுநாசூக்காக மெள்ள மெள்ள வாழைப் பழத்தில் ஊசி ஏற்றுவது போல் அவர்கள் புத்தியில் செலுத்தினார். ஆகவே, "எந்தப் பெரிய மனிதருக்கும் ஒரு பலவீனம் உண்டு" என்று சொன்னதை அவர் விளக்க முற்பட்டபோது, தமது திட்டத்தைச் சிறிது சிறிதாகவே விளக்கினார்.

"பெரிய மனிதருக்குப் பலவீனமா ?" என்று சாரதி வினவியதும், மருதநாயகம் தமது மீசையை மற்றுமொரு முறை நன்றாகத் தூக்கித் தள்ளிவிட்டு உதடுகளுக்குத் திரை விலக்கி இடங்கொடுத்து, "ஆம் பலவீனந்தான்," என்று கூறித் தலையை ஆட்டினார்.

மருதநாயகத்தின் உள்ளத்திலோடும் எண்ணங்கள் அந்தப் பதிலில் தெளிவாகத் தெரியாததால், "என்ன பலவீனத்தைக் குறிப்பிடுகிறீர்கள் ?" என்று வினவினார் சிவக்கொழுந்து, தமது கழுத்து ருத்திராட்சத்தை விரல்களால் உருட்டிக் கொண்டு.

மருதநாயகம் இந்தக் கேள்விக்குப் பதில் சொல்வதற்குள் இன்னொரு டைரக்டர் கேட்டார்: "பலவீனம் யாருக்கு இல்லை ?" என்று.

"எல்லாருக்கும் ஏதாவது ஒரு பலவீனத்தை ஆண்ட..." என்று சொல்ல ஆரம்பித்த மருதநாயகம், பேச்சைப் பட்டென்று நிறுத்தி, ஏதோ தவறு செய்துவிட்டவர் போல் இருமுறை தலையை ஆட்டி, "ஹஹ்ஹூம்," என்று தொண்டையையும் கனைத்துக் கொண்டு, "இயற்கை அளித்துத்தானிருக்கிறது. ஆனால், அந்தப் பலவீனம் சாதாரண மக்களிடத்திலிருந்தால் அதனால் அவர்களுக்குத் தீங்கு எதுவுமில்லை, பெரிய மனிதர்களிடத்திலிருந்தால் அது அவர்களுக்குப் பாதகம், நமக்கு சாதகம்," என்று கூறினார்.

அவர் என்ன சொல்ல முயல்கிறாரென்பதை மற்றவர்களால் அறிந்து கொள்ள முடியாததால் மேற்கொண்டு மருதநாயகமே விவரிக்கட்டுமென்று அவர்கள் கேள்வி எதுவும் கேட்கவில்லை. ஆகவே, மருதநாயகமே தொடர்ந்து, "பெரிய மனிதர்களுக்கு உள்ள பலவீனத்தைச் சமூக நன்மைக்குப் பயன்படுத்த முயல்வது அறிவாளிகளின் கடமையாகிறது." என்று கூறியதன்றி, அத்தகைய அறிவாளிகளில் தாமும் ஒருவரென்பதைச் சுட்டிக் காட்ட லேசாக நகைக்கவும் செய்தார்.

அதற்கு மேல் பொறுக்காத சாரதி கேட்டார்: "அப்படியென்ன பலவீனம் திரு. தாமோதரத்துக்கு !" என்று.

"தாமோதரம் வெறும் திரு. தாமோதரமல்ல. அவர் ஒரு ராவ்சாகிப் என்பதை நீங்கள் மறக்கக்கூடாது," என்றார் மருதநாயகம்.

"ஆமாம், அவருக்கு அந்தப் பட்டம் உண்டு." என்று ஒப்புக்கொண்டார் சாரதி.



"பிரிட்டிஷ் சர்க்கார் மதிப்புக்குப் பாத்திரமானவராதலால் அந்தப் பட்டம் கிடைத்தது அவருக்கு. பிரிட்டிஷ் சர்க்கார் போனபிறகு எத்தனையோ பேர் பட்டத்தை விட்டும் இவர் மாத்திரம் பட்டத்தை விடாமல் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருக்கிறார். அத்தனை உறுதியுள்ளவர். அந்தப் பட்டத்தைப் பெற அவர் கவர்னர்களுக்குக் கொடுத்த விருந்துகள் கொஞ்ச நஞ்சமல்ல. விருந்துகளை அளித்தது மட்டுமல்ல; அந்த விருந்துகளைச் சுவை படவும் அளித்தார்," என்று சுட்டிக்காட்டினார் மருததாயகம்.

இதையெல்லாம் எதற்காகச் சொல்கிறார் மருதநாயகம் என்பதை அறியாமல் மற்றவர்கள் விழித்துக் கொண்டிருக்கையில் சங்கர் மெள்ள இடைபுகுந்து கேட்டான் ; "எப்படிச் சுவைபட அளித்தார் ?" என்று.

"பேஷ் சங்கர் ! உன் விஷயம் வந்துவிடவே நீ வாயைத் திறந்துவிட்டாய்," என்று பாராட்டிய மருதநாயகம் மற்றவர்கள் முகங்களை ஒன்றிப் பார்த்தார். 'என்ன விஷயம் அது ? என்ன அப்படி சங்கர் இல்லாததைக் கூறிவிட்டான் ?' என்று எண்ணிய மற்றவர்கள் வாயைத் திறக்காமலிருக்கவே, மருதநாயகம் ஒரு சிறுவெடியை வீசினார். "சங்கருக்குள்ள பலவீனம் தாமோதரத்துக்கும் உண்டு."

இதைக் கேட்ட சிவக்கொழுந்து, "என்ன ! சங்கருக்குள்ள பலவீனமா ?" என்று துள்ளி எழுந்தார்.

அவரை அமரும்படி சைகை காட்டிய மருதநாயகம் சொன்னார், "சங்கருக்கு சங்கீதம் என்றால் பைத்தியமென்பது நமக்கெல்லாம் தெரியாதா ? அம்மாதிரி பைத்தியம் தாமோதரத்துக்கும் உண்டு ; ஆனால் ஒரு வித்தியாசம் மட்டும் இருக்கிறது," என்றார்.

"என்ன ! தாமோதரத்துக்குச் சங்கீதப் பைத்தியமா?" என்று வினவினார் சிவக்கொழுந்து.

"சங்கீதமும் அதில் சேரும்," என்றார் மருதநாயகம்.

"எப்படி ?" என்றார் மீண்டும் சிவக்கொழுந்து.

"வெள்ளைக்காரர்களுக்கு தாமோதரம் தரும் விருந்தில் இசையையும் நடனத்தையும் சேர்த்தார். விருந்து முடிந்ததும் வெள்ளைக்காரர்களுக்கு நமது சங்கீதத்தையும் நடனத்தையும் ஏற்பாடு செய்தார்," என்றார் மருதநாயகம்.

"வெள்ளைக்காரர்களுக்கு நமது சங்கீதமும் நடனமும் புரியுமா ?" என்று சந்தேகத்துடன் வினவினார் சிவக்கொழுந்து.

"தாமோதரத்துக்கு எத்தனை புரியுமோ அத்தனை புரியும் அவர்களுக்கும்," என்று விளக்கினார் மருதநாயகம்.

"அப்படியானால்..." சந்தேகத்துடன் இழுத்தார் சிவக்கொழுந்து.

"எனக்குத் தெரிந்த சங்கீதந்தான் தாமோதரத்துக்கும் தெரியும்," என்று புன்முறுவல் செய்த மருதநாயகம், சங்கீதத்தில் தமக்கிருந்த வெறுப்பைக் காட்டினார்.

"என்ன விசித்திரம்! கலையறிவு இல்லாதவர் கலையைக் கட்டிக்கொண்டு மாரடிப்பானேன் ?" என்றார் சாரதி.

"அங்குதான் பெரிய மனிதர் விஷயம் வருகிறது, கலையறிவு இருந்தாலும் இல்லாவிட்டாலும், பெரிய மனிதராயிருப்பவர் கலையில் சம்பந்தம் வைத்துக் கொள்ளவேண்டும். அது இறுதியில் பயனளிக்கிறது," என்றார் மருதநாயகம்

"எப்படி ?" என்று கேட்டார் சிவக்கொழுந்து.

"பெரிய மனிதர்கள் காலமாவதற்கும் சாதாரண மனிதர்கள் காலமாவதற்கும் வித்தியாசம் இருக்கிறது.



சாதாரண மனிதர்கள் காலமாவதை யாரும் கவனிப்பதில்லை. பெரிய மனிதர்கள் போய்விட்டால், இதைப் பத்திரிகைகளில் போடவேண்டிய அவசியமிருக்கிறது. அப்படிப் போடும்போது, 'இவர் இந்த சங்கீத சபைக்குத் தலைவராயிருந்தவர், கலைகள் பலவற்றிலும் இவருக்கு ஆழ்ந்த பரிச்சயம் உண்டு' என்று, பத்திரிகைகளில் விவரிப்பார்கள். இதற்கு முன்னேற்பாடு தேவை," என்றார் மருதநாயகம்.

"என்ன முன்னேற்பாடு?" என்று கேட்டார் சிவக்கொழுந்து.

"இருக்கும் போதே கலைச் செல்வர் என்று பெயர் வாங்க வேண்டும். கலையறிவு இல்லாவிட்டாலும் கலை அபிமானமாவது வேண்டும்."

"அப்படி தாமோதரத்துக்கு ஏதாவது அபிமானமுண்டா ?"

"உண்டு."

"எதில்?"

சிவக்கொழுந்தின் இந்தக் கடைசிக் கேள்வி பிறந்ததும் மருதநாயகத்தின் முகத்தில் பெரும் விஷமக் குறி படர்ந்தது. அவர் நாற்காலியிலிருந்து எதிரேயிருந்தவர்களை நோக்கிக் குனிந்தார். "எதில் என்பதைவிட யாரிடம் என்று கேட்பது பொருந்தும். சிவக்கொழுந்து!" என்று மெள்ளச் சொன்னார் மருதநாயகம்.

"யாரிடமா?" என்று வாயைப் பிளந்தார் சாரதி.

"ஆம். தாமோதரத்துக்கு அபிமானம் கலையைவிடக் கலையழகியிடம்," என்றார் மருதநாயகம்.

பன்னிரண்டு டைரக்டர்களும் இக்பிரமை பிடித்து உட்கார்ந்தார்கள். மருதநாயகம் மேலும் விவரிக்கத் தொடங்கி, "பட்டணத்துக் கலையழகியைப் பற்றி நீங்கள்

கேள்விப்பட்டதில்லையா? அந்த அம்மாள் தாமோதரத்துக்கு அபிமானம். அவர்கள் நடனம் எங்கிருந்தாலும், முதல் சீட்டில் தாமோதரம் உட்கார்ந்திருப்பார்..." என்றார்.

அவர் வாசகத்தை முடிக்குமுன்பு கேட்டார் சிவக்கொழுந்து, "ஒவ்வொரு நடனத்துக்குமா வருவார் தாமோதரம்?" என்று.

"ஆம்."

"நடனத்தில் அத்தனை ஆர்வமா அவருக்கு?"

"இல்லை. அந்தம்மாளைத் தாமோதரமே காரில் கொண்டு வந்து சபையில் விட்டு, திரும்பவும் காரில் அழைத்துக் கொண்டு போவார்."

"ஏன், டிரைவர் யாரும் இல்லையா?"

"டிரைவரை அனுப்புவது மதிப்புக் குறைவென்று கலையழகி கருதினால் என்ன செய்வது?"

"இது மட்டும் தாமோதரத்துக்கு மதிப்பா?"

"அப்படித்தான் தாமோதரம் நினைக்கிறார்" என்று கூறி லேசாக நகைத்த மருதநாயகம், "அந்த அம்மாளை நாம் நடனத்துக்குப் பிடித்துப் போட்டால், தாமோதரம் தானாக ஓடிவருவார். முதலில் அம்மாளைப் பிடிக்க வேண்டும் பிறகு தூண்டிலைத் தாமோதரத்தின் மீது வீச வேண்டும். நமது ஆண்டுவிழா கலையழகியின் நடனத்துடன், தாமோதரத்தின் தலைமையில் நடக்கும். அந்த விழாவில் இன்னொரு நிகழ்ச்சியும் உண்டு..." என்று கூறி விட்டு, சிவக்கொழுந்தை நோக்கினார்.

மருதநாயகத்தின் திட்டத்தில் மயங்கிக் கிடந்த சாரதி கேட்டார், "வேறு என்ன நிகழ்ச்சி?" என்று.

"சங்கரின் சங்கீதம். இந்த ஊரில் உண்மைக் கலை இருப்பதைத் தாமோதரம் புரிந்து கொள்ள வேண்டும்,"



என்று கூறிய மருதநாயகம், கள்ளத்தனமாகச் சங்கரைப் பார்த்தார்.

சங்கர் மெய்ம்மறந்து உட்கார்ந்திருந்தான். திடீரென மருதநாயகம் தன்னை ஆகாயத்தில் தூக்கி உட்கார வைத்து விட்டதை எண்ணிப்பெரும் பிரமிப்பில் ஆழ்ந்தான். அவன் வாழ்வில் ஏதோ கிடைக்காத ஒன்று கிடைத்து விட்டதாக எண்ணியதால், புத்தியில் ஏதேதோ காட்சிகள் எழுந்து புரண்டன. சிறுவயலின் பெரும்பந்தல், ஆயிரக்கணக்கான மக்கள், எதிரே தாமோதரம், மருதநாயகம், சகபஞ்சாயத்து டைரக்டர்கள்! இவர்கள் முன்னிலையில் மேடையில் தன் இசை! இத்தனையும் நினைத்துப் பார்த்த சங்கர், அந்தக் கும்பலில் தனி நாற்காலியில் கூரைப் புடவையைக் கட்டிக்கொண்டு ஜெயம் உட்கார்ந்திருப்பதையும், மது தன் குண்டு விழிகளால் பிரமித்துப் பார்ப்பதையும் சிந்தையில் பார்த்தான். ஏதோ சொர்க்கத்திலிருந்தான் சங்கர். அந்த மயக்கத்தில், "கலையழகியின் நடனம் நன்றாயிருக்குமா?" என்று சிவக்கொழுந்து கேட்டதோ, "நடனம் முன் பின் இருந்தாலும் ஆள் நன்றாயிருப்பாள்," என்று மருதநாயகம் இகழ்ச்சியுடன் பதில் கூறியதோ, அவன் காதில் விழவேயில்லை.

மருதநாயகம், ஒரே தூண்டிலைக் கொண்டு தன்னையும் தாமோதரத்தையும் ஏக காலத்தில் பிடித்துவிட்டார் என்ற உண்மை, அவன் கனவின் ஊடே பளிச்சிட்டது. அது பிற்காலத்தில் தன் வாழ்க்கைக் கப்பலை எத்தனை அலைக்கழிக்கப் போகிறது என்பதைச் சங்கர் அன்று உணரவில்லை. எத்தனை அபாயப் புயல் அந்தப் பஞ்சாயத்துக் கட்டிடத்தில் உருவாகியது என்பதும் அவனுக்கு அன்று தோன்றவில்லை. அது மட்டுமல்ல; அத்தனை புயலில் ஆடிய தன் வாழ்க்கைக் கப்பலைத் திடமாக நிறுத்த ஒரு நங்கூரமும் உண்டு என்பதும் புரியவில்லை அவனுக்கு. கனவுலகத்தில் இருந்தான் அவன். புயலை மெல்ல மெல்ல உருவாக்கினார் மருதநாயகம்.

## 6. யார் இந்தக் கலையழகி ?

வாழ்க்கையில் ஒரு மனிதன் செய்யப் புகும் ஒரு சிறு காரியம், அவன் கருத்தில் உதிக்கும் ஒரு சாதாரண யோசனை, இன்னொருவன் வாழ்க்கையை நல்லவித மாகவோ பொல்லாத விதமாகவோ பாதித்து விடுகிறது என்ற தத்துவத்துக்குப் புராணச் சான்றுகளும் உண்டு. வரலாற்றுச் சான்றுகளும் வேண்டுமென்ற காரணத் தாலோ என்னவோ, மருதநாயகத்தின் புத்தியில் தாமோதரத்தைச் சிறுவயலுக்கு அழைக்கும் யோசனை பிறந்தது. அது மட்டுமா பிறந்தது? அத்துடன் கூடவே சங்கரின் வாழ்வில் பெரும் திருப்பம் ஏற்படுவதற்கான விதியும் பிறந்தது.

அண்மையில், மருதநாயகம் மிக நல்லெண்ணத்துடன் தான் தன் யோசனையில் பிறந்த திட்டத்தைச் செயல் படுத்தவும் முற்பட்டார். எப்படியாவது, சிறுவயல் கிராமத்தின் மதிப்பை உயர்த்திவிட வேண்டுமென்ற அவாதான் அவரைத் தாமோதரத்தைப் பற்றி நினைக்கத் தூண்டியது. சங்கர் மீதிருந்த அன்பினால்தான், பெரிய மனிதரான தாமோதரம் வரும்போது அவர் முன்னிலையில் சங்கரின் இசைத் திறமையை ஒளி பெறச் செய்யவேண்டு மென்று திட்டமிட்டார் மருதநாயகம். ஆனால் அன்பில் விளைந்த அந்த யோசனையும், அன்பில் வகுக்கப்பட்ட அந்த ஆண்டுவிழாத் திட்டமும், சங்கரின் வாழ்க்கையைப் பெரிதும் நிலைகுலையவே செய்தன. பின்வரும் விளைவு களை முன்கூட்டிப் பார்க்க மனிதனின் சிந்தைக்குச் சக்தி யில்லாத காரணத்தால், பின்னால் நடக்கப்போவது என்ன என்பதை உணராமலே அன்று மருதநாயகம், சங்கர் இருவருமே மகிழ்ச்சி வெள்ளத்தில் மூழ்கிக் கிடந்தனர்.

மகிழ்ச்சி பொங்கப் பொங்க மருதநாயகத்தின் மூளை யும் மிக வக்ரமாக வேலை செய்ய ஆரம்பித்ததன்றி, சிவக்



கொழுந்து கேட்ட கேள்விகளுக்குப் பத்து மடங்கு அதிக விஷமத்துடன் மருதநாயகம் பதிலும் சொல்லலானார். கனவு மயக்கத்திலிருந்த சங்கருக்கு, அவர்கள் என்ன பேசு கிறார்கள் என்பது திட்டமாகக் காதில் விழவில்லையென் றாலும், சிவக்கொழுந்து விழா சம்பந்தமாகப் பட்டணத் துக்குப் பயணப்படுவார் என்பது மட்டும் திட்டமாகத் தெரிந்தது. ஆகவே, கலையழகியின் நடனத்தைப்பற்றி மிகக் குதர்க்கமாக மருதநாயகம் சொன்ன பதிலையும், அடுத்து அவருக்கும் சிவக்கொழுந்துவுக்கும் ஏற்பட்ட ரசமான சம்பாஷணையையும், அவன் கவனிக்க வாய்ப்பில் லாமல் போய் விட்டது. "கலையழகியின் நடனம் நன்றா யிருக்குமா?" என்று கேட்டதற்கு, "நடனம் முன்பின்னிருந் தாலும் பெண் நன்றாயிருப்பாள்," என்று மருதநாயகம் சொன்னதும், விஷமக்காரரான சிவக்கொழுந்து, "அப்படியா ?" என்று வாயைப் பிளந்த காட்சியை அவன் கண்ணும் பார்க்கவில்லை, அவன் காதும் கேட்கவில்லை.

ஆனால் இரண்டையும் கவனித்த மருதநாயகம் மட்டும் சொன்னார், "ஆமாம் சிவக்கொழுந்து ! அப்படித்தான்," என்று.

"அப்படியானால் கலையழகி என்ற பட்டத்தை எப்படிக் கொடுத்தார்கள் ?" என்று வினவினார் சிவக் கொழுந்து.

"அது பட்டமல்ல. தற்போதைய சொந்தப் பெயர்." என்று விளக்கினார் மருதநாயகம்.

"தற்போதைய பெயரா ? பெயரிலும் தற்போதைய பெயர், முந்திய பெயர் என்பது உண்டா ?" சிவக் கொழுந்து குரலில் மட்டுமின்றி முகத்திலும் வியப்பைக் காட்டினார்.

"கலையுலகில் உண்டு," என்றார் மருதநாயகம்.

"எனப்படி ?"

"கலை சிறப்பாயில்லாவிட்டாலும் பெயரை வைத்துச் சரிப்படுத்த வேண்டிய அவசியமிருக்கிறது."

"இதென்ன விசித்திரம் ?"

"விசித்திரமொன்றுமில்லை சிவக்கொழுந்து. இதோ பாருங்கள். இந்தக் கலையழகி யார் தெரியுமா ?''

"தெரியாதே ! நான் பட்டணத்துக்கே இந்த ஐம்பது வயது வரையில் போனதில்லையே !''

"பட்டணத்துக்குப் போகவேண்டாமய்யா! திட்டக்குடி போயிருக்கிறீரா ?"

"நம்ம திட்டக்குடியா ?"

"ஆமாம். அங்கேயிருந்த அம்மாக் கண்ணுவைத் தெரியுமா உனக்கு ?''

"மாரியம்மன் கோயிலிலே பெரிய உற்சவத்துக்குப் பண்ணாடுவாளே அவளா ?"

"அவளேதான். அவளுக்கு ஒரு பெண்ணிருந்தாளே தெரியுமா ?"

"தெரியுமே. பெயர்கூட சித்தாத்தாள்."

"ஆமாம்யா; அந்தச் சித்தாத்தாள் தான் இந்தக் கலையழகி.''

மருதநாயகத்தின் விளக்கத்தைக்கேட்ட சிவக்கொழுந்து பெரிதும் மலைத்துப்போய் மனலக்கொழுந்தாடும் நிலைக்கு வந்துவிட்டார் "என்ன சொன்னீர்கள் ? அம்மாக்கண்ணு மகள் சித்தாத்தாளா கலையழகி!" என்று பிரமித்துப்போய் கேட்கவும் செய்தார்.

"ஆமாமய்யா அவளேதான்,'' என்ற மருதநாயகம், சிவக்கொழுந்தின் மலைப்பைக் கண்டு சிறிது புன்முறுவலும் காட்டினார்.



சிவக்கொழுந்து கேட்டார், "அப்படியானால், அவள் ஏன் பெயரை மாற்றிக் கொண்டாள் ?" என்று.

"சித்தாத்தாள் என்றால் எவன் நடனம் பார்க்க வருவான் ? அதுவும் ஆத்தாள் என்ற பெயர் கொஞ்சம் வயதானதைக் குறிக்காதா ?"

"குறித்தாலென்ன ?''

"குறித்தாலென்னவா ? ஏனய்யா சிவக்கொழுந்து கிழவி நாட்டியமாடினால் நீர் பார்ப்பீரா ?"

"யார்தான் பார்ப்பார்கள் ?" என்றார் சிவக்கொழுந்து சிறிது சங்கடத்துடன்.

"பார்க்கமாட்டீர்களல்லவா? அதனால்தான் சித்தாத்தாள் கலையழகியானாள். அது அவளுடைய திரைப் பெயர்," என்றார் மருதநாயகம்.

எதிரேயிருந்தவர்களில் சங்கர் ஒருவனுக்குத்தான் இந்த உலக நினைப்பில்லையே தவிர, மற்றவர்களெல்லாரும் மருதநாயகத்தின் விவரணத்தில் லயித்திருந்ததால், மருதநாயகத்தின் உலக அறிவைக் கண்டு பெரிதும் பிரமித்தனர். அக்கம் பக்கத்து ஊர்களின் அக்கப்போரை மட்டுமல்லாமல், பட்டணத்தில் யார் யார் இருக்கிறார்கள், அவர்கள் பூர்வோத்திர மென்ன என்ற விஷயங்களை யெல்லாம் அவர் கசடறக் கற்றிருப்பதைக் கண்ட பண்டகசாலை டைரக்டர்கள், அத்தகைய ஒரு தலைவரைச் சிறுவயல் பெற்றது அந்த ஊரின் பாக்கியமென்றே கருதினர். அதை மிகுந்த பயபக்தியுடன் சாரதி சொல்லவும் செய்தார், "மருதநாயகம் தலைவராகக் கிடைத்தது இந்த ஊரின் அதிர்ஷ்டம்,'' என்று.

அந்தப் பாராட்டு மருதநாயகத்திற்குப் பெரிதும் மகிழ்ச்சியை அளித்ததை அவர் முகம் காட்டியது. அந்த மகிழ்ச்சியைக் குரலிலும் பிரதிபலிக்க பேச்சைத்

தொடர்ந்த மருதநாயகம், "இனி கலையமுகிலை நேரில் பார்த்து, நாம் இந்த விஷயத்தை முடிவு செய்ய வேண்டும்," என்றார்.

"அதுதான் முடிவு செய்தாகி விட்டதே!" என்றார் சிவக்கொழுந்து.

"என்ன முடிவு செய்தாகி விட்டது?" என்று வினவினார் மருதநாயகம்.

"சித்தாத்தாளை அழைக்க," என்றார் சிவக்கொழுந்து.

"சிவக்கொழுந்து!" என்று கடுமையாக அழைத்தார் மருதநாயகம்.

"ஏன்!" என்று வினவினார் சிவக்கொழுந்து, தலைவரின் திடீர்க் கடுமைக்குக் காரணம் புரியாமல்.

"இன்னொரு முறை அந்தப் பெயரைக் காதில் போடாதேயும், என் காதில் மட்டுமல்ல, யார் காதிலும் போடாதேயும்."

"எந்தப் பெயரை?"

"சித்தாத்தாள் என்ற பெயரை."

"ஏன்?"

"அந்தப் பெயருக்குடையவளே அதை மறைக்கும் போது நீர் ஏனய்யா அதைக் கட்டிக்கொண்டு அழுகிறீர்?"

"உண்மைப் பெயரைச் சொல்லக் கூடாதாக்கும்."

"உண்மை எதையுமே சொல்லக்கூடாதய்யா."

"நன்றாயிருக்கிறதே தத்துவம்."

"தத்துவம் பேசவா இங்கு கூடியிருக்கிறோம்? விழா நடத்தக் கூடியிருக்கிறோம். இங்கே சொன்ன மாதிரி பட்டணத்திலே போகும்போது சொல்லாதேயும்."



"பட்டணத்திலே போகும் போதா!" என்று வியப்பைக் காட்டினார் சிவக்கொழுந்து.

"ஆம்," என்றார் மருதநாயகம்.

"யார் போகப் போகிறது?"

"நீர்தான்."

"நானா!"

"ஆமாய்யா."

"நான் இதுவரையில் பட்டணத்தைப் பார்த்ததே யில்லையே."



"இப்பத்தான் பாருமே!"

இதைக் கேட்டுச் சில வினாடிகள் திகைத்து உட்கார்ந்து விட்டார் சிவக்கொழுந்து. பிறகு மெள்ள, "மருதநாயகம்! மருதநாயகம்!" என்றழைத்தார் கவலை பாய்ந்த குரலில்.

"ஏன் சிவக்கொழுந்து? பட்டணத்தின் பெயரைக் கேட்டதும் ஏன் பதறுகிறீர்?" என்று வினவினார் மருதநாயகம்.

"இதில் நம்மை மாட்டிவிடாதேயும்!" என்று கெஞ்சினார் சிவக்கொழுந்து.

"எதில்?"

"சித்தாத்தாளை... அதுதான் கலையமுகிலை அழைக்கும் வேலையில்."

"ஏன்?"

"நான்... நான்" என்று மென்று விழுங்கினார் சிவக்கொழுந்து.

"தைரியமாகச் சொல்லுமய்யா," என்று ஊக்கினார் மருதநாயகம்.

"அம்மாக் கண்ணுவையே நான் பள்ளாட்டத்திலே பார்த்ததுதான்," என்று திணறினார் சிவக் கொழுந்து.

"அது தெரியுமே எனக்கு."

"அவள் வீட்டுக்கே நான் போனதில்லை."

"அதனாலென்ன ?".

"ஏன் போகவில்லை ? தெரியாதா உங்களுக்கு ?"

"தெரியவில்லை, சொல்லும்."

"போனால் நம்ம பேரிலே வீண் அக்கப்போர் கிளம்புன்னுதான் போகவில்லை."

"அப்ப அது சரி."

"இப்போ, அவ பெண் வீட்டுக்குப் போகச் சொல்றீரே ! கடைசிக் காலத்திலே இந்தச் சிவக்கொழுந்துக்கு ஏன் இந்தப் புத்தியின்னு கேட்க மாட்டார்களா ?"

"யாரும் கேட்க மாட்டார்கள்," என்று உறுதி கூறிய மருதநாயகம், "இப்பொழுது அதில் பெருமையும் உண்டு." என்றார்.

"ஏனாம்?" என்று வினவினார் சிவக்கொழுந்து.

"காலம் மாறிப்போச்சு, சிவக்கொழுந்து. இப்பொழுது கலையழகி வீட்டுக்குப் போகிறதே உமக்குப் பெருமை!"

"என்ன பெருமை இதில் ?"

"கலையழகி யென்றால் கிள்ளுக்கீரையா ? ஓய் சிவக்கொழுந்து. அவள் நக்ஷத்திரமய்யா !"

"அவ அம்மா சந்திரன் போலிருக்கு ?"

"ஆமாய்யா, அவ அம்மா இருந்தா சந்திரனுக்கு மேலே இருந்திருப்பாள். இப்போ அவகிட்ட சிநேகமா



யிருக்கிறதாலே தாமோதரம் இந்திரனாகவும் சந்திரனாக வுமிருக்கிறார். பட்டணம் போய்ப் பாரும் தெரியும். மேற்கொண்டு எதுவும் பேசவேண்டாம். இதோ பாருங்கள் சிவகொழுந்து, உமக்கு வயசு ஐம்பதாச்சு. இப்பவாவது பட்டணத்தைப் பாரும்," என்று திட்டமாகக் கூறினார் மருதநாயகம்.

"என்ன அப்படி விசேஷம் பட்டணத்தில் ?" என்று கேட்டார் சிவக்கொழுந்து.

"போய்ப் பாரும் தெரியும்" என்ற மருதநாயகம், கூட்டம் முடிந்து விட்டதற்கறிகுறியாக ஆசனத்தைவிட்டு எழுந்தார். பன்னிரண்டு டைரக்டர்களில் பத்துப்பேர் மகிழ்ச்சியுடன் தலைவர் அறையைவிட்டுச் சென்றனர். இருவர் மட்டும் மதிகலங்கி வெளியே வந்தனர். ஒருவன் சங்கர்; இன்னொருவர் சிவக்கொழுந்து. சங்கர் விழாவைப்பற்றிய மயக்கத்திலிருந்தான். சிவக்கொழுந்துவின் மயக்கம் அவன் மயக்கத்தைப் போல் மகிழ்ச்சியுடையதல்ல. அதில் வெறுப்பு கலந்திருந்தது. அந்த வெறுப்பு அடுத்த இரண்டு நாட்களில் உச்ச நிலைக்குச் சென்றது. நேற்றைய குட்டி சித்தாத்தாள் வீட்டுக்குத் தாம் போகவேண்டி நேர்ந்த விதியைப் பெரிதும் நிந்தித்தார் சிவக்கொழுந்து. நிந்தித்தால் விதி விடுமா ? விடாமல் உந்தியது அவரைப் பட்டணத்தை நோக்கி. அதே சமயத்தில், சங்கரின் பிற்கால வாழ்க்கையின் வித்தும் மெள்ள மெள்ள முளைவிடலாயிற்று.

## 7. பஜனை சிவக்கொழுந்து

பண்டகசாலை டைரக்டர்கள் கூட்டம் முடிந்ததும், பஞ்சாயத்து 'ஆபீஸ் கட்டிடத்தைவிட்டுச் சினத்துடனும் சிறிது வெறுப்புடனும் வெளிப்போந்த சிவக்கொழுந்து, நேரம் தாம் போகவேண்டிய திசையைக்கூட மறந்து சங்கரின் பக்கத்திலேயே மௌனத்துடன் நடந்து

சென்றார். சங்கரின் மனோநிலையும் தெளிவாயில்லாமல், ஒரு மாதம் தள்ளி வரப்போகும் நிகழ்ச்சிகளை நினைந்து ஏதேதோ கனவுகளைக் கண்டு குழம்பிக் கிடந்ததால், அவனும் மௌனமாகவே நடந்து சென்றான். கிராமத்தின் மேலைக்குளக்கரை வந்து அதில் நீராடிக் கொண்டிருந்த இரண்டு எருமைகளைப் பார்த்த பிறகேதான், இருக்கும் ஊர் சிறுவயல் என்பதையும் சங்கர் புரிந்து கொண்டானாதலால், சட்டென்று நடையை நிறுத்தி, "பெரியவரே!" என்று சிவக்கொழுந்தை அழைக்கவும் செய்தான்.

சிவக்கொழுந்துவுக்கும் அப்பொழுதுதான் தானிருக்குமிடம் தெரியவந்ததாகையால், "அடடே! இங்கா வந்து விட்டோம்!" என்று பிரமிப்புடன் கூறியதன்றி, "ஏனப்பா சங்கர்! கொஞ்சம் முன்னாடியே என்னைக் கடைத் தெருப் பக்கம் திருப்பியிருக்கக் கூடாது?" என்றும் வினவினார்.

"மன்னிக்க வேண்டும்! என் புத்தியே குழம்பிக் கிடக்கிறது. ஆகையால் நானே வீட்டுக்குப் போக வேண்டியவன் குளக்கரைக்கு வந்து விட்டேன்," என்று சற்றுக் குழப்பத்துடனும் வணக்கத்துடனும் சொன்னான் சங்கர்.

அவன் வணக்கத்துக்குக் காரணம் இருந்தது. உண்மையில், அந்த ஊர் மக்கள் எல்லாருமே சிவக்கொழுந்துவிடம் பெருமதிப்பு வைத்திருந்தனர். சிவக்கொழுந்துவின் சிறப்பான அப்பழுக்கு சொல்லமுடியாத ஒழுக்கமும் சிவபக்தியும் ஊரில் பெரிய மனிதர்களை அவர்பால் மதிப்புக் கொள்ளச் செய்ததென்றால், கட்டுமஸ்தான அவர் தேகம் ஊரின் காலிகளையும் அவரிடம் மதிப்புடன் நடந்து கொள்ளச் செய்தது. இதன் விளைவாக, அந்த ஊரில் பெரிய ரௌடியென்று பெயர் வாங்கியிருந்த சிகரெட் சிங்காரம்கூடச் சிவக்கொழுந்துவின் பெருங் குடுமியைக் கண்டவுடன் அஞ்சி ஒரு பக்கமாக நகர்ந்து



நடப்பது வழக்கமாயிருந்தது. சிவக்கொழுந்துவின் தேகம் மட்டுமின்றி, அவர் மனமும் மிகத் திடம் வாய்ந்ததென்பதையும், சாதாரணமாக நகைச்சுவையுள்ள சிவக்கொழுந்து சமயம் வருமானால் ராட்சதனாகிவிடக் கூடியவரென்பதையும் உணர்ந்திருந்த காரணத்தால், சிங்காரம் அவரைக் கண்டபோதெல்லாம் வாயிலிருந்த சிகரெட்டைச் சட்டென்று கையில் எடுத்து விரல்களில் இடுக்கிக் கையின் உட்புறம் மடித்து மரியாதையுடன் மேலே நடந்துவிடுவான். அதுவரை பிடித்த சிகரெட் புகை வாய்க்குள்ளிருந்தால், பட்டென்று தலைகுனிந்து, தன் புன்னி மீசை உதடுகளை அதிகமாகத் திறக்காமல் லேசாகத் திறந்து புகையை மெள்ளவும் பரவலாகவும் விடுவான். இத்தனைக்கும் சிவக்கொழுந்து சிங்காரத்தையோ வேறு காலிகளையோ அதட்டிக்கூடப் பேசியதில்லை. அவர் தேகத்தையும், அம்மன் கோயில் உற்சவம் வரும்போது திடீரென்று ஆவேசம் வந்து எதிரேயிருந்த வேப்ப மரக்கிளையைத் திடீரென அவர் முறித்து, வாயில் வேப்பிலையைக் கௌவிக்கொண்டு ஆடும் ஆட்டத்தையும் கவனித்திருந்த ஊர்க்காலிகள், அவரிடம் மிகுந்த எச்சரிக்கையுடன் நடந்து கொண்டனர். இப்படிப் பலராலும் மதிக்கப்பட்ட சிவக்கொழுந்துவைச் சங்கர் மதித்ததற்குப் பலமான காரணங்கள் உண்டு.

சிவக்கொழுந்து பெரும் பணக்காரரர் இல்லாவிட்டாலும், சிறுவயலின் வளர்ச்சிக்கு மருதநாயகம் எத்தனை காரணமோ அத்தனை காரணம் சிவக்கொழுந்து என்பதைச் சங்கர் நன்றாக உணர்ந்திருந்தான். மருதநாயகம் பொருளாதாரத் துறையிலும், புரட்சித் துறையிலும் சிறுவயலை வளர்த்திருந்தால், அதை பக்தித் துறையில் ஓரளவு வளர்த்து, மருத நாயகத்தின் புரட்சி அத்துமீறிப் போகாமல் பார்த்துக் கொண்டிருந்தார் சிவக்கொழுந்து. அடிக்கடி ஊரில் புராணப் பிரவசனங்களுக்கு ஏற்பாடு செய்ததன்றி, அந்தப் பிரவசனக் கூட்டங்களில் கலாட்டா

ஏதும் ஏற்படாமலும் பாதுகாத்து வந்தார் சிவக்கொழுந்து. அதுமட்டுமின்றி, வாரா வாரம் ஞாயிறு தினங்களில் அனுமார் கோயிலில் நடத்து வந்த பஜனையை நிறுவியவரும், அதில் பிரதானமாகப் பாடியவரும் சிவக்கொழுந்துதான். சிவக்கொழுந்துவின் பாட்டும் அவர் தேகத்தைப் போலவே புஷ்டியுடனிருந்ததால் 'மைக்'கின் விஞ்ஞானத் துணையில்லாமலே அவருடைய மெய்ஞ்ஞானக் கோஷமே ஊர் முழுவதும் கேட்டுக் கொண்டிருந்தது. கையிலிருந்த தாளத்தை அவர் விரோதியாக நினைத்து அடித்த அடியில், அது ஊரையே அலற அடித்துக் கொண்டிருந்தது. சங்கரையும் அவர் அந்தக் கோஷ்டியில் வலுக்கட்டாயமாகச் சேர்த்திருந்தாலும், சங்கர் உண்மையில் சங்கீதம் தெரிந்தவனாயிருந்தாலும், பஜனையில் மட்டும் சிவக்கொழுந்து அவனையோ மற்றவர்களையோ அதிகமாக ஓங்கவிடாமல், திடந்தனமாகத் தாமே நாமாவளிகளைப் 'பாடி வந்தார். மற்றவர்கள் அவரைப் பின்பற்ற வேண்டியது, பஜனை முடியும் வரையில் உட்கார்ந்திருக்க வேண்டியது, என்ற பெரும் நிர்ப்பந்தத்தில் பஜனை கோஷ்டியை நடத்தி வந்தார் சிவக்கொழுந்து. மருதநாயகம் கூட்டுறவுப் பண்டகசாலைக் கூட்டத்தை எந்த வலுக்கட்டாயத்தில் நடத்தி வந்தாரோ அந்த வலுக்கட்டாயத்தில் சிவக்கொழுந்து பஜனை கோஷ்டிக்குத் தலைமைத் தாங்கி நடத்தி வந்தார். இத்தனைக்கும் பஞ்சாயத்து மாதிரி பஜனை இருக்க முடியாதென்பதைச் சிவக்கொழுந்து நன்றாக உணர்ந்து கொண்டிருந்தாராதலாலும், வெறும் நிர்ப்பந்தம் நான்கு மணி நேரத்துக்குப் பொது மக்களை உட்கார வைக்காதென்பதை அறிந்திருந்தாலும், வேறொரு நிர்ப்பந்தத்தையும் ஏற்படுத்தியிருந்தார். பஜனை முடிந்ததும் இரண்டுபடி கடலைச் சுண்டலுக்குக் குறையாமல் போட ஏற்பாடு செய்திருந்ததல்லாமல், அந்தச் சுண்டலை ஆரம்பத்தில் விநியோகம் செய்யச் சொல்லாமலே, இறுதியிலேயே விநியோகம் செய்யச் செய்து, கூட்டம் கலையாமல் பார்த்துக் கொண்டார்.



பொதுமக்களிடம் மட்டுமல்ல, அவர் பஜனை விஷயத்தில் கண்டிப்பாக நடந்து கொண்டது; தமது கோஷ்டியிடத்திலும் சர்வ கண்டிப்பாயிருப்பார். பஜனைக்கு வராதவர்களைப் பஜனை ஆரம்பிக்கும் முன்பே தமது கண்களைச் சுழலவிட்டுக் கணக்கெடுத்து, "ஊஹும்! சதாசிவம் எங்கே இன்றைக்குக் காணோம்? உடல் நலம் ஏதாவது சரியில்லையாமா?" என்று அடித் தொண்டையில் கேட்பார். அத்துடன் விஷயம் நிற்பதில்லை. அன்று இரவு பன்னிரண்டு மணிக்குப் பஜனை முடிந்ததும், பஜனைக்கு மட்டம் போட்ட நபர் வீட்டுக்குச் சென்று, "சதாசிவம்! சதாசிவம்!" என்று குரல் கொடுப்பார். அந்தக் குரல் வருமென்பதை முன்பே அந்தப் பஜனை கோஷ்டி அங்கத்தினர் அறிந்திருப்பாராதலால், ஒன்று அவர் 'வெளியூர் போயிருப்பதை' அவர் மனைவியார் வெளியில் வந்து தெரிவிப்பார்; அல்லது அவரே கம்பளிக்குள் மறைந்து கொண்டு வெளியில் வருவார். அப்படி 'வெளியூர் போயிருந்தால்' மறுநாள் வந்து தம்மைச் சந்திக்கும்படி சிவக்கொழுந்து உத்தரவிடுவார். அப்படியின்றிக் கம்பளிக்குள் மறைந்து வெளியே வந்தால், தமது மடியிலிருந்து விபூதியை எடுத்து அவர் நெற்றியில் தம் கையாலேயே இட்டு, "உம் வாயைத் திறங்க" என்று அதட்டி வாயிலும், விபூதியைப் போட்டு, "பயப்படாதீங்க, நாளைக்குப் பறந்துவிடும் காய்ச்சல். அடுத்த பஜனைக்குச் சுவாமி உங்களை அனுப்பி வைப்பார்," என்று ஆசீர்வாதமும் செய்துவிட்டுப் போவார். அடுத்த பஜனைக்குச் சுவாமி கண்டிப்பாக அனுப்புவாரென்றும், அப்படிச் சுவாமி அனுப்பாவிட்டாலும் சிவக்கொழுந்து இழுத்துக் கொண்டுபோய் விடுவாரென்பதும் அந்த நபர் அறிந்த விஷயமாதலால், அடுத்த பஜனைக்கு அவர் வரத் தவறுவதில்லை.

இப்படி நயத்திலும் பயத்திலும் அன்பிலும், அதட்டலிலும் பக்தியை அந்த ஊரில் சிவக்கொழுந்து பரப்பி

வந்தபடியால், சிவக்கொழுந்துவைத் தன் சொந்தத் தந்தையைப் போல் பாவித்திருந்தாள் ஜெயம். ஆகையால் அவரை மாமனாராகப் பாவிக்க வேண்டிய நிலையில் இருந்தான் சங்கர். காலக்கிராமத்தில் சிவக்கொழுந்துவைப் போல் ஒரு மாமனாரைப் படைப்பது எத்தனைச் சங்கடம் என்பதையும் புரிந்து கொண்டான். சிவக்கொழுந்துவின் ஒரே மகன் பட்டணத்தில் படித்துக் கொண்டிருந்ததாலும், குழந்தைகளைக் கண்டால் அதிகப் பிரியமுடையவராதலாலும், அவர் மதுவைப் பார்க்கவே பிரதி தினம் தவறாமல் சங்கர் வீட்டு வழியாகக் குளக் கரைக்குப் போவார். சங்கர் வீடு வந்ததும் திண்ணையில் வந்து உட்கார்ந்து கொண்டு, "மாப்பிள்ளே !" என்று சில சமயங்களிலும், "சங்கர் !" என்று சில சமயங்களிலும் குரல் கொடுப்பார். சங்கர் இல்லாவிட்டாலும் ஜெயம் கதவைத் திறந்து, "வாங்கப்பா! மோர் சாப்பிடறீங்களா ?" என்று விசாரிப்பாள். அந்தக் குரலைக் கேட்டதும் வெளியே ஓடி வந்து, தலைகால் புரியாமல் அவர்மேல் விழும் மதுவைத் தூக்கித் தொடையில் வைத்து உச்சி முகருவார். அத்துடன் விடாமல், "என்ன ! மாப்பிள்ளை எப்படி ! ஒழுங்காயிருக்கிறாரா ?" என்று பத்து வீடுகளுக்குக் கேட்கும்படியும் ஜெயத்தை விசாரிப்பார். சங்கர் இருக்கும் சமயமாயிருந்தால், தம்பதிகளுக்குள் ஏற்படும் சண்டையிலும் தலையிட்டு, "என்ன மாப்பிள்ளே ! என்னய்யா உங்க ஜம்பத்தையெல்லாம் என்மககிட்ட காட்டுகிறீர்." என்று கூவுவார். எதைப் பற்றித்தான் கூச்சல் போடுவது, எதைப் பற்றிப் போடுவதில்லையென்ற நிர்ணயமும் சிவக்கொழுந்துக்குக் கிடையாது. ஜெயம் மதுவைக் கருத்தரித்திருந்ததை சிறுவயலுக்கு முதன்முதலாக அறிவித்தவரே சிவக்கொழுந்துதான். தமது மனைவி மூலம் விஷயத்தை ஐம்பது நாட்கள் தாண்டியவுடனேயே அறிந்த சிவக்கொழுந்து நேராக சங்கர் வீட்டுக்கு வந்து, "மாப்பிள்ளே ! மாப்பிள்ளே !" என்று உரக்கக் கூவினார். அவர் கூச்சலைக் கேட்டு என்னவோ ஏதோவென்று



பயந்து வெளியே வந்த சங்கர், ஜெயம் இருவரையும் பார்த்த சிவக்கொழுந்து, முகத்தில் போலிக் கடுமையைக் காட்டி, "என்ன மாப்பிள்ளை ! நீ பலே பேர்வழியப்பா!" என்றார்.

சங்கருக்கு ஏதும் புரியாததால், "நான் ஒரு குற்றமும் செய்யவில்லையே" என்றான் பயந்து.

"செய்யலே ?" என்றார் சிவக்கொழுந்து கோபத்துடன்.

"இல்லையே."

"உம்... குற்றமும் செய்துவிட்டு மறைக்கவும் பார்க்கிறே. அப்படித்தான் எத்தனை நாள் மறைக்க முடியும் ?"

"நீங்கள் சொல்கிறது புரியலையே."

"இன்னும் இரண்டு மாசம் போனால் தானே புரிகிறது... எனக்கு மட்டுமில்லையப்பா, ஊருக்கே புரியும்."

"ஊருக்கே புரியுமா ?"

"ஆமாம். அம்பலத்துக்கு வந்துவிடும்."

"யார் அப்படி அம்பலப்படுத்துவார்கள் ?"

"என் மகள்தான்."

"யார் ? ஜெயமா ?"

"ஆமாம்," திடீரெனக் கோபக்குறியை மாற்றி இடி இடியென நகைத்தார். அதைக்கேட்ட ஜெயம் சட்டென்று உள்ளே மறைந்தாள். அப்பொழுதுதான் ஓரளவு உண்மையைப் புரிந்து கொண்ட சங்கர், பிரமித்து, "நீங்க சொல்றது...!" என்று இழுத்தான்.

"ஆமாம்ப்பா," என்று சூசகமாகச் சொன்னார் சிவக்கொழுந்து.

"என்னிடம் சொல்லவேயில்லை அவன் ?"

"உங்கிட்டே சொல்லுவானா ? யார்கிட்ட சொல்ல ணுமோ சொன்னான்..."

"யார்கிட்டே ?"

"அவன் தாய்கிட்டே" என்று கூவித் தமது மனைவிக்கு கிடைத்த தாய்ப் பதவியால் பெருமையடைந்த சிவக் கொழுந்து, அன்றிருந்த மகிழ்ச்சியில் வழக்கமான மோரைக் கூட வாங்கிக் குடிக்காமல் குளக்கரைக்குச் சென்றார்

நகரத்தைப்போல் அவ்வளவு வசதியில்லாத கிராமங் களுக்கு, இத்தகைய பெரியவர்களை ஆண்டவன் அளித் திருந்ததால் கிராமம் எக்குறையுமில்லாமலே இருந்தது. அத்தகைய சிறுவயல் கிராமத்தைப் பெரிதும் நேசித்த சிவக்கொழுந்து தினசரிப் பத்திரிகை படிப்பவராகையால், சென்னை மாநகர நிகழ்ச்சிகளைப் பார்த்துப் பார்த்து அதனிடம் பெரு வெறுப்புக் கொண்டிருந்தார். ஆக, மகன் அங்கு வருஷக்கணக்கில் படித்தும் கூட அங்கு செல்லமறுத்தார் அவர். மகன் காலேஜிலிருந்து முதல் தடவை வீட்டுக்கு வந்தபோதே அவர், சிறிது பயந்தார். சிவன் கோயிலுக்குப் போய் விபூதியும் கையுமாக வீட்டுக் குள் நுழைந்ததும் அவர் கண்ட காட்சி அவரைப் பிரமிக்கச் செய்தது. கூடத்தில் நெல் களஞ்சியத்துக்குப் பக்கத்தில் அடுக்கியிருந்த இரண்டு விதைக்கோட்டை களுக்கு மேல் ஒரு கண்ணாடியை வைத்துப் பிள்ளை யாண்டான் சுயக்ஷவரத்தில் ஈடுபட்டிருந்ததைப் பார்த்த சிவக்கொழுந்து, அப்படியே கல்லாய்ச் சமைந்து நின்று விட்டார். அவர் மனைவி அந்தச் சமயத்தில் கூடத்துக் கோடியிலிருந்த சமையலறையிலிருந்து வெளியே வந்து, 'சம்பந்தம் பட்டணத்திலேயிருந்து இப்பத்தான் வந்திருக்கு." என்றாள் மகிழ்ச்சியுடன்.

"தெரியுது," என்றார் சிவக்கொழுந்து.



"என்னாங்க தெரியுது ?" என்றாள் அவர் மனைவி.

"சம்பந்தத்துக்குப் பட்டணத்துச் சம்பந்தம் அதிகமா யிருப்பது," என்ற சிவக்கொழுந்து, மகனை நோக்கி, "ஏண்டா ?. நீ க்ஷவரம் செய்துக்கிறதுக்கு இந்த விதைக் கோட்டைதான் அகப்பட்டதோ ?" என்றும் வினவினார்.

"வேற மேஜை ஒண்ணும் இல்லையே." என்றான் சம்பந்தம்.

மகனிடம் மேற்கொண்டு ஏதாவது பேச இஷ்டப் பட்டாலும், "குழந்தை வந்ததும் ஆரம்பிக்க வேண்டாம்" என்ற மனைவியின் எச்சரிக்கையைத் தொடர்ந்து உள்ளே சென்றுவிட்டார் சிவக்கொழுந்து. இந்த ஒரு நிகழ்ச்சியே சிவக்கொழுந்துவைச் சென்னையை வெறுக்கத் தூண்டி யது. ஒவ்வொருமுறை சம்பந்தம் ஊருக்கு வந்தபோதும் ஏற்பட்ட மாறுதல்கள் அந்த வெறுப்பை உச்ச நிலைக்குக் கொண்டு போயின. ஆகவே, கலையழகியைக் காண அவர் செல்ல வேண்டிய நிர்ப்பந்தத்தை நினைக்க அவர் வெறுப்பு அன்று எங்கோ மேல் பஞ்சமத்தில் இருந்தது. ஆகவே கவடுமாறிக் குளக்கரைக்குச் சங்கருடன் வந்து விட்ட சிவக்கொழுந்து ஒரு நிமிடம் குழம்பினார், திடீரென்று அவர் புத்தியில் யோசனை பிறந்தது. "அது தான் சரி ! அதுதான் சரி !" என்றும் கூவினார் திடீரென்று.

"எது சரி ?" என்று கேட்டான் சங்கர்.

"எனக்கு ஒரு யோசனை தோன்றியிருக்கிறது," என்றார் சிவக்கொழுந்து.

"என்ன யோசனை ?" என்று வினவினான்.

யோசனையை மெள்ளத்தான் வெளியிட்டார் சிவக் கொழுந்து. அதைக் கேட்ட சங்கர் முகத்தில் விவரிக்க இயலாத பிரமிப்பு விரிந்தது. "அது... அது...எப்படி.

முடியும்? மருத்துநாயகம் ஒப்புக்கொள்வாரா?..." என்று பிரமிப்புக்கிடையே வார்த்தைகளைத் தயங்கித் தயங்கி உதிர்க்கவும் செய்தான்.

# 8. குலக் கண்ணும் கலைக் கண்ணும்

சிவக்கொழுந்துவுக்கு அந்தத் திடீர் யோசனை பிறந்த சமயம் கதிரவன் உச்சியை எட்டும் சமயமாயிருந்தாலும், சுற்றுப்புறமெல்லாம் வெயிலின் தீட்சண்யம் அதிகமாகிக் கொண்டிருந்தாலும், மேலைக் குளக்கரையிலிருந்த இரண்டு ஆலமரங்களின் அடிவாரம் மிகக் குளிர்ச்சியாயிருந்தபடியால், அதுவரை சென்னையைப் பற்றிய வெறுப்பால் உஷ்ணப்பட்டிருந்த சிவக்கொழுந்துவின் உள்ளம், புது யோசனை பிறந்ததும் ஓரளவு குளிரவே செய்தது. 'ஆலமரத்து அடிவாரம், கிணற்று நீர், யுவதிகளின் மார்பு இம் மூன்றும் வெயில் காலத்தில் குளிர்ச்சியாகவும், மழைக் காலத்தில் உஷ்ணமாகவும் மாறி மனிதனுக்கு இதத்தைத் தருவன' என்று ஒரு வடமொழி சுலோகம் உண்டு. அந்தச் சுலோகத்தின் முதல் பகுதிக்குச் சாட்சி கூறுவதுபோல் மிகக் குளிர்ச்சியுடனிருந்த ஆலமரத்து நிழலில் எத்தனையோ முறை ஆசுவாசத்துக்காக சிவக்கொழுந்து உட்கார்ந்திருக்கிறாரென்றாலும், அன்று அவர் நின்ற நிலையில், அடைந்த மகிழ்ச்சியை என்றுமே அடைந்ததில்லை. ஏதோ பெரும்சுமை தலையைவிட்டு இறங்கிவிட்டதுபோன்ற பிரமை ஏற்பட்டது சிவக்கொழுந்துவுக்கு. எந்தச் சுமைக்கும், அது வெறும் விறகுக் கட்டையாயிருந்தாலும் சரி, மனப்பளுவாயிருந்தாலும் சரி, ஒரு குணம் உண்டு. பகிர்ந்து கொள்ள ஒருவர் இருந்துவிட்டால் சுமை குறையவே செய்கிறது. மனம் சம்பந்தமான சுமைக்கு இந்தக் குணம் நூற்றுக்கு



நூறு உண்டு. 'துன்பத்தைப் பகிர்ந்து கொள்ள ஒரு நண்பனிருந்தால் துன்பம் பாதியாகக் குறைகிறது. இன்பத்தைப் பங்கிட்டுக்கொள்ள ஒரு துணைவியிருந்தால் இன்பம் பல மடங்கு பெருகி விடுகிறது' என்று ஓர் ஆங்கிலப் பழமொழி உண்டு. ஆகவே அன்று புது யோசனை சம்பந்தமாக மனச் சுமையை இறக்கிவிட்ட சிவக்கொழுந்து, "அதுதான் சரி, அதுதான் சரி" என்று கூவியது இயற்கைதானே.

"எது சரி?" என்று சங்கர் கேட்டதற்குக் கூடப் புது மகிழ்ச்சி குன்றாமலே பதில் சொன்ன சிவக்கொழுந்து, "எனக்குப் புதுயோசனை தோன்றியிருக்கிறது!" என்றார்.

"என்னப் யோசனை," என்று வினவினான் சங்கர்.

சிவக்கொழுந்து ஆலமரத்து நிழலின் குளிர்ச்சியை நிகர்த்த பார்வையொன்றை சங்கரின் மீது வீசி "பட்டணத்துக்குப்போக உத்தரவு போட்டிருக்கிறார் நமது தலைவர்" என்றார், ஏதோ புது விஷயத்தை விவரிப்பவர் போல.

"ஆமாம்," என்றான் சங்கர் ஏதும் புரியாமல்.

"பட்டணத்துக்குப் போவது மட்டுமல்ல. அங்கு சித்தா... இல்லை... கலையழகியைப் பார்க்க வேண்டும்," என்று சுட்டிக் காட்டினார்.

"ஆம்." என்றான் சங்கர், எதற்காக நடந்த விஷயத்தைத் திருப்பிச் சொல்லுகிறார் சிவக்கொழுந்து என்பது புரியாமல்.

"பார்ப்பது மட்டுமல்ல, அவளை இந்த ஊருக்கு நடனத்துக்கு அழைக்க வேண்டும்."

"ஆமாம்."

"இந்தக் காரியம் லேசுப்பட்டதல்ல."

"சிறிது கஷ்டந்தான்."

"சிறிது என்ன? பட்டணத்து ஆகாயத்திலிருக்கும் நக்ஷத்திரத்தை இந்தக் கிராம மண்ணுக்கு இழுப்பது அத்தனைச் சுலபமல்ல அப்பா!"

"கஷ்டந்தான்," என்று மீண்டும் ஒப்புக் கொண்டான் சங்கர்.

"கஷ்டந்தான் என்ன? இது ஒருவர் தனிப்படச் சாதிக்கிற காரியமல்ல." என்று சொன்ன சிவக்கொழுந்துவின் குரலில் ஒரு நூதன ஒலி இருந்தது.

"உங்களால் முடியாத விஷயம் இல்லையென்று மருதநாயகம் எப்பொழுதும் சொல்வாரே," என்றான் சங்கர்.

"அதெல்லாம் பஞ்சாயத்து விஷயத்துக்கு. இந்த ஊர் வேறே, பட்டணம் வேறே. நாம் போகிற காரியத்துக்கு ஒருவருக்கு இருவராகப் போவதுதான் நல்லது."

"அப்படித்தான் செய்யுங்களேன்."

இதைக் கேட்ட சிவக்கொழுந்து, "செய்யுங்களேன் என்ன? செய்யத்தான் போகிறேன்" என்று மிகத் திட்டமாகச் சொன்னார். அத்துடன் நிற்கவில்லை. "என்னுடன் வரப்போவது யார் தெரியுமா?" என்றும் வினவினார்.

"திரு சாரதியா?" என்று கேட்டான் சங்கர்.

"என்னைவிட சாரதிப் பழம் பஞ்சாங்கம். அவரைப் பார்த்தாலே அந்த ரதி உள்ளே ஓடிவிடுவாள். அவர் வேண்டாம். உன்னையே அழைத்துப் போய்விடுகிறேன்," என்றார் சிவக்கொழுந்து.

சில விநாடிகள் பிரமித்து நின்றுவிட்டான் சங்கர். இவனும் அந்த இருபத்திரண்டு பிராயங்களில் பட்டணத்தின் பக்கம் போனதில்லை. அப்படிப் போக வாய்ப்புக் கிடைக்குமென்ற எண்ணத்திலேயே ஏற்பட்ட பிரமிப்பு, தான் சிவக்கொழுந்துவுடன் சென்று ஒரு நக்ஷத்திரத்தைப்



பார்க்கப் போகிறோம் என்ற எண்ணம் ஏற்பட்டதும் உச்சநிலையை அடையவே, "இதற்கு......மருதநாயகம்... ஒப்புக் கொள்வாரா?" என்று தட்டுத் தடுமாறிக் கேட்டான்.

"ஏன் ஒப்புக் கொள்ள மாட்டார்? ஒருவருக்கிருவராகச் சென்றால் பஞ்சாயத்துக்குப் பெருமைதானே?" என்றார் சிவக்கொழுந்து.

"பெருமை மட்டுமல்ல இதில். பணச் செலவும் இருக்கிறது. அதற்குப் பஞ்சாயத்து அனுமதி வேண்டுமே;" என்றான் சங்கர். அது மட்டுமல்லாமல் பஞ்சாயத்து விதிகளில் இரண்டையும் கட்டிக் காட்டி அந்தப் பணத்துக்கு ஆட்சேபணை வருமென்றும் சொன்னான்.

"பஞ்சாயத்து மருதநாயகம் தானே மாப்பிள்ளே? மருதநாயகம் தலையை ஆட்டினால் தீர்ந்தது விஷயம்," என்று விளக்கிய சிவக்கொழுந்து, "நீ புறப்படத் தயார் செய்துகொள். நானும் மருதநாயகத்தைப் பார்த்துச் சொல்லி விடுகிறேன்," என்று திட்டவட்டமாகக் கூறிவிட்டு வெயிலின் சூட்டையும் மனச் சூட்டையும் தணித்துக் கொள்ளக் குளத்தில் இறங்கினார்.

குளத்துக்குப் படிகள் ஏதுமில்லாததால் ஆலமரத்து வேரில் இருந்து மண்ணில் குதித்த சிவக்கொழுந்து, சரிவில் நடநடவென இறங்கி, தண்ணீரை அடைந்து மார்பளவு ஆழத்துக்குச் சென்று கழுத்துவரை அமிழ்த்திக்கொண்டார். அவர் நீரில் இறங்கிய துறையிலிருந்து பல அடி தூரத்தில் எட்ட இருந்து மற்றொரு கரையில் எருமைகளிரண்டைக் குளிப்பாட்டிக் கொண்டிருந்த பையன், அவர் இறங்கியதும் மாடுகளை அவசர அவசரமாக வைக்கோல் பிரியால் தேய்த்துக் கரையேற்றத் துரிதத்தைக் காட்டினான்.

"ஏலே! மாட்டை அவசரப்படுத்தாதே! சரியாகக் குளிப்பாட்டு," என்று அவனை நோக்கி அதட்டிய சிவக்

கொழுந்து, மிக உற்சாகத்திலிருந்தார் என்பதைக் கரையிலிருந்த சங்கர் புரிந்து கொண்டானாகையால், தான் பட்டணம் போவது நூற்றுக்கு நூறு நிச்சயம் என்ற நினைப்பில், "நான் வருகிறேன்" என்று விடைபெற்றுக் கொண்டான். "போய் வா'', என்பதற்கு அறிகுறியாகச் சிவக்கொழுந்து நீர்மட்டத்துக்கு மேலிருந்த தமது தலையை மட்டும் ஆட்டினார். பிறகு அத்துடன் அவனுடன் பேச வேண்டிய அவசியமில்லையென்பதைக் குறிக்கச் சட்டென்று தலையை நீரிலும் மூழ்கி மறைத்துக்கொண்டார். மறைத்துக்கொண்டது மட்டுமல்ல, காதுகளையும் மூக்கையும் விரல்களால் பொத்திச் சரேல் சரேலென்று எழுந்து எழுந்து அமிழ்ந்து அமிழ்ந்து வேகமாக முழுகினார். அப்படி அவர் மூழ்கியதால் எழுந்த குளத்தின் அலைகள் 'சளக்சளக்'கென்று கரையில் மோதி, "போய்வா, போய் வா," என்று சங்கருக்கு மீண்டும் மீண்டும் உத்தரவு கொடுத்தன.

மேலைக் குளக்கரையிலிருந்து தனது வீட்டுக்கு வந்த சங்கரின் மனம் ஒரு நிலையில் இல்லை. ஏதேதோ யோசனைகள் அவன் புத்தியைச் சின்னாபின்னப்படுத்திக் கொண்டிருந்தன. ஊர்ப் பெரியவர்கள் இருவரின் யோசனை தன்னை எத்தனை தூரம் குழப்பிவிட்டதென்பதை நினைத்தே பிரமித்தான் சங்கர். ஆண்டு விழாவுக்கு ராஸ்சாகிப்பையும் கலையழகியையும் அழைக்கத் திட்டமிட்டதன்றி தன் இசைத்திறனுக்கும் இடமளித்த மருதநாயகத்தின் ஏற்பாட்டை நினைத்தே குழம்பிக் கிடந்த அவன் மனத்தை, சிவக்கொழுந்துவின் யோசனை பன்மடங்கு அதிகமாகக் குழப்பிவிட்டிருந்ததால், வீட்டுக்கு வந்ததும், வாயிற்படியில் தன் வரவை நோக்கிக் காத்திருந்த தனது மனைவியைக்கூட அவன் சரியாகக் கவனிக்கவில்லை. சாதாரணமாக அவளை இழுத்துக்கொண்டு உள்புகும் சங்கர் அன்றும் அப்படித்தான் நுழைந்தான். ஆனால் எங்கோ யோசனையுடன் இருந்த அவன் தோள்



தன்மீது அகஸ்மாத்தாகக் காரணமில்லாமல் பட்டதே யொழிய அதில் இன்ப நினைவுகள் கலக்கவில்லை என்பதை நொடிப்பொழுதில் புரிந்துகொண்டாள் ஜெயம். தன்னை வாயிற்படியில் பார்த்ததும் அவன் நடையில் ஏற்படும் மிடுக்கு, பார்வையில் தெறிக்கும் விஷம ஆசை, அகஸ்மாத்தாக மேலே பட்டுவிட்டதுபோல் வேண்டுமென்றே அவள் தோளை இடிக்கும் முறை, இவையனைத்தையும் அணு அணுவாக அறிந்திருந்த ஜெயம், அன்று அவன் தோள் உராய்ந்தபோது அந்தப் பழைய துணை அம்சங்கள் ஏதுமில்லாமல் இருந்ததைக் கவனித்தாள். அன்று அவன் தன்னைவிட்டு வாயிற்படிமீது மோதியிருந்தாலும் அதே சுரணைதான் அவனுக்கு இருந்திருக்குமென்பதைப் புரிந்து கொண்டாள்.

அவனைப் பின்பற்றி உள்ளே சென்றபிறகு அவள் நினைப்பு ஊர்ஜிதமாயிற்று. அன்று பாவாடைகூட இல்லாமல் இருந்த அந்த வெள்ளை குண்டு மது, ஓடிவந்து காலைக் கட்டிக்கொண்டபோது இயற்கையாக, அவன் தூக்கும் பாணியில் அன்று அவன் அதைத் தூக்கவில்லை. சாதாரண நாட்களில் மது அப்படித் தோன்றினால், அதை எடுத்து அதன் கன்னத்தைக் கடித்தும் தொப்பையில் முகத்தைப் புதைத்தும் அவன் செய்யும் இம்சை தாங்கமுடியாதது. தொப்பையில் அவன் முகத்தைப் புரட்டியபோது மது கலகலவென்று பெரிதாகச் சிரிக்கும் சத்தத்தின் ஒலிகளில் சங்கர் பரவசப்படுவது வழக்கம். அந்த வழக்கமெல்லாம் அன்றும் இருந்தது. ஆனால் அவை வெறும் சம்பிரதாயத்துக்காகச் செய்யப்பட்டது போலிருந்தது ஜெயத்துக்கு. கடைசியில் மதுவை ஜெயத்தின் கையில் கொடுத்து விட்டு, நேராக விசுபலகையில் சென்று சுருட்டிவைத்த மெத்தைமீது சாய்ந்து கொண்டான் சங்கர்.

ஜெயம் விசுபலகைக்கு எதிரில் வந்து நின்றுகொண்டாள். "உடம்புக்கு ஏதாவது..." என்று துவங்கினாள் கவலையுடன்.

"எதுவும் இல்லை," என்றான் அவன்.

'எதுவும் இல்லையென்றாலும் ஏதோ இருக்கிறது' என்பதைப் புரிந்துகொண்ட ஜெயம் அவனைச் சாப்பிட அழைத்து உணவு பரிமாறினாள். அவன் மீண்டும் விசுபலகையில் வந்து படுத்தான். அன்று ஞாயிற்றுக்கிழமையாகையால் அவன் ஆபீசுக்கோ வேறு இடங்களுக்கோ போகத் தேவையில்லாதிருந்தது. ஆகவே ஜெயம் தானும் உணவு அருந்தியதும் உள்ளே வந்து குழப்பத்துக்குக் காரணத்தை மெள்ள மெள்ள விசாரித்தாள்.

நடந்ததை மெள்ள மெள்ள விவரமாக எடுத்துச் சொன்னான் சங்கர். அதைக்கேட்ட ஜெயலக்ஷ்மியின் முகத்தில் ஆனந்தக் குறி படர்ந்தது. தன் கணவனின் மதிப்பு அந்த ஊரில் எத்தனை தூரம் உயரும் என்பதை அவள் அறிந்துகொண்டாள். சங்கீதம், நடனம், இவற்றில் சம்பந்தப்பட்டவர்களுக்கு மற்ற யோக்கியதைகள் முன் பின்னிருந்தாலும் பெரிய பெரிய உத்தியோகங்கள் கிடைத்திருப்பதை அவள் உணர்ந்தாள். விழாவில் பட்டணத்துப் பெரிய மனிதர் முன்பு சங்கர் பாடிவிட்டால், அதை சாக்காக வைத்துக்கொண்டு மருதநாயகம் சங்கருக்கு ஹெட் கிளார்க் வேலைகூடப் போட்டுக் கொடுத்துவிடலாமென்று நினைத்தாள் அவள். ஹெட்கிளார்க்கின் மனைவியென்பதால் தன் பெயர் எத்தனை உயரும், மதுவின் மதிப்பு, பிற்காலம் எல்லாம் எத்தனை வளம் பெறும் என்றெல்லாம் எண்ணிப் பூரித்தாள் அவள். ஆகவே சொன்னாள், "ஏதோ முருகன் கண்ணைத் திறந்துவிட்டார்," என்று.

ஆமென்பதற்கு அறிகுறியாகச் சங்கர் தலையை ஆட்டினான். அது மட்டுமல்ல, குழம்பிக் கிடந்த தன் உள்ளத்துக்கு ஆதரவைத்தேட விசுபலகை ஓரத்தில் ஜெயத்தை உட்காரச் சொல்லி அவள் காலுக்கு அருகில் தன் தலையை நகர்த்திப் புதைத்துக் கொண்டான். அந்தக்



காலுக்குத்தான் எத்தனை சக்தி! அது எத்தனை சாந்தியை அளித்தது அவனுக்கு!

அதே சாந்தியை மேலைக் குளத்து நீரில் பெற்ற சிவக்கொழுந்து, விடுவிடுவென்று வீட்டையடைந்து சிவ பூஜையை முடித்துக்கொண்டு, உணவருந்தி மருதநாயகத்தை தேடிச் சென்றார். வீட்டில் மருதநாயகத்தைப் பிடிப்பதோ தன்னிஷ்டத்துக்கு அவரை வளைப்பதோ ஒரு பிரமாதமில்லை சிவக்கொழுந்துவுக்கு. மருதநாயகத்தைப் போலவே சிவக்கொழுந்துவும் சில விஷயங்களில் பெரும் பிடிவாதக்காரர். ஆகவே மருதநாயகம் அவரிஷ்டத்துக்கு இணங்கியதன்றி, அன்று மாலையே சங்கருக்கு ஆள்விட்டு அவனைச் சிவக்கொழுந்துவுடன் சென்னைக்குச் செல்லுமாறு பணித்தார்.

எடுத்த காரியம் எதுவாயிருந்தாலும் அதைத் திட்டமிட்டு முடிக்கவல்ல சிவக்கொழுந்து, பட்டணத்திலிருந்த தமது மகனுக்குத் தாம் வருவதுபற்றிக் கடிதம் எழுதி, தன்னை ஸ்டேஷனில் சந்திக்கும்படி கூறியிருந்தார். இரண்டு நாட்களுக்குப் பின்பே புறப்பட்ட அவர், இரண்டு நாட்களிலும் அது சம்பந்தமாகப் பேசிப்பேசி சங்கரின் பிராணனை வாங்கினார். அதுமட்டுமல்ல தமாஷ் செய்வதாக நினைத்து, ஜெயம் இருக்கையிலேயே, "அம்மா! மாப்பிள்ளையை உஷார்ப்படுத்தி யனுப்பு! நக்ஷத்திரத்தைப் பார்த்துக் குட்டிச் சுவராகிப் போனவர்கள் கணக்குக் கொஞ்ச நஞ்சமல்ல. பார்த்து வாயைப்பிளக்கப் போகிறார்," என்றார்.

சங்கரிடம் குடிக்கொண்டிருந்த பீதியை நன்றாக உணர்ந்திருந்த ஜெயம் சங்கரைப் பார்த்துச் சிரித்தாள். "இவர் நம் பாட்டுக்காரர், அவளும் நாட்டியமாடுகிறாள். இரண்டு பேருக்கும் பொருத்தந்தானே? எனக்குப் பாடத்தெரியுமா, ஆடத் தெரியுமா?" என்றும் கூறினாள்.

சிவக்கொழுந்து ஜெயத்தைச் சில விநாடிகள் பார்த்தார், "குடும்பப் பெண்ணுக்கு ஆட்டமெதற்கு, பாட்டு எதற்கம்மா ? உன் கண்கள் பாடும் பாட்டை அவன் பாட முடியுமா ! உன் நடையிலிருக்கும் அழகு அவன் காலைத் தூக்கியும் சுழற்றியும் குதித்தும் ஆடும் ஆட்டத்தில் தானுண்டா ?" என்ற அவர், ஏதோ சிந்தனையுடன் சொன்னார், "பயப்படாதே ! மாப்பிள்ளையைக் குண்டு கட்டாகக் கட்டி இங்கு கொண்டுவந்து போடுகிறேன்," என்று.

இப்படித் தைரியத்துடன்தான் கிளம்பினார் சிவக்கொழுந்து, பட்டணத்துக்கு. ஆனால் அங்குச் சென்றதும் அவர் நிலை ? அதை அவராலேயே புரிந்துகொள்ள முடியவில்லை. கலையழகி வீட்டை அடைந்ததும் தத்தளித்தார் சிவக்கொழுந்து. அவளைப் பார்த்ததும் பிரமித்தது சங்கர் மட்டுமல்ல, சிவக்கொழுந்துவும் எல்லை மீறித் திகைத்தார். அவளைச் சந்தித்த சில விநாடிகளுக்குள் சிவக்கொழுந்துவின் மனத்தில் பெரும் சந்தேகம் ஒன்று எழுந்தது. குலக்கண்ணுக்கும் கலைக்கண்ணுக்கும் இருந்த வேறுபாட்டைப் பற்றிய சந்தேகம் அது.

## ௯. சிவக்கொழுந்தின் சாதனை, சம்பந்தத்தின் வேதனை

சென்னையில் கலையழகியைப் பார்த்து சிவக்கொழுந்து திகைத்தாரென்றால், அதற்குப் பூர்வாங்கமாகச் சென்னையைப் பார்த்தே பெரும் திகைப்படைந்தார். தன் மகனின் பழக்க வழக்கங்களில் ஏற்பட்ட மாறுதலின் காரணமாக ஏற்கெனவே சென்னையைப் பற்றி ஓரளவு வெறுப்படைந்திருந்த சிவக்கொழுந்து, சென்னையை நேரில் பார்த்ததும் அதைப்பற்றிய



வெறுப்பை நூறு மடங்கு அதிகமாக உயர்த்திக் கொண்டார்.

சிறுவயலை விட்டுக் கிளம்பும்போது உண்மையில் சென்னையைப் பற்றி அத்தனை வெறுப்புடன் கிளம்பவில்லை சிவக்கொழுந்து. அவர் கிளம்பிய சமயத்தில் இருந்த இன்பச் சூழ்நிலை சென்னை மீது அவருக்கிருந்த வெறுப்பை ஓரளவு குறைத்துக்கூட இருந்தது. அவர் புறப்படும் நாளன்று காலை முதலே அவரது பயண ஏற்பாட்டைச் செய்ய முற்பட்ட அவரது மனைவி, கணவன் ஏதோ லண்டனுக்குப் போகிறவர்போல் பரபரப்பை நாள் முழுதும் காட்டினாள். பழைய துருப் பிடித்த இரும்புக் கைப்பெட்டியையும் எடுத்து வைத்ததன்றி, மேலைக்குளம் சென்று வெண்கலக் கூஜாவையும் பளபளவென்று துலக்கி நீர் கொண்டு வந்திருந்தாள். அது மட்டுமின்றி பட்டணத்திலிருக்கும் தன் மகனுக்கென்று இரண்டு நாட்களாக மாவரைத்துச் சுற்றிய முறுக்கையும் பயற்றுமா உருண்டைகளையும் பாத்திரத்தில் போட்டு, அதையும் துணியில் தனியாகக் கட்டி வைத்தாள். இப்படிச் சிறுகச் சிறுக இன்னும் நாலைந்து சாமான்களையும் ஏற்பாடு செய்துவிட்ட சிவக்கொழுந்துவின் மனைவி, மாலையில் ஒற்றை மாட்டு வண்டி வந்து வாசலில் நின்றதும், சாமான்களை இரண்டு மூன்றாக வண்டியில் ஏற்றினாள்.

இதை யெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த சிவக்கொழுந்து, "ஏண்டி ! என்னை என்னன்னு நினைச்சுக்கிட்டிருக்கே ?" என்று வினவினார்.

"நினைக்கிறதுக்கு என்னாங்க இருக்கு இதிலே ?" என்றாள் அவர் மனைவி.

"என்னை கூட்ஸ் வண்டின்னு நினைச்சுக்கிட்டிருக்கையா ?" என்றார், சாமான்களின் எண்ணிக்கை மீது கண்களை ஓட்டிய சிவக்கொழுந்து.

சிவக்கொழுந்துவின் மனைவி தன் முன் யோசனையையும் காட்டத் தொடங்கி, "நீங்க மட்டும் போறதாயிருந்தா இத்தனை சாமானைத் தயார் செய்வேனா? நம்ப மருமகப் பிள்ளையும்கூட வர்றாரில்லே?" என்றாள்.

"சங்கர் தலைமேலே சாமானைக் கட்டச் சொல்றையா? அவனை என்ன போர்ட்டர்னு நினைச்சுக்கிட்டிருக்கியா?" என்று வினவினார் சிவக்கொழுந்து.

"யார் அப்படிச் சொன்னது? ஆளுக்குக் கொஞ்சம் தூக்கிக்குங்க," என்றாள் அவர் மனைவி.

"அப்படியா! ஆமாம் ஆமாம். இரண்டு போர்ட்டர்களுக்குச் சாமானிருக்கு," என்று சிரித்துக்கொண்டே சிவக்கொழுந்து ஒற்றை மாட்டு வண்டியில் தாவி உட்கார்ந்து, "டேய், வண்டியைச் சங்கர் வீட்டுக்கு விடு," என்று உத்தரவு பிறப்பித்தார்.

வண்டி நகர்ந்த பின்பும் விடாத அவர் மனைவி, ஏற்கெனவே பட்டணத்திலிருந்து வாங்கிக் கொண்டு வரக் கொடுத்திருந்த ஜாபிதாவை நினைத்துக் கொண்டு, "மறந்துட்டேன். கந்தசாமி கோயில்கிட்டே இருந்து கொஞ்சம் பெருங்காயமும் வாங்கியாங்க" என்று உஷார்ப்படுத்தி அனுப்பினாள்.

கந்தசாமி கோயில் எங்கிருக்கிறதென்பதை அறியாத சிவக்கொழுந்து, "ஆகட்டும் ஆகட்டும்," என்று வண்டியில் உட்கார்ந்தபடியே கூச்சல் போட்டுக்கொண்டே சென்றார்.

மனைவியின் ஏற்பாடுகளாலும் எச்சரிக்கைகளாலும் அவள் கொடுத்த ஜாபிதாவினாலும் மிகுந்த மனமகிழ்ச்சியுடன் வீட்டிலிருந்து கிளம்பிய சிவக்கொழுந்துவுக்கு, சங்கர் வீட்டிலும், சிறிது காலதாமதம் ஆகியது. ஆறு மணிக்கே சங்கரைத் தயாராயிருக்கும்படி சிவக்கொழுந்து உத்தரவு அனுப்பியிருந்தும், வண்டிவந்து அவன் வீட்டு



வாசலில் நின்ற பின்பும் அவன் வெளிவராததால், "மாப்பிள்ளை! மாப்பிள்ளே!" என்று குரல் கொடுத்ததன்றி வண்டியிலிருந்து குதித்துவந்து வாசல் திண்ணையிலும் சற்று உட்கார்ந்தார்.

"இதோ வந்துவிட்டேன்," என்று உள்ளேயிருந்து சங்கர் குரல் கொடுத்தான்.

ஜெயம் விடுவிடுவென்று ஒரு பெட்டியைக் கையிலும், இடுப்பில் மதுவையும் தூக்கிக்கொண்டு வந்து, பெட்டியைத் திண்ணையில் வைத்து, "இதைப் பிடியுங்கப்பா அவரை அனுப்புகிறேன்," என்று மதுவை அவர் மடியில் உட்கார வைத்து உள்ளே சென்றாள்.

அடுத்தபடி இரண்டு பைகள் வெளியே வந்தன. அவற்றைக் கொண்டு வைத்துப்போன பின்பும் சங்கரும் வரவில்லை, ஜெயத்தையும் காணோம். "என்ன செய்கிறார்கள்?" என்று தனக்குள்ளேயே கேட்டுக்கொண்ட சிவக்கொழுந்து மதுவின் தலையை மெள்ள தடவிக் கொடுத்தார்.

சங்கர் உண்மையில் முக்கியமான அலுவலில்தான் ஈடுபட்டிருந்தான். ஜெயத்திடம் விடைபெறும் அலுவல் அது. காமிரா உள்ளுக்குள் வந்த ஜெயத்திடம் கேட்டான் சங்கர், "சாமான்களெல்லாம்..." என்று

"திண்ணையில் வைத்துவிட்டேன்," என்று வாசகத்தைப் பூர்த்தி செய்த அவள், என்ன காரணத்தாலோ முகத்தை நிலத்தை நோக்கித் தாழ்த்தினாள்.

சங்கர் இதயத்தில் விவரிக்க இயலாத வேதனையிருந்தது. அவளை அணுகி அவள் தோள் மீது ஒரு கையை வைத்து இடையில் இன்னொரு கையைத் தவழவிட்டு அவளைத் தன்னை நோக்கி இழுத்து, "வரட்டுமா?" என்று கேட்டான்.

ஜெயம் பதிலேதும் சொல்லவில்லை. அவன்மீது பல மாகச் சாய்ந்த அவள் உடல், 'வேண்டாம்' என்று பதில் சொல்வது போலத் தோன்றியதால் சங்கர் மீண்டும் சொன்னான், "இரண்டே நாள் தானே ஜெயம் !" என்று.

அப்பொழுதும் பதில் சொல்லாத ஜெயம், தன் கை யொன்றால் இடையை இறுக்கிய அவன் கையை இறுகப் பிடித்துக் கொண்டாள்

"சரி விடு, வருகிறேன். நான் என்ன அமெரிக்காவுக்கா போய்விடுகிறேன் ?" என்று தைரியம் சொன்னான் சங்கர்.

ஜெயம் தன் கண்களை உயர்த்தி அவனை நோக்கினாள். தாய்மையும் கவலையும் நிரம்பிய கண்கள், அவன் கண்களைக் கௌவி நின்றதால் நகரச் சக்தியற்ற சங்கரன் அவள் கன்னத்தை நோக்கிக் குனிந்தான். இந்தச் சமயத்தில், "என்ன மாப்பிள்ளே ? என்ன செய்கிறீங்க உள்ளே ?" என்று சிவக்கொழுந்துவின் குரல் இடைபுகுந் திராவிட்டால், கண்டிப்பாய் அன்று ரயில் தப்பியிருக்கும் அவர்களுக்கு. சிவக்கொழுந்துவின் இடையீடு அத்துடன் நிற்கவில்லை.

"மாப்பிள்ளையை விடும்மா. ரயிலுக்கு நாழியாகுது." என்ற அவர் நகைச்சுவைக் கூற்று சங்கரைச் சங்கடத்துடனும், ஜெயத்தை நாணத்துடனும் வெளியே கொணர்ந்தது. அவர்கள் வந்த முறையிலேயே உள்ளே நடந்ததை ஊகித்துக் கொண்ட சிவக்கொழுந்து. அர்த்த புஷ்டியுடன் புன்முறுவல் செய்து, "உம் உம்" என்று உறுமி, தமது கட்டுக் குடுமித் தலையையும் ஆட்டினார்.

அவர் உறுமலையும் தலையாட்டலையும் கண்ட ஜெயத்தின் முகத்தில் நாணம் அதிகமாகப் பரவி நின்ற தால், அவள் முகம் மிக அழகாகத் தெரிந்தது. மதுவைச் சிவக்கொழுந்துவிடமிருந்து வாங்கி ஜெயத்திடம் சங்கர் கொடுத்த போது. மதுவுக்கும் அவள் உடலுக்குமிடையே



சிக்கிவிட்ட சங்கரின் கைகளிரண்டும் அவசியத்துக்கு அதிகமாகத் தாமதித்ததால் அவள் லேசாக அசைந்து ஆசையெல்லாம் அள்ளிக் கொட்டிய பார்வையொன்றை யும் கணவன் மீது வீசினாள். சிவக்கொழுந்துவின் குறும்புக் கண்கள் இவையனைத்தையும் கவனிக்கத் தவறாத தால் அக்கண்கள் வெளிப்படையாக நகைத்தன. இப்படித் தன் வீட்டிலும் சங்கர் வீட்டிலும் இரு வித, முற்றும் மாறான, ஆனால் இன்பமான சூழ்நிலையில் பிரியா விடை பெற்றுக்கிளம்பி ரயிலேறிய சிவக்கொழுந்து மறு நாட் காலை சென்னை வந்ததும், முதலில் பிரமிப்படைந் தார். பிறகு வெறுப்படைந்தார்.

முன்பே சிவக்கொழுந்து கடிதம் எழுதியிருந்தபடியால் அவரையும் சங்கரையும் எழும்பூர் ஸ்டேஷனிலேயே சந்தித்த சிவக்கொழுந்துவின் மகன் சம்பந்தம், அவர் களைத் தன் ஹாஸ்டல் ரூமுக்கு அழைத்துப்போக டாக்ஸி ஏற்பாடு செய்திருந்தான். எழும்பூர் ஸ்டேஷனையும் வண்டியிலிருந்து இறங்கிய மனிதக் கூட்டத்தையும் போர்ட்டர்களின் பரபரப்பையும் கண்ட சிவக்கொழுந்து, 'இப்படியும் ஒரு ஸ்டேஷனிருக்க முடியுமா ?' என்று எண்ணி வாயைப் பிளந்தார். பிறகு சாமான்களிரண்டைக் கையில் எடுத்துக் கொண்டு, சங்கரை நோக்கி, "மாப்பிள்ளே, பெட்டியை எடுத்துக்குங்க," என்று உத்தரவு போட்டார்.

சம்பந்தத்துக்கு இது வெகு அவமானமாயிருந்ததை அவன் முகம் காட்டியது. "வேண்டாமப்பா ! நீங்க சும்மா சாமானைக் கீழே வையுங்க," என்ற அவன் குரலிலும் அந்த வெட்கம் பிரதிபலித்தது.

"ஏண்டா ?" என்று கேட்டார் சிவக்கொழுந்து.

"போர்ட்டரைக் கூப்பிடுகிறேன்," என்றான் சம்பந் தம்.

"ஏன், நம்மாலே தூக்க முடியாதோ ?"

"முடியும் முடியும்," என்று முணு முணுத்த சம்பந்தம், அவரை மேற்கொண்டு பேசவிடாமல், "போர்ட்டர்! போர்ட்டர்!" என்று ஒரு போர்ட்டரை அழைத்து, சாமான்களை எடுத்துக் கொள்ளச் சொன்னான்.

அனாவசியமாக ஐந்தாறு சின்னச் சாமான்களுக்குப் போர்ட்டர் எதற்கு என்பதைப் புரிந்து கொள்ள முடியாத சிவக்கொழுந்து போர்ட்டர் சாமானைத் தூக்க முற்பட்டதும், "ஏண்டா சம்பந்தம், கூலி பேசவில்லையே?" என்றார்.

யாருடன் பேசுகிறோமென்பதை மறந்த சம்பந்தம், "நாட் நெஸஸரி," என்று ஆங்கிலத்தில் சொன்னதும் சிவக்கொழுந்து அவனைச் சுடுகையுடன் பார்த்தார்.

அதைக் கவனிக்காத சம்பந்தம் விடுவிடு என்று சாமான்களைத் தூக்கிச் சென்ற போர்ட்டருடன் ஓடி, சிவக்கொழுந்துவையும், சங்கரையும் வருமாறு ஜாடை காட்டிச் சென்றான். இப்படிப் போர்ட்டருடன் ஓடிய சம்பந்தம், தன்னையும் சங்கரையும் டாக்ஸியில் ஏற்றி விட்டு, பர்ஸிலிருந்து இரண்டு ரூபாய் நோட்டை எடுத்துப் போர்ட்டரிடம் அலட்சியமாகக் கொடுத்து விட்டு, டாக்ஸியில் ஏறிக் கொண்டதைக் கண்ட சிவக்கொழுந்துவுக்குப் பிராணன் போய் விடும் போலிருந்தது. தான் ஊரில் பாடுபட்டுப் பயிர் செய்து சம்பாதித்து அனுப்பும் பணம், அந்தப் பயிருக்குப் பாயும் கால்வாய் ஜலத்தை விட அதிக வேகத்தில் விரயமாவதைக் கவனித்து பிள்ளையாண்டான் இன்னும் இரண்டு வருடங்கள் படித்தால், தான் அநேகமாக இன்ஸால்வெண்டு கோர்ட்டில் ஆஜராக வேண்டியிருக்குமென்று தீர்மானித்துக் கொண்டார்.

வந்த முதல் நாள் சம்பந்தம் அடித்த கொட்டமும் செலவழித்த பணமும் சிவக்கொழுந்துவினால் தாங்க



முடியவில்லையாதலால், முதல் நாள் பிள்ளையை இஷ்டப்படி விட்ட அவர், மறுநாள் முதற்கொண்டு தமது பிடிப்பை இறுக்கினார். முதல் நாள் சென்னையைப் பார்த்தவுடன் ஏற்பட்ட பிரமிப்பு அடுத்த நாள் வெறுப்புக்கு இடம் கொடுக்கவே, அவர் பிடிவாதமும் பேச்சும் மிகக் கண்டிப்பாயிருந்தன. அவர் சுபாவத்தை அறிந்திருந்த சம்பந்தம் அவரை மெள்ள அடக்க முற்பட்டுப் பெரிதும் சங்கடத்திற்குள்ளானான். ஹாஸ்டல் அறைக்கு வந்து சாமான்களை வைத்ததும் தமது முழுக்கைச் சட்டையைக் கழற்றி விட்டு அதன் உள் பையிலிருந்த பழைய மணிபர்ஸை மடியில் கட்டிக் கொண்டு அறைக்கு வெளியே வந்த சிவக்கொழுந்து, அந்த ஹாஸ்டல் முழுவதும் கண்களை ஓட்டி அதன் சுத்தத்தைக் கண்டு ஓரளவு திருப்தியும் அடைந்தார். ஆனால் அந்தத் திருப்தி இரண்டே விநாடிகளில் பறந்தது.

சம்பந்தத்தின் அறைக்குப் பக்கத்தறையிலிருந்து வெளி வந்த ஒரு மாணவன் கையிலிருந்த சிகரெட்டுடன் கை கூப்பி, "நீங்கதான் சம்பந்தத்தின் ஃபாதரா?" என்று கேட்டான்.

"ஆமாம்," என்ற சிவக்கொழுந்து, "பாய் எந்த ஊரோ?" என்று வினவினார்.

அதற்குள் அறையிலிருந்து ஓடி வந்த சம்பந்தம், "அப்பா! அப்பா! அவர் பாய் அல்ல," என்று தவறைத் திருத்தினான்.

"பாய் இல்லையா?" என்றார் சிவக்கொழுந்து வியப்புடன்.

"இல்லை."

"நம்மூர் மரக்காயர் உடுத்தற லுங்கியைக் கட்டியிருக்கிறாரே?"

இந்தக் கேள்விக்குச் சம்பந்தம் பதில் சொல்வதற்கு முன்பு அந்த மாணவனே பதில் சொன்னான். "இது

கட்டிக்க சௌகரியமாயிருக்குன்னு கட்டிக்கிறேன்," என்று.

"நம்ம நாலு முழம் வேஷ்டி சௌகரியமில்லே போலிருக்கு?" என்று வினவினார் சிவக்கொழுந்து விஷமத்துடன்.

"இல்லே."

"ஏன்?"

"இதைச் சுத்திந் தைத்திருக்காங்க. இதுக்குள்ளே புகுந்துக்கலாம்."

"அப்படியா!"

"ஆமாங்க, அது மட்டுமல்ல."

"வேறு குணாதிசயங்களும் உண்டு போலிருக்கு?"

"ஆமாங்க. அழுக்குப் பட்டா தெரியாது," என்ற அந்த மாணவன், கையிலிருந்த சிகரெட்டின் நுனிச் சாம்பலை உதிர்க்க இருமுறை சிட்டிக்கை போட்டான்.

சிவக்கொழுந்துவின் உள்ளத்தில் வெறுப்புத் தலை தூக்கியது. "அழுக்கை மறைக்கத்தான் பார்க்கிறான் இவன். சென்னையே படாடோபத்தில் தன் அழுக்கை மறைக்கிறது போலிருக்கிறது," என்று உள்ளூர எண்ண மிட்ட அவரைச் சம்பந்தம், "வாங்கப்பா! குளிக்கலாம்," என்று அவசர அவசரமாக அழைத்துக் கொண்டு போய் விட்டான்.

சம்பந்தத்தின் நிலை அன்று பூராவும் மிகவும் சங்கடத்திலிருந்தது. சிவக்கொழுந்து அவனிஷ்டத்துக்கு இணங்க மறுத்ததன்றி, அநாகரீகமாகவும் விஷயம் புரியாமலும் பல கேள்விகளைக் கேட்டார். கலையழகி வீட்டுக்குப் போக அவன் டாக்ஸி கொண்டு வர முயன்ற போது, அவனைத் தடுத்து, "வேண்டாம். பஸ்ஸில் போகலாம்," என்றார்.



"அப்பா, நக்ஷத்திரத்தின் வீட்டுக்குப் பஸ்ஸிலே போகக் கூடாதப்பா," என்று கெஞ்சிப் பார்த்தான் சம்பந்தம்.

"ஏண்டா?"

"அது மதிப்புக் குறைச்சலப்பா."

"யார் மதிப்பு?"

"நம்ம மதிப்பு."

"பணம் என்னுதடா."

"அதனாலே என்னப்பா?"

"அதைச் செலவழித்து மதிப்பை வாங்கச் சொல் றையா?"

சம்பந்தம் பதில் சொல்லத் தெரியாமல் விழித்தான். "டேய் சம்பந்தம்!" என்றார் மீண்டும் சிவக்கொழுந்து.

"ஏம்பா!"

"நீ இங்கே மதிப்பா யிருக்கையா?"

"இருக்கிறேம்பா."

"எதனாலே தெரியுமா?"

"சொல்லுங்க."

"நான் ஊரிலேயிருந்து பணம் அனுப்பறதினாலே. அங்கே என் கை வறண்டா இங்கே உன் மதிப்பு வறண்டு போகும். பஸ்ஸையே பார் தம்பி," என்று உஷ்ணமாகச் சொல்லி, சங்கர் சகிதம் பஸ்ஸுக்குச் சென்றார்.

பஸ்ஸில் ஏறிய பின்பும் சிவக்கொழுந்து சும்மா இல்லை. அதை ஒரு முறைத் தன் கண்களால் அளவெடுத் தார். பிறகு பஸ்ஸிலிருந்த ஒருவரை வியப்புடன் நோக்கி அழைப்பும் விடுத்தார். அவ்வளவுதான்; பஸ்ஸிலிருந்த

அத்தனைக் கண்களும் சிவக்கொழுந்துவை நோக்கின. அது பெரும் சாதனை தான். ஆனால் சம்பந்தத்துக்கு அது தந்த வேதனை சொல்லத் தரமல்லாதது.

## 10. கலையழகி

கலையழகி வீட்டுக்குச் செல்ல சங்கருடனும் சம்பந்தத்துடனும் சிவக்கொழுந்து பஸ்ஸில் ஏறியபோது அத்தனைக் கூட்டமில்லையென்றாலும், அடுத்த இரண்டு 'ஸ்டாப்பு'களில் நிரம்பக் கூட்டம் ஏறிவிட்டது. பலதரப்பட்ட அந்தக் கூட்டத்தையும், அதன் வினோத உடைகளையும், பாவனைகளையும் விசித்திரக் கண்களுடன் பார்த்த சிவக்கொழுந்து, பஸ்ஸில் ஏறியவர்கள் அலுவலுக்குச் செல்லும் சாதாரண மனிதர்களா, நாடகப் பாத்திரங்களா என்று எண்ணினார். அவர் பார்த்த பார்வையையும் அதன் விளைவாக அவர் முகத்தில் விரிந்த வியப்பையும் கண்ட சம்பந்தம், தந்தை தன் சொரூபத்தைக் காட்டிவிடப் போகிறாரே என்று பயந்திருந்த சமயத்தில், சிவக்கொழுந்து தமது திறமையைக் காட்டி விட்டார். தன் பக்கத்தில் உட்கார இடமிருந்ததாலும் பல பேர் அனாவசியமாக நின்றிருந்ததாலும் அவர்களில் வாலிப வயதுள்ள ஒருவரை நோக்கி, "தம்பி ! ஏன் நிக்கறே ? வா. இப்படி வந்து உட்கார்" என்று அழைத்தார் சிவக்கொழுந்து. அவ்வளவுதான். பஸ்ஸிலிருந்த அனைவரும் ஏதோ மிருகக் காட்சி சாலையில் வந்துள்ள புது மிருகத்தைப் பார்ப்பது போல் சிவக்கொழுந்துவைப் பார்த்தார்கள். அவர்கள் மட்டுமல்ல, எந்த நபரைச் சிவக்கொழுந்து உட்கார அழைத்தாரோ அவரும் அதே வியப்புடன் சிவக்கொழுந்துவை நோக்கினார். சம்பந்தத்துக்கு மானம் போய் விடும் போலிருந்தது. அவன் சிவக்கொழுந்துவின் காதுக்கருகில் குனிந்து, "அப்பா ! சும்மா இருங்கப்பா," என்றான் மெள்ள.



"ஏண்டா ? நான் இப்ப என்ன சொல்லி விட்டேன் ?" என்றார் சிவக்கொழுந்து தமது குரலின் ஒலியைக் குறைக்காமல்.

"நீங்க கூப்பிட்டீங்களே..." என்று இழுத்தான் சம்பந்தம்.

"ஆமாம்."

"அது தம்பி இல்லையப்பா."

"அப்படியா !"

"ஆமாம்ப்பா, அது ஒரு பொண்ணு."

"பொண்ணா !" சிவக்கொழுந்துவின் விழிகள் ஆச்சரியத்தால் மலர்ந்தன. மீண்டும் அந்த நபரைப் பார்த்துக் கொண்டே, "ஏண்டா சம்பந்தம் ? நிஜார், ஷர்ட், அங்கவஸ்திரம் எல்லாம் போட்டிருக்கேடா. இதைப் போய்ப் பொண்ணுங்கறையே ?" என்றும் வினவினார்.

இதைக் கேட்ட அந்தக் காலேஜ் மாணவி பெரிதும் சங்கடப்பட்டாள். பஸ்ஸிலிருந்த சிலர் அவளையும் பார்த்து, சிவக்கொழுந்துவையும் பார்த்துப் புன்முறுவல் கொண்டார்கள். சம்பந்தத்தின் நிலைமை விவரிக்க இயலாததாயிருந்தது. "அப்பா ! அது நிஜார், ஷர்ட், அங்கவஸ்திரம் இல்லையப்பா," என்று மன்றாடினான்.

"பின்னே என்ன ?" என்று வினவினார் சிவக்கொழுந்து.

"நிஜார் ஷர்ட் மாதிரி இருப்பது சல்வார் கம்மீஸ். மேலே போட்டிருக்கிறது ஓட்னி. இது பஞ்சாபி உடை," என்று விளக்கினான்.

"இந்தப் பொண்ணு பஞ்சாபியா ?" என்று கேட்டார் சிவக்கொழுந்து.

"இல்லை, நம்பலங்கதான்."

"அப்ப ஏண்டா பஞ்சாபி மாதிரி இதெல்லாம் போட்டுக்கணும் ?"

"பாஷன் !"

''என்ன, பாஷனா ?''

''அதாம்ப்பா, நாகரிகம்.''

"நாகரிகமா !" என்று சிலக்கொழுந்து மேலே எதுவும் பேசவில்லை. அவரது பக்கத்தில் சம்பந்தத்தை உட்காரச் சொல்லி நகர்ந்து இடம் விட்டுப் பஸ்ஸில் நிரம்பிக் கொண்டிருந்த கூட்டத்தைக் கவனிக்கலானார்.

பல 'ஸ்டாப்'புகளில் பஸ்ஸில் ஏறும்போதே பஸ்ஸின் மீது தாவியும் இடித்துக் கொண்டும் நாகரிகக் குறைவாக ஆபீசர்களும் மாணவர்களும் ஏறிக் கொண்டிருந்தார்கள். 'போட்' கழுத்தும், 'வி' கழுத்தும் மற்றும் பலவிதக் கழுத்துகளும் வெட்டிய மெல்லிய ஜாக்கெட்டுகளையும் ஜாக்கெட்டுகளுக்குள் ஒளிவு மறைவின்றித் தெரிந்த 'பாடி'களையும், மேல் பகுதிகளை மாம்பழக் கட்டின் மடிப்புகள் மூடியிருந்தாலும் அடியில்கால் பகுதியில் விரித்தாடிய உட்பாவாடைகளையும், விதவித வண்ணச் சேலைகளையும் அணிந்தும் இடமில்லாதபடியால் நெளிந்தும் சங்கடப்பட்டும் கட்டுக் கட்டாகப் புத்தகங்களைச் சுமந்தும் பல கல்லூரி மாணவிகள் நின்று கொண்டிருந்தார்கள். இடையையும் பின் தட்டுகளையும் ஒட்டப் பிடித்துத் தைத்த நிஜார்களையும், கட்பனியனை வெளிக்காட்டிய ஸ்லாக்குகளையும் அணிந்த மாணவர்கள் சிலர், பஸ்ஸில் முன்னால் நிற்க இடமிருந்தாலும், படிப்பில் போலவே பஸ்ஸிலும் முன்னுக்குப் போகாமல், மாணவிகள் இருந்த பக்கமே நின்று அவர்களைப் பார்த்து அசைந்தும் குனிந்தும் நிமிர்ந்தும் ஸ்டைல் காட்டியும், உதடுகளில் துலங்கிய கீர்மீசைகள் ஒரு கோடிக்கு வரும்படி புன்முறுவல் செய்தும் நின்று கொண்டிருந்தார்கள். பஸ்ஸில் முன்னே வந்த சில மாணவர்கள் நிற்க முடியாததால் ஒரு பக்கமாகத் தங்கள் பின் பகுதிகளை சீட்டில் தாங்க வைத்து சீட்டில் உட்கார்ந்திருந்தவர்கள் தோள்களில் சரிந்தார்கள். இன்னொரு நடுத்தர வயதுள்ள ஆபீஸர் தலை நடுவில் வழுக்கை விழுந்திருந்தும் ஓரத்திலிருந்த முடியை இடது கையால் ஸ்டைலாகத் தடவியது மட்டுமல்லாமல் சிலக்கொழுந்துவின் கருமையான கட்டுக்குடுமியைப் பார்த்துப் புன்முறுவல் செய்து, அந்த அநாகரிகத்தில் தமக்கிருந்த அவநம்பிக்கையைத் தெரிவித்தார்.



இதையெல்லாம் சிலக்கொழுந்துவின் கண்கள் ஆராய்ந்தன. மாணவர்கள் நன்றாக இறுகப் பிடிக்கும் படியாக நிஜார் அணிந்திருந்ததையும், கண்டக்டர் டிக்கெட்டுக்குப் பணம் கேட்டபோது மணி பர்ஸை இடுப்புக்குக் கீழேயிருந்த பின் பகுதிப் பையிலிருந்து எடுத்துக் கொடுத்ததையும் கண்டு, 'இது என்ன விநோதம்' என்றும் நினைத்தார். நினைத்ததோடு நில்லாமல் சம்பந்தத்தை நோக்கி, ''ஏண்டா சம்பந்தம்! பட்டணத்திலே என்ன துணிப் பஞ்சமா ?" என்றும் வினவினார்.

"அப்படி எதுவும் இல்லையே !" என்றான் சம்பந்தம். தந்தை ஏதாவது ஆரம்பிக்கப் போகிறாரே என்ற பயத்தில்.

"பின்னே ஏண்டா நிஜாரையெல்லாம் இறுகப் பிடித்துத் தைச்சிருக்காங்க ?'' என்று கேட்டார் சிலக்கொழுந்து.

"அது டைட்ஸ் அப்பா."

"டைட்ஸ°ன்னா ?"

"இறுகப் பிடித்திருக்கிற பாஷன்."

"இதுவும் பாஷனா ?"

"ஆமாம். அமெரிக்காவின் முறை இது."

"அப்படியா !" என்று இகழ்ச்சியுடன் சொன்ன சிவக்கொழுந்து, "ஏன்டா சம்பந்தம், பெண்களுக்குப் பஞ்சாபி உடை. ஆண்களுக்கு அமெரிக்க உடை. தமிழனுக்குன்னு தனி உடை எதுவும் கிடையாதோ ?" என்றும் கேட்டார்.

சம்பந்தம் மேலே எதுவும் பேசவில்லை. சிவக்கொழுந்துவைப் பஸ்ஸில் பேச விடுவது அபாயமென்பதை அவன் நன்றாக உணர்ந்து கொண்டிருந்தான். சிவக்கொழுந்துவும் பேசவில்லை அதற்கு மேல். மௌனமே சாதித்தார். அவர் மனம் பலவித உணர்ச்சிகளால் கொந்தளித்துக் கொண்டிருந்தது. பாரதத்தின் பண்பையும் முக்கியமாகத் தமிழன் பண்பையும் விட்டுப் பல நாடுகளின் வேஷம் போடும் வேஷதாரிகளை நினைத்து அவர் மனம் புழுங்கினார். இந்த விவகாரங்கள் வெகு சீக்கிரம் கிராமங்களிலும் பரவி விடுமென்பதில் அவருக்குச் சந்தேகமேயில்லை. அரசியல் சுதந்திரம் வந்து மூன்று ஆண்டுகள் ஆகியும் கலாசார சுதந்திரம் வரவில்லையென்று அவர் நிச்சயம் செய்து கொண்டார். நமது மாணவ மாணவிகள், வருங்கால சந்ததிகள், அமெரிக்கர்களைப் போலும் வேறு நாட்டாரைப் போலுந்தானிருப்பார்களேயொழிய, பாரதப் புதல்வர்களாயிருக்க மாட்டார்களென்று நிர்மானித்துக் கொண்டார். பிரிட்டிஷ் அரசியல் ஆதிக்கம் போய் அமெரிக்கக் கலாசார ஆதிக்கம் நாட்டில் வந்திருக்கிறது. எப்பொழுதும் இந்நாட்டுக்குப் பிறநாட்டு ஆதிக்கம் இருக்க வேண்டுமென்ற சாபம் போலிருக்கிறது," என்று தனக்குள் சொல்லிக் கொண்ட சிவக்கொழுந்து, தமிழன் கதியை நினைத்து வருந்திக் கொண்டே பஸ்ஸில் பயணம் செய்தார். பஸ் அடையாறை அடைந்ததும், அவரையும் சங்கரையும் பஸ்ஸிலிருந்து இறக்கிய சம்பந்தம் மீண்டும் டாக்ஸியை அழைத்தான். மீண்டும் சிவக்கொழுந்து ஆட்சேபித்தார், "டாக்ஸி எதற்கடா ?" என்று.



இம்முறை சம்பந்தமும் பொறுமையிழந்து, "டாக்ஸியில் போகாவிட்டால் கலையழகியைப் பார்க்க முடியாது," என்றான் கடுப்புடன்.

"நடந்து வருகிறவர்களை, சித்தாத்தான், அவ தாண்டா உங்க கலையழகி, பார்க்க மாட்டாளோ ?" என்றார் சிவக்கொழுந்துவும் கோபத்துடன்.

"பார்க்க மாட்டாள்," என்றான் சம்பந்தம்.

"ஏன் ?"

"வீட்டுக்குள் போக முடியாது."

"ஏன் ?"

"வாசலிலே கூர்க்கா இருப்பான். உள்ளே விட மாட்டான்."

"டாக்ஸியில் போனா ?"

"அவனே கை காட்டுவான். இதற்கெல்லாம் அந்தஸ்து வேணும்."

"அந்தஸ்து வேணுமா ?" என்று வினவினார் சிவக்கொழுந்து.

"ஆமாம்," என்ற சம்பந்தம் டாக்ஸியை அழைத்து, சிவக்கொழுந்துவையும் சங்கரையும் அதற்குள் திணித்துத் தானும் ஏறிக் கொண்டு, "கலையழகி வீட்டுக்குப் போங்க," என்றான் டாக்ஸிக்காரரிடம்.

டாக்ஸிக்காரர் அவர்கள் ஏறியதும் டாக்ஸியின் முகப்புக்காகச் சுற்றி வளைத்து ஸ்டைலாக நடந்து மீட்டரைப் போட்டு விட்டு, மறுபடியும் உடலை அரைச் சாய்வாகவே சாய்த்து நடந்து, சீட்டில் தடாலென்று விழுந்து டாக்ஸியை முடுக்கி அசுர வேகத்தில் செலுத்தி

னார். டாக்ஸிக்காரரின் ஒரு கையில் சிகரெட் இருந்தபடியால் அவர் தமது இடது கையை ஸ்டியரிங் சக்கரத்தின் குறுக்கே அலட்சியமாகப் போட்டுக் கொண்டு அந்த ஒரு கையாலேயே டாக்ஸியை வளைத்து வளைத்துப் பயங்கரமாக ஓட்டினார். பக்கத்தில் நடந்த மனிதர் துள்ளி விலகவும்; முன்னே போன லாரிகளை அருகிலேயே சென்று 'லைட்' வாங்கியும், டாக்ஸியை ஓட்டிய டிரைவர் கலையழகி வீட்டை அடைந்ததும் வேகத்தைத் தளர்த்தி மிக மரியாதையாக உள்ளே டாக்ஸியைச் செலுத்திப் 'போர்ட்டிகோ'வுக்குச் சற்று முன்பே நிறுத்தினார்.

சிவக்கொழுந்துவுக்கு இதெல்லாம் வேடிக்கையாக இருந்ததென்றால் சம்பந்தம் ஒன்றரை ரூபாய்க்கு இரண்டு ரூபாயாக டாக்ஸிக்காரருக்கு அளித்து விட்டுச் சில்லறையையும் வாங்கிக் கொள்ளாதது மிகவும் எரிச்சலைக் கொடுத்தது. உள்ளூற எரிச்சலுடன் ஏதும் சொல்ல மாட்டாமல் சங்கருடன் சம்பந்தத்தைப் பின் தொடர்ந்து கலையழகியின் வீட்டுக்குள்ளே சென்றார்.

கலையழகியின் வீட்டைக் கண்டு அதிகம் பிரமிக்கவில்லை சிவக்கொழுந்து. வெளியிலிருந்த கூர்க்காவும் உள்ளே வாயிற்படிகளை மறைத்து நின்ற படுதாக்களும் இல்லாவிட்டால், கலையழகியின் நிலை அப்படியொன்றும் பிரமாதமானதல்ல என்று சிவக்கொழுந்துவின் கூரிய அறிவுக்குத் தெள்ளெனத் தெரிந்தது. அரைமணி நேரம் முன்னறையில் காத்திருந்து கலையழகியைச் சந்தித்த பிறகு தமது ஊகம் சரியென்பதைத் திடப்படுத்திக் கொண்டார் சிவக்கொழுந்து. ஆனால் சங்கர் மட்டும் பெரும் பிரமிப்பிலிருந்தான். ஏதோ சொர்க்கலோகத்துக்கே வந்து விட்டோமென்ற பிரமை அவனைக் கௌவிக் கொண்டிருந்தது.

கூடத்துச் சோபாவில் உட்கார்ந்திருந்த அவன் மாடிப் படியில் இறங்கிவந்த கலையழகியின் மோகன உருவத்தைக்



கண்டு பிரமித்துப் போனான். மெள்ள மெள்ள ஆடி ஆடிப் படிகளில் இறங்கி வந்த கலையழகியும் சங்கரைப் பார்த்தாள். பிறகு அவனருகில் வந்து உட்கார்ந்து கொண்டாள். "ஓவல் கொஞ்சம் குடிக்கிறீர்களா?" என்ற அவள் உபசார வார்த்தைகள் சங்கீதமென அவன் காதுகளில் ஒலித்தன. அவள் ஆடை மீதிருந்த ஸெண்ட் ஒன்று மின்சார விசிறியின் காற்றில் சுழன்று அவன் நாசியில் நுழைந்தது. பெரும் மயக்கத்துடன் சங்கரும் அவளை மெள்ள ஏறெடுத்துப் பார்த்தான் இருவர் விழிகளும் கலந்தன.

## 11. சித்தாத்தாளின் யோகம்!

**கலையழகியின்** கண்கள் தன் கண்களுடன் சந்தித்த அந்தச் சில விநாடிகளில் பெரும் மயக்கத்துக்கும் வியப்புக்கும் உள்ளான சங்கர், பிற்காலத்தில் அதே கண்கள் தன் வாழ்வை எத்தனை தூரம் பாதிக்கப் போகின்றனவென்பதை அன்று புரிந்து கொண்டானில்லை. கலையழகி மாடிப்படிகளில் இறங்கி வந்தபோதே அவள் புதுமுறைக் கொண்டையையும் மை தீட்டிய கண்களையும், மேலழகைச் சேலை அரைவாசி மட்டுமே மூடியிருந்த விதத்தையும், இடுப்பிலிருந்த சேலைக்கும் அதற்கு மேலிருந்த ஜாக்கெட்டுக்கும் இடைவெளி அவசியத்துக்கு மிக அதிகமாகவேயிருந்ததால் வெள்ளெனத் தெரிந்த சதையும், சிவந்த உதடுகளும், படிகளில் காலை அனாயசமாக அவள் தூக்கித் தூக்கி வைத்து வந்த லாகவத்தையும், அப்படிக் காலை எழுப்பி எழுப்பி வைத்து இறங்கியதால் மேலுடல் அழகுகள் துள்ளியதையும் கவனித்த சங்கர், அப்சரஸ்"களின் உலகத்துக்கே தான் வந்து விட்டதாக நினைத்தான். அன்று ரோஜா நிறச்சேலையும், அதை 'மாட்ச்' செய்ய ரோஜா நிற ரவிக்கையும், அதே வர்ணத்தில் காதணி, கைவளையல்கள் இவற்றையும் அணிந்திருந்த கலையழகியின் உடலும், சில இடங்களில் அதிகச் சிவப்புத்

நட்டியிருந்ததால், ரோஜாவே ரோஜாச் சேலையை அணிந்து வருவதுபோல் அத்தனை அழகாகத் தெரிந்தது சங்கருக்கு.

வாலிப வயதின் காரணமாக, சங்கர் கலையழகியின் அலங்காரங்களைக் கண்டு பிரமித்து விட்டானே தவிர, கிராமத்துப் பேர்வழியும் நடுவயதைத் தாண்டியவரும் அனுபவஸ்தருமான சிவக்கொழுந்து அவள் இயற்கை யழகிலோ செயற்கை ஏற்பாடுகளிலோ சிறிதும் பிரமிக்க வில்லை. தவிர அவற்றுக்கெல்லாம் எத்தனை மதிப்புக் கொடுக்கலாமென்பதையும் சில வினாடிகளில் அளந்து விட்டார். டாக்ஸி பங்களாவுக்குள் நுழைந்தபோதே, அது மற்ற பங்களாக்களைப் போல், பெரிதாகவோ இரண்டு வாயில்களை உடையதாகவோ இல்லை யென்பதையும், அதன் ஒற்றை வாயிலில் டாக்ஸிக்காரன் சிறிது சிரமப் பட்டே வண்டியைச் செலுத்தியதையும், போர்டிக்கோ கூட மிகக் குறுகலாகவும் சம்பிரதாயத்துக்காகவுமிருந் ததே யொழிய விசாலமாக இல்லை என்பதையும் கவனித் தார் சிவக்கொழுந்து. அது மட்டுமின்றி வாயிற்படியை மறைந்திருந்த படுதாவின் ஒரு மூலையில் சிறிது ஓட்டு இருந்ததையும், கூடத்தில் தாங்கள் உட்கார்ந்த சோபாக் கூட மருதநாயகம் வீட்டு சோபாவைப் போல் பெரிதாக இல்லாததையும் கண்ட சிவக்கொழுந்து, கலையழகியின் பெயர் ஓரளவு பிரசித்திப்பட்டிருந்தாலும், அந்த பிரசித் திக்கும் அவள் கலையைவிட தாமோதரத்தின் ஆதரவே காரணமென்பதை உணர்ந்து கொண்டார். சினிமாவைப் பற்றியும் சிவக்கொழுந்து அதிகமாக அறியாதவரல்ல. மருதநாயகத்தின் தயவால் வந்திருந்த சிறுவயல் டூரிங் சினிமாக்கொட்டகையில் தமது மனைவியின் வற் புறுத்தலின் மேல் பார்த்திருந்த சில முக்கிய படங்களில் கலையழகியென்ற நபர் யாரும் தோன்றவில்லையென் பதை நினைவில் வைத்துக் கொண்டிருந்தார் பண்டக சாலை டைரக்டர். அன்று அவள் மாடிப்படிகளில் பாதி



தெரிந்த உடனுடன் ஒய்யாரமாக இறங்கி வந்து கொண் டிருந்த பொழுது, அவள் காட்டிய மிடுக்கு மிகவும் போலி யென்பதையும், கன்னத்தில் அத்தனை பவுடரைப் பூசி, பூசணிக்காய் போல் முகத்தை அவள் அடித்திருக்க வேண்டியதில்லை யென்றும் எண்ணினார். அதுமட்டு மல்ல, அவள் பெரு உதடுகளும், இயற்கைச் சிவப்பில்லாத அதற்கு அவள் தீட்டியிருந்த சாயமும் எரிச்சலைக் கொடுத்தன அவருக்கு. முகத்தின் நடுவில் சித்திரம்போல் வரையப்பட்டிருந்த அவள் திலகத்தைக் கண்ட சிவக் கொழுந்து, அது மிகவும் விகாரமாயிருப்பதாக எண்ணி னார். எல்லாவற்றையும்விட அவள் கண்கள் பார்த்த கள்ளப் பார்வை அவருக்கு அடியோடு பிடிக்கவில்லை. "குலமகளான ஜெயத்தின் நேரான, அழகான, வெட்கம் சொட்டும் கள்ளமற்ற சிரிப்பைச் சிந்தும் பார்வை எங்கே? பக்க வாட்டில் சாய்ந்து பார்க்கும், கவர முயற்சிக்கும் சலனமுள்ள இவளின் கள்ளப் பார்வை எங்கே? குலக்கண் வேறு, கலைக்கண் வேறு என்று இரண்டையும் பிரித்து எண்ணி, கலையழகியின் பார்வையில் சிறிது வெறுப்பும் கொண்டார் சிவக்கொழுந்து. கலையழகியின் நடைகூடப் பிடிக்கவில்லை அவருக்கு. அவள் காலை அளவுக்கதிக மாகத் தூக்கித் தூக்கி நடந்து வந்ததைக் கவனித்த அவர், "இவள் என்ன குதிரையா? முழங்கால்கள் மாறிமாறி முன்னுக்கு வரும்படி ஏன் தூக்கித் தூக்கி வைத்து நடக் கிறாள்?" என்று எரிச்சலுடன் கேட்டுக் கொண்டார். காலில் கலையழகி அன்று ரோஜா நிற ஸ்லிப்பர் அணிந் திருந்தாள். வீட்டுக்குள் எதற்காகச் செருப்பைப் போட்டுக் கொண்டிருக்கிறாள் அவள் என்பதும், நாகரிகத்தைப் பற்றி அதிகமாக அறியாத சிவக்கொழுந்துவுக்குப் புரிய வில்லை. அம்மாக்கண்ணு மகள் சித்தாத்தாளுக்கு அடித்த யோகத்தைக் கண்டு பெரிதும் பிரமித்தார் அவர். "திட்டக்குடிக் கோயிலிலே பன்னாட வேண்டிய குட்டிக்கு இத்தனை ராங்கியா?" என்று வியந்தார் சிவக்கொழுந்து. ஆகவே சங்கரின் பக்கத்தில் உட்கார்ந்து அவள் இனிய

குரலில், "ஒவல் குடிக்கிறீர்களா ?" என்று கேட்டதும், சங்கர் பதில் சொல்லாமல் திகைத்துத் தன்னைப் பார்த்ததைக் கண்டு இகழ்ச்சி நகை கொண்ட சிவக்கொழுந்து, "என்ன அது ?" என்று வினவினார்.

கலையழகி அவர் பட்டிக்காட்டுத் தனத்தைக் கண்டு இகழ்ச்சி நகை கொண்டு, "ஓவல்டின்," என்று சொல்லி குரலிலும் இகழ்ச்சியைக் காட்டினாள்.

"ஆமாப்பா ஓவல்டின்னுக்கு ஓவல்னுதான் சொல்றது வழக்கம்," என்றான் சம்பந்தம் குறுக்கே புகுந்து.

பையன் காலேஜ் படிப்பு முன்பின்னிருந்தாலும் நடிகை வீட்டுச் சம்பிரதாயங்களை நன்றாக அறிந்து கொண்டிருப்பதைக் கண்டு உள்ளூர வெகுண்ட சிவக்கொழுந்து, "பட்டணத்திலே எல்லாம் ஒண்ணுக்குப் பாதிதானோ ?" என்று வினவினார்.

"என்னப்பா சொல்றீங்க?" என்றான் சம்பந்தம் சங்கடத்துடன்.

"ஓவல்டின்னுக்கு ஓவல்னா, காபிக்கு 'கா'ன்னு சொல்லி நிறுத்திடுவீங்க போலிருக்கு," என்றார் சிவக்கொழுந்து.

இதைக் கேட்ட சம்பந்தத்துக்குக் கிலி பிடித்துக் கொண்டது. கலையழகியிடம் அபசாரப்படுவது எத்தனை அபாயம் என்பதை அவன் உணர்ந்து கொண்டிருந்தான். ஆகையால் அவன் ஏதோ சொல்ல வாயெடுத்தான். அதற்கு முன்பே கலையழகி, தன் சாய உதடுகளைக் காந்த மலர் இதழ்களைப் போல் திறந்து, "ஐயா நகைச்சுவையோடு பேசறாங்க," என்று ஒலித்தாள்.

அவள் பாராட்டுதல் அளித்த எரிச்சலைப் பெரிதும் அடக்கிக் கொண்ட சிவக்கொழுந்து, "ஆமாம், நகைச்சுவைதான்," என்று கூறினார்.



சம்பத்தம் சும்மா இராமல் மேலும், "இவங்க தாம்ப்பா கலையழகி, பெரிய நடிகை !" என்றான.

"தெரிகிறது ! தெரிகிறது!" என்றார் சிவக்கொழுந்து.

"எப்படிங்க தெரிகிறது ?" என்றாள் கலையழகி.

"ஏம்மா ! பார்த்தாலே தெரியாதா ?" என்றார் சிவக்கொழுந்து.

இது கலையழகிக்குப் பெரிதும் மகிழ்ச்சியைக் கொடுத்ததை அவள் முகம் நன்றாகக் காட்டியது. "பார்த்தாலே தெரிஞ்சுக்குவீங்களா ?" என்று அவள் குழைந்தாள்.

"ஆமாம்மா ! உங்க கொண்டையைப் பார்த்தேன், சரி, நீங்க ரிஷி வேஷம் போடுவீங்கன்னு தெரிஞ்சுது." என்று சிவக்கொழுந்து தமது சாமார்த்தியத்தைக் காட்டினார்.

இதனால் சற்றுக் கோபப்பட்ட சங்கர், "என்னங்க சிவக்கொழுந்து ! ரிஷி வேஷமா ?" என்று இடை புகுந்தான்

"ஆமாம்."

"ரிஷி வேஷத்துக்கு மீசை தாடி வேண்டாமா ?"

"நாரதர் வேஷத்துக்குத் தேவையில்லை."

"ஏன் ?"

"எந்தப் படத்திலேயாவது நாரதருக்கு மீசை தாடியிருக்கிறதா பார் ; மற்ற ரிஷிகளுக்கு நாரதர் விலக்கு."

"அதற்காக ?"

"என்னைக் கேட்காதே. கலையழகியின் கொண்டையைப் பார். சாட்சாத்..." என்று விளக்க முற்பட்ட சிவக்கொழுந்துவை, "அப்பா ! அப்பா ! இது கேடண்ட் கொண்டை," என்று அடக்க முயன்றான் சம்பந்தம்.

கொண்டைகளைப் பற்றிப் பையனுக்கிருந்த அறிவை மெச்சவில்லை சிவக்கொழுந்து. ஊருக்குப் போனதும் பையனைப் பட்டணத்திலிருந்து ஊருக்கு இழுத்துவிட வேண்டுமென முடிவு செய்து கொண்டார். ஆகவே, "ஓகோ வேடன்டா ? சரி சரி," என்று கூறினார்.

கலையழகியின் நிலைமை மிகச் சங்கடமாயிருந்தது. ஆகவே, அவள் பேச்சை மாற்றத் தொடங்கி, ''அது கிடக்கட்டும். நீங்க வந்த வேலை என்ன ?'' என்று சற்றுக் கண்டிப்புடன் வினவினாள் சிவக்கொழுந்துவை நோக்கி. சிவக்கொழுந்துவும் தமக்கிருந்த ஆத்திரத்தில் தாம் சற்று அத்துமீறி விட்டதைப் புரிந்துகொண்டு குரலை மாற்றிப் பேசினார். "அம்மா ! ஏதோ நான் பட்டிக்காட்டான், கண்டதைப் பேசிப் பழக்கம்,'' என்று அவளைச் சமாதானம் செய்யவும் முற்பட்டார்.

அதனால் சற்று கரணை வந்த சங்கரும், "நாங்கள் சிறு வயல் கிராமம்; சிவக்கொழுந்து எங்கள் ஊரில் பிரபலஸ்தர். எங்கள் பஞ்சாயத்துக் கூட்டுறவு பண்டகசாலை டைரக்டர்," என்று கலையழகிக்கு அவரை அறிமுகப்படுத்தினான்.

கலையழகி சற்று சோபாவில் நெளிந்து ஒரு புறமாகத் தலையை சாய்த்துக் கையைக் கூப்பி, ''வணக்கம் !'' என்றாள்.

சிவக்கொழுந்து பதிலுக்குக் கை குவிக்காவிட்டாலும் சோபாவில் அவருக்குப் பின்னால் நின்றுகொண்டிருந்த சம்பந்தம் மட்டும் அசட்டுப் புன்முறுவலொன்றை வெளியிட்டுக் கையையும் கூப்பினான். அதற்குமேல் அதிகம் பேசப் பிரியப்படாத சிவக்கொழுந்து, மெள்ள மெள்ளத் தாம் வந்த காரியத்தைப் பற்றிப் பிரஸ்தாபித்து, "அவசியம் நீங்க எங்கள் ஆண்டு விழாவில் நடனமாடணும்,'' என்றும் கேட்டுக் கொண்டார்.



கலையழகியின் கண்கள் ஒரு விநாடி பளிச்சிட்டன. பிறகு அசிரத்தையைக் காட்டின. "எப்போ அது ?" என்று அசட்டையுடன் கேட்டாள் அவள்.

"அடுத்த மாதம்,'' என்றான் சங்கர்.

சங்கர் மீது அவள் மீண்டும் தன் விழிகளை நாட்டினாள். அவள் அழகிய முகம் அவனைக் கவரவே, ''ஆமாம், பஞ்சாயத்தில் நீங்கள் ?'' என்றாள்.

சங்கர் தன்னைப் பண்டகசாலை டைரக்டர் என்று சொல்லிக் கொள்ள விருப்பமில்லாமல், தன் உத்தியோகத்தை மட்டும் சொன்னான். 'நான் ஒரு குமாஸ்தா' என்று.

இதைக் கேட்டதும் கலையழகி அவனை ஒரு விநாடி வியப்புடன் பார்த்தாள். பிறகு அவனுக்கு முதுகைக் காட்டித் திரும்பி உட்கார்ந்து கொண்டு, சிவக்கொழுந்துவுடன் பேச ஆரம்பித்து, "ஒரு மாதந்தானா இருக்கிறது?" என்று வினவினாள்.

"ஆமாம்," என்றார் சிவக்கொழுந்து.

"எனக்கு இரண்டு மாதமாவது வேணுமே," என்றாள் கலையழகி.

"அத்தனை நாளா வேணும் ?" என்று வினவினார் சிவக்கொழுந்து.

"ஆமாம்'"

"நடனம் ஒரு நாள் தான்."

"இருந்தாலும் மற்ற எங்கேஜ்மெண்ட்ஸ் ?"

"என்ன சொல்றிங்க ?"

"என் கால்ஷீட்டெல்லாம் அட்ஜஸ்ட் பண்ண வேண்டாமா ?"

ஒன்றன் பின் ஒன்றாக வந்த ஆங்கில வார்த்தைகளுக்குப் பொருள் தெரியாமல் விழித்தார் சிவக்கொழுந்து. இந்த இடத்திலும் தன் சாமர்த்தியத்தைக் காட்டினான் சம்பந்தம். "இவங்களுக்குப் பல இடங்களிலும் வேலை இருக்கப்பா," என்றான்.

"இருக்கா ?" என்றார் சிவக்கொழுந்து. அவர் குரல் ஏதோ தனி மாதிரியாக ஒலித்தது.

"ஆமாம். அந்தப் படப் பிடிப்புகள் ஏதாவது நம்ம ஆண்டுவிழாத் தேதியாயிருந்தால் இவர்கள் வர முடியாது," என்றான்.

இதைப் பொறுக்கவில்லை கலையழகி. படப்பிடிப்பு இருக்கும் இடங்களிலெல்லாம் போவது ஒரு நடிகைக்கு அழகல்ல என்ற எண்ணத்தால், "அதெல்லாம் ஒன்றுமில்லை. வேணுமானால் கால்ஷீட்டை ஒத்திப் போடலாம்," என்று கூறி, பட முதலாளிகள் எப்படித் தன் அடிமைகள் என்பதைச் சுட்டிக்காட்டினாள்.

கால்ஷீட் என்பதன் பொருள் அப்பொழுதும் விளங்காத சிவக்கொழுந்து, அது எதுவாகவாவது இருந்து தொலையட்டுமென்று நினைத்து, "சரி அப்படித்தான் ஒத்திப்போட்டு விடுங்கள்," என்றார்.

நீண்ட விவாதத்துக்குப் பிறகு, கலையழகி வேண்டா வெறுப்பாக ஒப்புக்கொண்டாள் சிறுவயல் கிராமத்துக்கு வர. அவள் சிறுவயலுக்குவர ஆயிரத்து ஐந்நூறு கேட்டது, தமது சொத்தையே கேட்பது போலிருந்தது சிவக்கொழுந்துவுக்கு. இருப்பினும் அதற்குக் குறைவாகக் கலையழகி மறுத்து விட்டதால், வேண்டா வெறுப்பாக ஒப்புக், கொண்டார் சிவக்கொழுந்து. அதுமட்டுமல்ல, தாமோதரத்தைத் தாம் பார்த்து விழாவுக்குத் தலைமை வகிக்க அழைக்கப்போவதாகவும் கூறினார். அவர் அந்த இடத்தில் அதைக் கூறியதற்குக் காரணம் இருந்தது.



அந்தக் கூடத்தின் கோடியில் தாமோதரமும் கலையழகியும் சேர்ந்து எடுத்துக்கொண்ட போட்டோ ஒன்று இருந்ததை உள்ளே நுழைந்ததுமே பார்த்திருந்தார் சிவக்கொழுந்து. ஆகவே கலையழகியைக் கொண்டே தாமோதரத்தை முடிக்கத் தீர்மானித்த சிவக்கொழுந்து, வேண்டுமென்றே நாசுக்காக அதைப் பிரஸ்தாபித்தார். அவர் தாமோதரம் வரப்போவதாகப் பிரஸ்தாபித்ததும் கலையழகியின் முகத்தில் பெரும் திருப்தி நிலவியது. இருப்பினும், அதை மறைத்துக் கொண்டு வினவினாள் "அவருக்கு ரொம்ப வேலை இருக்குமே, வருவாரா ?" என்று.

"முயன்று பார்க்கிறோம். உங்க நடனத்துக்குச் சரியான பிரமுகர் தலைமை வகிக்காவிட்டால் நன்றாயிருக்குமா ?" என்றார் சிவக்கொழுந்து.

கலையழகி சிறிது யோசித்தாள். பிறகு, "நீங்களும் கேளுங்கள். நானும் போன்லே சொல்லிப் பார்க்கிறேன்," என்றாள்.

சிவக்கொழுந்து உள்ளூர நகைத்துக் கொண்டார். ஒரே கல்லில் இரண்டு பட்சிகளையும் தாம் வீழ்த்தி விட்டதை நினைத்துப் பெரு மகிழ்ச்சியும் கொண்டார். "அடி திட்டக்குடி சித்தாத்தா! உனக்கு அடுத்த கொள்ளையைப் பார்த்தியா ? உங்கம்மா பன்னாட நான் பத்து ரூபாய்க்கு மேலே கொடுத்ததில்லையே!" என்று உள்ளூர கூறிக்கொண்டு விடைபெற்றுக் கொண்டார். சிவக்கொழுந்துவை வாயில் வரையில் வந்து வழிவிட்டாள் கலையழகி. ஆனால் சங்கருடன் என்ன காரணத்தாலோ அவள் பேசவில்லை. கலையழகி காட்டிய அசட்டையால் சங்கர் மனம் மிகவும் துன்பத்தில் ஆழ்ந்திருந்தது. வேதனையுடன் கலையழகியின் வீட்டிலிருந்து வெளி வந்தான் அவன். ஆனால் அதைவிடப் பன்மடங்கு அதிக வேதனை அவனுக்குத் தாமோதரத்தின் வீட்டில் காத்திருந்தது.

# 12. ராவ்சாகிப்பின் அலட்சியம்

கலையழகியின் வீட்டிலிருந்து இகழ்ச்சியும் வெறுப்பும் கலந்த உணர்ச்சியுடன் சிவக்கொழுந்தும், நட்சத்திர மண்டலத்துக்கே சென்று விட்ட பெருமையுடன் சம்பந்தமும், ஆரம்பத்தில் தன்னுடன் உரையாடிய அந்தத் தெய்வமோகினி இறுதியில் பூரணமாகத் தன்னை அசட்டை செய்து விட்டாளே என்ற வேதனையுடன் சங்கரும் வெளி வந்தார்களென்றால், தாமோதரத்தின் வீட்டிலும் அதே உணர்ச்சிகளே அவர்கள் இதயங்களில் துளிர்விட்டன.

ராவ்சாகிப் தாமோதரத்தை நேரில் கண்டதும், சிவக்கொழுந்து பெரும் போலி மனிதனொருவனைச் சந்தித்து விட்டோமென்பதைப் புரிந்துகொண்டார். தாமோதரத்தின் பங்களா கலையழகியின் பங்களாவைப் போல்பதினைந்து மடங்கு அதிகப் பெரியதாயும் பெருந்தோட்டத்தின் நடுவிலுமிருந்ததை நுழையும் போதே கண்ட சிவக்கொழுந்து, உண்மையில் பாங்கி டைரக்டர் நல்ல ஐவேஜு உள்ள புள்ளியென்பதை ஊகித்துக்கொண்டார். ராவ்சாகிப்பின் ஐவேஜு எந்த விதத்திலும் சென்னை ராஜ்யத்திலுள்ள யாருக்கும் சளைத்ததாயிருக்க முடியாதென்பதை அவர் பங்களாவின் முன்கூடத்தில் உட்கார்ந்தபோதே புரிந்துகொண்டார் சிவக்கொழுந்து. அங்கிருந்த விலை உயர்ந்த சோபாக்களும் எரியாமலிருக்கும்போதே பளிச் பளிச்சென்று மின்னிய மின்சார விளக்குகளும், சுவரில் மாட்டப்பட்டிருந்த பித்தளை அலங்கார வஸ்துகளும், மான் கொம்புகளும், புலித்தோல்களும் ராவ்சாகிப்பின் பிராபல்யத்துக்குச் சான்று கூறின. அதுமட்டுமன்றி, சுவரில் பெரும் 'பிரேம்'கள் போடப்பட்டு மாட்டப்பட்டிருந்த பாராட்டுப் பத்திரங்கள், மனிதன் யோக்கியதை முன்பின்னிருந்தாலும் பணம் மட்டுமிருந்து



விட்டால் நாட்டில் பாராட்டு உண்டு என்பதை வெளிப்படுத்தின. அந்தக் கூடத்தின் நான்கு மூலைகளிலுமிருந்த அறைகளுக்குச் செல்லும் வழிகளில் தொங்கிய திரைச் சீலைகள் மிக விலை உயர்ந்தவையாயிருந்ததால், ஒரு வேளை ராவ்சாகிப் ஏதாவது நெசவுக் கூட்டுறவுச் சங்கங்களுக்கும் டைரக்டராயிருப்பாரோ என்று சிவக்கொழுந்து நினைத்தார்.

அவர் இப்படிப் பலபடி நினைத்துக் கூடத்தைச் சுற்றிலும் பார்த்துக் கொண்டிருந்தபோது, கூடத்தின் ஆரம்ப அறைத் திரைச் சீலையை விலக்கிக் கொண்டு ஒருவர், எலி பிடிக்கும் பூனைபோல் அடிமேலடி வைத்தும் தன்னியும் குனிந்தும் சிவக்கொழுந்துவை நோக்கி வந்து, "நீங்கள் யாரைப் பார்க்க வேண்டும் ?" என்று மிக மரியாதையுடன் வினவினார்.

''தாமோதரத்தைத்தான் பார்க்க வேண்டும், இல்லாவிட்டால்அவர் வீட்டுச் சமையற்காரனைப் பார்க்கவா சிறு வயலிலிருந்து வந்திருக்கிறேன் ?" என்று உள்ளூரச் சொல்லிக் கொண்ட சிவக்கொழுந்து, "ராவ்சாகிப் அவர்களைத்தான்" என்று சகஜமாகக் குரலை அமைத்துக் கொண்டு சொன்னார்.

"சரி, கார்டு கொடுங்க," என்று கூறிய அந்த மனிதர், "டேய் யாரங்கே?" என்று சத்தம் போட்டவுடன், ஓர் ஆந்திர போயி மூக்கில் திருகாணியும் தோளில் ஒரு நீலத் துணியையும் போட்டுக் கொண்டு ஓடி வந்தான். "ஐயா கிட்ட கார்டு வாங்கி வா," என்று சொல்லிவிட்டு அந்த மனிதர் மறுபடியும் வந்த அறையை நோக்கிச் சென்று விட்டார்.

போயி உள்ளே சென்ற சற்று நேரத்திற்கெல்லாம், ஒரு பீங்கான் தட்டுடன் திரும்பி வந்து சிவக்கொழுந்துவிடம் அதை நீட்டினான்.

அதை எதற்காகக் கொண்டு வந்தான் அவன், எதற்காகத் தன்னிடம் நீட்டுகிறான் என்பது புரியாத சிவக்கொழுந்து, தன் மகனை நோக்கித் திரும்பி, "என்னடா இது ?" என்று வினவினார்.

"கார்டு கேட்கிறான்," என்றான் சம்பந்தம்.

"கார்டு இங்கே ஏதுடா? போஸ்டாபீஸ"க்குப் போய் தான் வாங்கி வரணும். உனக்குத்தான் இந்த ஊர் தெரியுமே. வரும்போது ஒரு கார்டை வாங்கிக்கொண்டு வந்திருந்தா என்ன?" என்றுச் சீறினார் சிவக்கொழுந்து.

"அந்தக் கார்டு இல்லையப்பா," என்றான் சம்பந்தம் தந்தையின் அறியாமையை நினைத்து மனம் புழுங்கி.

"வேறே எந்தக் கார்டு ?"

"விஸிட்டிங் கார்டு."

"அப்படின்னா ?"

"பெரிய மனுஷாளைப் பார்க்கணும்னா முதல்லே உங்கள் பெயர், பதவிகள் இவை அடங்கிய அச்சடித்த சின்னக் கார்டு வேண்டும்."

"எதற்கடா அது ? நேரே நீ யார்னு கேட்டா சொல்லிட்டுப் போறேன்."

"எல்லாரையும் ராவ்சாகிப் நேரே பார்க்க முடியுமாப்பா ?"

"ஏன்டா முடியாது ? கண்ணிலே ஏதாவது பழுதோ ?"

இந்தச் சம்பாஷணையை மௌனமாகக் கேட்டுக் கொண்டிருந்த போயி சட்டென்று அவர்களிடம் ஏதும் சொல்லாமல் சென்று, மிக வேகமாக ஒரு சின்ன அச்சடித்த சீட்டுடன் திரும்பி வந்து, "இதிலே எழுதுங்க," என்றான். அவன் பேச்சில் இகழ்ச்சியுமிருந்தது, அதட்டலுமிருந்தது.

சிவக்கொழுந்து சீட்டையும் பார்த்து, போயியையும் பார்த்தார். சீட்டில் பெயர், பதவி, வந்த காரணம் மூன்றையும் கேட்டிருந்தது. அதை வெறுப்புடன் கையில் வாங்கி, சம்பந்தத்திடம் கொடுத்தார் சிவக்கொழுந்து. அவன் மிகுந்த பயபக்தியுடன் அதில் விவரங்களைப் பூர்த்தி செய்து சிவக்கொழுந்துவிடம் திருப்பிக் கொடுத்தான். சிவக்கொழுந்து அதை ஒருமுறை படித்துவிட்டுப் போயியிடம் கொடுத்தார். போயி அதைத் தட்டில் வாங்கி வைத்துக்கொண்டு உள்ளே சென்றான்.



அவன் சென்றதும் சம்பந்தத்தை நோக்கித் திரும்பிய சிவக்கொழுந்து, "என்டா சம்பந்தம், என்னடா இது ?" என்று வினவினார் சற்றுக் கோபத்துடன்.

"என்னப்பா ?" என்று பயத்துடன் கேட்டான் சம்பந்தம்.

"என்ன எழுதியிருந்தே சீட்டில் ?"

"உங்க பெயரை எழுதியிருந்தேன்..."

"அது சரி. பெரிய மிராசுதார், கூட்டுறவு பண்டக சாலை டைரக்டர், பஞ்சாயத்து உறுப்பினர் என்றெல்லாம் எதற்காக எழுதினாய் ?"

"அப்பொழுது தானேப்பா ராவ்சாகிப் உங்களைப் பார்ப்பார்?"

"இல்லாவிட்டால் ?"

"பார்க்க மாட்டார்."

"ஒண்ணு செய்யறதுதானே ?"

"என்னப்பா ?"

"என் ஜாதகத்தையும் கணித்து அனுப்பறது தானே?"

"இல்லையப்பா, பெரிய மனுஷங்க கிட்டே..." என்று ஆரம்பித்த சம்பந்தம் சிவக்கொழுந்துவின் ஒரே பார்வையில் வாயை மூடிக் கொண்டான்.

இந்தச் சம்பாஷணை முடிந்ததும், போய் வருவதற்கு முன்பு வந்த மனிதர், மீண்டும் அடிமேலடி எடுத்து வந்து, "தாங்கள்தானே சிவக்கொழுந்து?" என்று சங்கரைப் பார்த்துக் கேட்டார்.

சங்கரின் இளமை, முகத்திலிருந்த கம்பீரம், கூடிய வரை நாகரிகமான கிராப்பு, உடை இவைதான் அந்த மனிதரைக் கவர்ந்திருக்க வேண்டுமென்று ஊகித்துக் கொண்ட சிவக்கொழுந்து, "இல்லை, அது நான்தான்," என்றார்.

அந்த மனிதர் சிவக்கொழுந்துவை வியப்புடன் பார்த்தார். பிறகு கேட்டார், "நீங்களா!" என்று, வியப்பு குரலிலும் ஒலிக்க.

"ஆம்," என்றார் சிவக்கொழுந்து.

"மிராசுதார்?"

"நான்தான்."

"கூட்டுறவு பண்டகசாலை டைரக்டர்?" என்று அந்த மனிதர் வாசகத்தை முடிக்கு முன்பே குறுக்கே பாய்ந்த சிவக்கொழுந்து, "நானேதான், ஏன்? சந்தேகமாயிருக்கிறதா?" என்று வினவினார்.

உண்மையில் அந்த மனிதரின் கண்களில் சந்தேகம் பூராவாக இருந்தது. ஷர்ட் அணிந்திருந்த, சமயத்திலும், கழுத்தில் ருத்திராட்சம் தெரிந்த அந்த நாகரிகமற்ற மனிதர் ஒரு மிராசுதாரராகவோ, டைரக்டராகவோ இருக்க முடியுமென்று நம்ப அந்த மனிதரால் முடியவில்லை. அவர் திகைத்ததைக் கண்டு அதன் காரணத்தையும் புரிந்து கொண்ட சிவக்கொழுந்து, "தாங்கள் யார்?" என்று வினவினார்.

"ராவ்சாகிப்பின் பி.ஏ."

"பி.ஏ. படிச்சிருக்கீங்களா?"



"நோ, நோ, பட்டதாரி இல்லை; பி.ஏ." என்று மறுபடியும் சொன்ன அந்த மனிதர், 'பிச்சை' என்ற சொல்லில் உள்ளது போல் 'பி'யை அழுத்தி உச்சரித்தார்.

"அப்படின்னா?"

"பர்ஸனல் அஸிஸ்டெண்ட். அதாவது ராவ்சாகிப்பின் அந்தரங்கக் காரியதரிசி."

சிவக்கொழுந்து அதற்குமேல் கேள்வி ஏதும் கேட்காமல் 'உனக்கே இத்தனை தடபுடலா?' என்று எண்ணிய வண்ணம் ஆசனத்திலிருந்து எழுந்திருந்து, "உம், வாருங்கள்," என்று மற்றவர்களையும் அழைத்தார்.

அவர் அழைப்புக்கிணங்கத் துள்ளி எழுந்த சங்கரையும் சம்பந்தத்தையும் உட்காரும்படி சைகை செய்த பி.ஏ. "நீங்கள் மட்டும் வாருங்கள்," என்று சிவக்கொழுந்துவிடம் கூறினார்.

"இவர்?" என்று சங்கரைக் காட்டினார் சிவக்கொழுந்து.

"இவரும் மிராசுதாரா!" என்று வினவினார் பி.ஏ.

"இல்லை," என்றார் சிவக்கொழுந்து.

"உங்கள் பஞ்சாயத்தில் இவர் யார்?"

"குமாஸ்தா," என்று பெருமையுடன் சொல்லிய சிவக்கொழுந்து, "அது மட்டுமல்ல, இவர் கூட்டுறவு பண்டகசாலையின்..." என்றும் ஆரம்பித்தார்.

ஆனால் அவரை மேற்கொண்டு பேசவிடாத பி.ஏ., "சரி சரி, நீங்கள் மட்டும் வாருங்கள்," என்று சிவக்கொழுந்துவை தன்னுடன் வரும்படி சைகை செய்து முன்னால் சென்றார்.





சிவக்கொழுந்து சங்கரை ஒரு விநாடி பரிதாபத்துடன் பார்த்தார். அவன் முகம் சுண்டிக் கிடந்தது. குமாஸ்தா என்றதும் பி.ஏ. காட்டிய அலட்சியம், அவன் இதயத்தைச் சுட்டுக் கொண்டு இருந்தது. இதையெல்லாம் பார்க்கத் தவறாத சிவக்கொழுந்து ஒருமுறை பெருமூச்சு விட்டு விட்டு, பி.ஏ.வைத் தொடர்ந்து சென்றார். கூடத்தையும் இரண்டு அறைகளையும் தாண்டி ஓர் உள்ளறையை அடைந்த பி.ஏ., அங்கிருந்த படுதாவை விலக்கி விட்டுத் தாம் வெளியிலேயே நின்று சிவக்கொழுந்தை உள்ளே போகும்படி சைகை செய்தார்.

சிவக்கொழுந்து இந்தப் படாடோப ஏற்பாடுகளின் விளைவாகச் சிறிது அச்சத்துடனேயே உள்ளே நுழைந்தார். அந்த அறை கூடத்தை விட அமர்க்களமாயிருந்தது. பல கவர்னர்களுடன் ராவ்சாகிப் பிடித்துக் கொண்ட போட்டோக்கள் சுவர்களை அலங்கரித்தன. ஓர் அசல் புலித்தலையும் ஒரு மான் தலையும் அக்கம் பக்கத்தில் சுவரின் ஒரு புறத்தில் மாட்டப்பட்டிருந்தன.

அறை நடுவே ஒரு பெரிய மேஜையும் நாடக மேடையில் அரசர்களுக்குப் போடுவது போன்ற பலவித வேலைப்பாடுகள் உள்ள நாற்காலிகளும் இருந்தன.

இத்தனை படாடோபத்திலிருந்தாலும், ராவ்சாகிப் மிகுந்த பணிவுடனும் புன்சிரிப்புடனும் சிவக்கொழுந்தை வரவேற்று, ''வணக்கம்,'' என்றார்.

சிவக்கொழுந்துவும் பதில் வணக்கம் செய்தார்.

''உட்காருங்கள்,'' என்று மரியாதை செய்தார் தாமோதரம்.

அவரது மரியாதையும் பணிவும் சிவக்கொழுந்தை மிகவும் கவரவே, நாற்காலியில் அமர்ந்ததும் அவர் கூறினார், ''தங்களைப் பற்றி மருதநாயகம் சொன்னார். இருந்தாலும் உங்களுக்கிருக்கிற பதவிக்கு இத்தனை



பணிவும் நற்குணமும் இருக்குமென்று நான் நினைக்கவில்லை.''

மிக நாகரிகத்துடன் அளவாகக் கத்தரித்து விடப்பட்டிருந்த மீசையைத் தாங்கி நின்ற தாமோதரத்தின் மேல் உதடு சற்று எழுந்து, உள்ளேயிருந்த இரண்டு பற்களைக் காட்டியது. அவற்றைக் கண்டதும் ராவ்சாகிப்பின் பணம் மிகப் பெரிதென்பதைக் கணித்துக் கொண்டார் சிவக்கொழுந்து. அந்த இரண்டு தங்கப்பற்களை அடைமானம் வைத்தால் குறைந்த பட்சம் ஐம்பது ரூபாய் கிடைக்குமென்று கணக்குப் போட்ட சிவக்கொழுந்து, மேன்மேலும் தாமோதரத்தின் வலையில் விழுந்து, அவர் இதயமும் தங்கம்தான் என்று நிர்மானித்தார்.

தமது பணிவைப் பற்றிச் சிவக்கொழுந்து கூறியதைக் கேட்ட ராவ்சாகிப் ''வீணாக என்னைப் புகழாதீர்கள். பணிவில்லாததற்கு வாழ்க்கையில் நாம் என்ன சாதித்து விட்டோம்? பட்டணத்தில் நாங்கள் வீண்பொழுது போக்குகிறோம். கிராமத்தில் நீங்கள் உழைக்கிறீர்கள். கிராமத்தின் உழைப்பு இல்லையேல் பட்டணம் காற்றில் பறக்கும்,'' என்று கூறினார்.

இதைக் கேட்ட சிவக்கொழுந்து ராவ்சாகிப்பை உள்ளூரப் பாராட்டினார். அதிகமாகப் புகழ்வதை ராவ்சாகிப் விரும்ப மாட்டாரென்று தப்புக் கணக்குப் போட்ட சிவக்கொழுந்து,மேற்கொண்டு வந்த காரியத்தை விளக்கினார். முதலில் வெளியூர் பயணம் சாத்தியமல்ல என்று மறுத்து, பிறகு வேண்டா வெறுப்பாக ஒப்புக் கொள்பவர் போல் பாசாங்கு செய்த தாமோதரம், ''என்ன செய்வது? நீங்களும் மருதநாயகமும் கேட்கும் போது நான் எப்படி மாட்டேனென்றா சொல்ல முடியும்?'' என்றார்.

''கலையழகியை நடனத்துக்கு ஏற்பாடு செய்திருக்கிறோம்,'' என்றார் சிவக்கொழுந்து மெள்ள.

"கலையழகியா ! ஒப்புக் கொண்டாளா ?" என்று வினவினார் தாமோதரம்.

"முதலில் இஷ்டப்படவில்லை. பிறகு உங்களை அழைக்கப் போவதாகச் சொன்னோம்..." என்று இழுத்தார் சிவக்கொழுந்து.

"சரி ! ஆல்ரைட்." என்று அரை மனதாகத் தமது ஒப்புதலைத் தாமோதரம் தெரிவித்ததும், சிவக்கொழுந்து விடைப் பெற்றுக் கொள்ள எழுந்தார்.

அதுவரை சிறுவயல் விழாவில் அதிக சிரத்தை காட்டாத தாமோதரம் "போய் வாருங்கள். விழாவை நன்றாக நடத்துங்கள். சில இடங்களில் எங்களை அழைக்கிறார்களே தவிர, சரியாக உபயோகப்படுத்திக் கொள்ளவில்லை. போஸ்டர்களைப் பெரிதாகப் போடுங்கள், சுற்றுப்புற கிராமங்களில் ஒட்டச் சொல்லுங்கள். பத்திரிகைகளிலும் விளம்பரம் செய்து விடுங்கள். எனக்கோ கலையழகிக்கோ விளம்பரம் தேவையில்லை. உங்கள் விழா பத்திரிகையில் வரவேண்டும். உங்கள் பஞ்சாயத்துக்கும் உங்களுக்கும் நல்ல பெயர் வரவேண்டும். நன்றாகச் செய்யுங்கள்," என்று தமக்கு அதில் சம்பந்தமில்லாதது போல் கிட்டத்தட்ட ஐந்நூறு ரூபாய்க்குச் செலவு வைத்து விட்ட தாமோதரம், தமது பி.ஏ. பின் தொடரக் கூடத்து வரையில் சிவக்கொழுந்துவைக்கொண்டு வந்து விட்டார்.

கூடத்துக்கு வந்ததும் சங்கரை ராவ்சாஹிப்புக்கு அறிமுகம் செய்து வைக்க முயன்ற சிவக்கொழுந்து, "இவர்தான் சங்கர். எங்கள் பஞ்சாயத்தில் குமாஸ்தா தவிர, பண்டகசாலை டைரக்டர்களில் ஒருவர்," என்றார்.

சங்கரை ஒரு வினாடி பார்த்த தாமோதரம், ஓர் அலட்சியப் புன்முறுவல் செய்து, "நல்லது நல்லது," என்று கூறிவிட்டு உள்ளே சென்றார்.



சங்கர், ராவ்சாஹிப்பின் அலட்சியத்தைத் தாங்க மாட்டாமல், ஸ்தம்பித்து நின்றான். ராவ்சாஹிப்பின் அலட்சியச் சிரிப்பையும், 'நல்லது, நல்லது' என்ற சொற்களையும்விட, கலையழகியின் அசட்டை சர்வசாதாரணமாகத் தெரிந்தது அவனுக்கு. ஆகவே நொந்த மனத்துடன் சங்கர் சிவக்கொழுந்தைத் தொடர்ந்தான். சிவக்கொழுந்தை பி.ஏ.யும் தொடர்ந்தார். தொடர்ந்து வந்து ராவ்சாஹிப்புக்கு முதல் வகுப்பு ரிசர்வ் செய்யவும், தமக்கு இரண்டாம் வகுப்பு டிக்கட் வாங்கவும், வழிச் செலவுக்கும், ஊருக்குப் போனதும் ஆயிரம் ரூபாய் அனுப்பி வைக்கும்படி கூறினார்.

'சரி கலையழகியும் ராவ்சாஹிப்பும் சேர்ந்து சிறுவயல் பஞ்சாயத்தை மொட்டை யடித்து விடுவார்கள்' என்று உள்ளூர சொல்லிக்கொண்ட சிவக்கொழுந்து, மறுநாளிரவே சிறுவயல் கிளம்பினார்.

அன்றும் மறுநாளும் சம்பந்தம் சிவக்கொழுந்துவையும் சங்கரையும் பட்டணத்தைச் சுற்றிக் காண்பித்தான். சிவக்கொழுந்து சிலவற்றை ரசித்தார். பலவற்றை வெறுத்தார்.

சங்கர் எதையும் ரசிக்கும் நிலையில் இல்லை. கலையழகியும் ராவ்சாஹிப்பும் காட்டிய அலட்சியம், அவன் மனத்தை அறுத்துக் கொண்டிருந்தது.

அன்று ஆரம்பித்த மனவேதனை சிறுவயல் வந்தும் விடவில்லை. ஜெயம் தந்த ஆறுதல்கூட அந்தத் துன்பத்தைத் துடைக்க முடியவில்லை.

அடுத்த மாதம் நடந்த விழாவில் அவன் வாழ்வு ஒரு புதுத் திருப்பம் பெற்றது. அந்தத் திருப்பத்தை ஏற்படுத்தியவர் தாமோதரம்.

சென்னையில் சங்கரை அசட்டை செய்த அதே தாமோதரம், சிறுவயலில் சட்டை செய்தார். அதிலிருந்து தான் முளைத்தது ஓர் ஆபத்து.

# 13. சென்னை மாநகரம்

**பி**ன்னால் பல நாட்கள் கழித்து விழாவில் தாமோதரம் தன்னைச் சட்டை செய்யப்போகிறாரென்பதையோ, அதனால் தனது வாழ்வில் பெரும் திருப்பங்களும், தொல்லைகளும் ஏற்படப் போகின்றனவென்பதையோ சென்னையில் தாமோதரத்தைச் சந்தித்த அன்று அறியாத சங்கர், தாமோதரம் காட்டிய அலட்சியத்தால் மனமுடைந்து அவர் பங்களாவிலிருந்து வெளிவந்ததன்றி, அன்றிரவே சிறுவயலுக்குப் பயணப்பட வேண்டுமென்று ஒற்றைக் காலால் நிற்கவும் செய்தான். சிவக்கொழுந்துவுக்கும் ஊருக்குப் புறப்பட்டு விடவேண்டுமென்ற ஆத்திரமே அதிகமாயிருந்தது ஆனால் சம்பந்தம் காட்டிய பிடிவாதத்தின் காரணமாக, அவர் பயணத்தை இரண்டு நாட்களுக்குத் தள்ளிப்போட ஒப்புக்கொண்டதன்றி சங்கரையும் சமாதானப்படுத்தி, "நாளை ஒரு நாள் தானே சங்கர்? எப்படியும் நாளன்றைக்குப் புறப்பட்டு விடுவோம்," என்று கெஞ்சினார். அவர் கெஞ்சியதற்கு இரண்டு காரணங்கள் இருந்தன. சம்பந்தம் என்னதான் ஊதாரியாயிருந்தாலும் பிள்ளையென்ற பாசத்தால் அவனைத் திருப்தி செய்ய வேண்டுமென்ற காரணம் ஒன்று. தவிர தாமோதரமும் கலையழகியும் செய்த அசட்டையால் சங்கருக்கு ஏற்பட்டிருந்த மனப்புண்ணைச் சென்னையின் வேடிக்கைகளைக் காட்டி ஆற்றிவிடலாமென்ற எண்ணம் ஒன்று. ஆக இந்த இரண்டு எண்ணங்களின் விளைவாகக் கெஞ்சலுற்பட்ட சிவக்கொழுந்தை, வருத்தம் கலந்த கண்களுடன் நோக்கிய சங்கர், "வந்த வேலைதான் முடிந்துவிட்டதே! இன்னும் இங்கென்ன வேலை?" என்று கேட்டான்.

தான் எதைச் சொன்னாலும் சரியென்று தலையை ஆட்டும் சங்கர், முதன் முதலாகத் தன்னை ஆட்சேபித்துப்



பேசியதைக் கண்டு வியக்கவில்லை சிவக்கொழுந்து. காரணம் அவருக்கு நன்றாகப் புரிந்திருந்தது. அந்தக் காரணமே அவருடைய பிடிவாதத்துக்கும் காரணமாகவே "மாப்பிள்ளை! வந்த வேலை முடிந்து விட்டதா?" என்று வினவினார்.

சங்கர் ஏதும் விளங்காமல் கேட்டான், "ஏன்? முடியவில்லையா?" என்று.

"பண்டகசாலை வேலை முடிந்துவிட்டது," என்று சொல்லி நகைத்தார் சிவக்கொழுந்து.

"வேறு வேலை இருக்கிறதா?" என்று வினவினான் சங்கர்.

"இருக்கிறது."

"மருதநாயகம் வேறு வேலை எதுவும் கொடுத்ததாகத் தெரியவில்லையே?"

"மருதநாயகம் கொடுக்கிற வேலைதான் வேலையா?"

"வேறு யார் வேலை கொடுக்கிறார்கள்?"

"மருதநாயகத்துக்கும் மேற்பட்ட அதிகாரி."

சங்கர் ஏதும் புரியாமல் விழித்தான்.

"யார் அது?" என்று கேட்டான்.

"உன் மாமியார். அதுதான் இவன் அம்மா," என்று சம்பந்தத்தைச் சுட்டிக்காட்டிச் சொன்ன சிவக்கொழுந்து, "இதோ பார்," என்று பெட்டியிலிருந்து தமது மனைவி கொடுத்த பட்டியலையும் எடுத்துக் காட்டினார்.

அப்பொழுதுதான் அந்தப் பட்டியலைப் பார்த்த சங்கர், "அடேயப்பா! இத்தனை சாமான்களா!" என்று உள்ளூரப் பிரமித்ததன்றி, வாய்விட்டும் சொன்னான்.

"அவ யாருக்கு அம்மா? சம்பந்தத்துக்கு அம்மா இல்லை; சம்பாதிக்க சிவக்கொழுந்து இருக்கும்போது பட்டியல் இன்னும்கூட நீளும்," என்ற சிவக்கொழுந்து. "எம்பா சங்கர், இதிலிருக்கிறதை வாங்காமே போக எனக்குத் துணிவில்லை. உனக்குத் துணிச்சலிருந்தாச் சொல்லு," என்றும் கூறினார்.

சங்கர் அதற்குமேல் ஆட்சேபிக்கவில்லை. சிவக்கொழுந்து மேலுக்கு மனைவிக்குப் பயந்தது போல் பேசுகிறாரேயொழிய அவர் யாருக்கும் ஆயுளில் பயந்தவரில்லையென்பதும், பட்டணத்தைப் பார்க்கும் ஆசையாலேயே இரண்டு நாள் தங்கத் தீர்மானித்திருக்கிறாரென்றும் முடிவு செய்து கொண்டான். ஆகவே, கடைசியில், "தங்களிஷ்டம்," என்று கூறிவிட்டான்.

இந்தச் சம்மதத்தைக் கேட்டதும் சம்பந்தத்தின் உள்ளம் எல்லையில்லா மகிழ்ச்சியால் துள்ளிக் குதித்தது. பட்டணம் என்ன என்பதைப் பட்டிக்காட்டிலிருந்து வந்துள்ள அந்த இருவருக்கும் காட்டிவிட வேண்டுமென்று உறுதி செய்து கொண்டு, இரண்டு நாட்களிலும் போக வேண்டிய இடங்களைப் பற்றி ஒரு முடிவு செய்து கொண்டான். தான் அழைத்துப் போகும் இடங்களைப் பார்த்ததும் தந்தை அடியோடு பிரமித்துப் போக வேண்டுமென்ற அவாவில் 'செத்த காலேஜ்' (மியூஸியம்) 'உயிர் காலேஜ்' (மிருகக்காட்சி சாலை) இவற்றைத் தவிர மவுண்ட்ரோடு ஹோட்டல்கள் இரண்டு, சினிமாக் கொட்டகைகள் இரண்டு, ஸ்டுடியோ ஷூட்டிங், கோயில் இரண்டு, இவையனைத்தையும் விஜயம் செய்ய வேண்டிய இடங்களில் சேர்த்துக் கொண்டான். இந்த இடங்களையும் மெரீனாவையும் பார்த்த பிறகு தந்தை எத்தனை பிரமிப்பாரென்பதையும், ஊருக்குப் போனதும் தனது திறமையைப் பற்றி என்னென்ன சொல்வாரென்பதையும் தானாகவே கற்பனை செய்து கொண்டு மனமகிழ்ந்தான்



ஆனால் அடுத்த இரண்டு நாட்களிலும் சிவக்கொழுந்து பட்டணத்தைப் பார்த்த அநாகரிக முறை அவனைப் பலவித இம்சைக்குள்ளாக்கியது. "எதற்காக இவரைச் சென்னையில் இருக்கச் சொன்னோம்?" என்று நினைக்கும் அளவுக்குச் சிவக்கொழுந்து தமது அநாகரிகத்தைக் காட்டினார். சங்கருக்கும் பட்டணம் வெறுப்பாகத்தானிருந்தது. ஆனால் சிவக்கொழுந்து காட்டிய காரணங்களுக்காக அல்ல. கலையழகியாலும் தாமோதரத்தாலும் எத்தனை சிறுமைப்படுத்தப்பட்டோம் என்பதை நினைத்தே அவன் ஏங்கிக் கொண்டிருந்தான். ஆகவே சிவக்கொழுந்து சென்ற இடங்களில் காட்டிய அருவெறுப்பை வேறு காரணத்தை முன்னிட்டு அவனும் காட்டினான்.

அன்று பிற்பகல் ஆகாரத்தை ஹாஸ்டல் அறையிலேயே முடித்துக் கொண்ட சிவக்கொழுந்துவையும் சங்கரையும், சம்பந்தம் ஒரு மணி நேரமே இளைப்பாற விட்டு, சென்னை மாநகரத்தின் சிறப்பைக் காட்டக் கிளப்பி அழைத்துச் சென்றான். மறுபடியும் அவனை டாக்ஸி வைக்க அனுமதிக்காத சிவக்கொழுந்து, பஸ்ஸிலேயே பயணம் செய்தார். அன்று பல இடங்களை அவருக்குக் காட்டினான் சம்பந்தம். ஆனால் அந்த ஒவ்வொரு இடத்திலும் சிவக்கொழுந்துவின் பார்வை சம்பந்தத்தின் பார்வைக்கு நேர் விரோதமாயிருந்ததால், "ஏன் இவரைச் சென்னையில் இருக்கச் சொன்னோம்?" என்று, அந்த முதல்நாள் முடிவிலேயே நொந்து கொண்டான் சம்பந்தம்.

பஸ்ஸில் ஏறியதும் சீட்டில் உட்கார்ந்து கொண்ட சிவக்கொழுந்து, கண்டக்டர் யாரையும் டிக்கெட் கேட்காமல் நெடும் தூரம்வரை, பஸ்ஸை ஓட்டிக்கொண்டிருந்த டிரைவரிடம் நின்று சிரித்துப் பேசிக்கொண்டிருந்ததையும், டிரைவரும் முன்னே பார்க்காமல் கண்டக்டரைப் பார்த்து ஏதேதோ பேசிய வண்ணம் தாறுமாறாகப்

பஸ்ஸை ஓட்டிக் கொண்டிருந்ததையும் கவனித்து, 'இப்படியிருந்தும் சென்னையின் ஜனத்தொகை நாளுக்கு நாள் எப்படிப் பெருகுகிறது?' என்று தம்மைத் தாமே கேட்டுக்கொண்டார். இப்படி நெடும் தூரம் டிரைவருடன் சிரித்து விளையாடிய கண்டக்டர் திடீரென்று தனது தோல்பையைத் தோளில்மாட்டிக்கொண்டு பிரயாணிகளை நோக்கிக் கையைச் சிட்டிகை போட்டு, 'டிக்கட் டிக்கட்' என்று அதட்டியதையும் கவனித்தார். கண்டக்டர் கை சொடுக்கியதையும் டிக்கட்டை விசாரித்த தோரணையையும் கண்ட சிவக்கொழுந்து "ஒருவேளை கண்டக்டர் இனாமாக டிக்கட் கொடுக்கிறாரோ" என்று எண்ணினார். அப்படி ஏதுவுமில்லாமல் அவர் பணம் வாங்கிக்கொண்டே டிக்கட் கொடுத்ததல்லாமல், பஸ்ஸின் தகரக்கூரையைக் கையால் தட்டி, "ஏன் அங்கேயே நிற்கிறே? வா முன்னாடி," என்று பஸ் கோடியில் நின்ற பிரயாணிகளை அதட்டியதையும் பார்த்தவுடன் ராவ்சாகிப் தாமோதரத்தைவிட கண்டக்டரின் செல்வாக்குப் பொதுமக்களிடத்தில் அதிகம் என்பதைப் புரிந்து கொண்டார் சிவக்கொழுந்து. இத்தனை அதட்டலுக்குப் சென்னை மாநகர மக்கள் பணிந்ததைக் கண்ட சிவக்கொழுந்து. 'தாமோதரத்துக்குப் பதில் இந்தக் கண்டக்டரையே விழாவுக்குத் தலைமை வகிக்க அழைத்திருக்கலாமே,' என்றும் எண்ணினார். இந்த எண்ணங்களின் விளைவாக அவர் முகத்தில் படர்ந்த இகழ்ச்சிக் குறியைக் கண்ட சம்பந்தம், தந்தை ஏதாவது கண்டக்டரிடம் அபசாரப்பட்டுவிடப் போகிறாரோ என்று பயந்து கொண்டிருந்த சமயத்தில், அந்த விபரீதம் நடந்தே விட்டது.

கண்டக்டரிடம், 'மவுண்ட் ரோடு மூன்று' என்று சம்பந்தம் சொன்னதும், ஒரு ரூபாய் நோட்டை எடுத்து சிவக்கொழுந்து நீட்டவே, அதை வாங்கிக் குறுக்கே நீளமாக மடித்து விரல்களுக்கிடையிலிருந்த மற்ற மூன்று



நோட்டுகளுடன் இடுக்கிக்கொண்ட கண்டக்டர், நாக்கில் விரலைத் தொட்டுத் தொட்டு எச்சிலைத் தடவி டிக்கட்களை எடுத்துக் கிழித்துக் கொடுத்தார். அந்த எச்சில் டிக்கட்களை வாங்க மறுத்த சிவக்கொழுந்து, "அதை அவன்கிட்ட கொடு," என்று சம்பந்தத்தைக் காட்டினார்.

கண்டக்டர் சிவக்கொழுந்துவைக் கடச் கடப் பார்த்தார். "ஏன்? நீ வாங்கமாட்டியா?" என்றார்.

"எச்சிலை வாங்கிறதில்லை," என்றார் சிவக்கொழுந்து திட்டமாக.

"இத்தினி பேரு வாங்கலே?"

"வாங்கியிருக்கலாம்."

"நீ என்னா ஒஸ்தி?" என்று சொன்ன கண்டக்டர் அலட்சியமாக டிக்கட்டுகளைச் சம்பந்தத்தின் கையில் திணித்து விட்டு மேலே சிட்டிகை போட்டுக் கொண்டு சென்றார். அந்த எச்சில் டிக்கட்டுகளை எல்லாரும் பயபக்தியுடன் வாங்கிக் கொள்வதைக் கண்ட சிவக்கொழுந்து பிரமித்தார். அது மட்டுமல்ல, சூட் அணிந்த ஒருவர் டிக்கட்டை வாங்கித் தமது பல்லில் கடித்துக் கொண்டு, பணத்தை எடுத்துக் கொடுத்ததையும் பார்த்து, 'ஓகோ, நாகரிகமென்றால் எச்சில் பரிமாற்றம் அவசியம் போலிருக்கிறது.' என்று தமக்குள் சொல்லிக்கொண்டார். இந்த அனுபவம் அவருக்கு அங்கு மட்டும் ஏற்படவில்லை. மவுண்டு ரோடு பெரிய ஹோட்டல் ஒன்றில் நுழைந்து அங்கிருந்த நாற்காலியில் அமர்ந்ததும், கிளாஸ் டம்ளரில் காப்பியைச் சூப்பிக் கொண்டிருந்த சர்வர் ஒருவர், சிவக்கொழுந்துவிடம் வந்து, "என்ன சாப்பிடறீங்க?" என்று விசாரித்தார். சிவக்கொழுந்தைப் பேசவிடாது சம்பந்தம், மூன்று பேருக்கும் தானே ஆர்டர் கொடுத்தான். அவன் 'ஆர்டர்' கொடுத்தது கெஞ்சுவது போலிருக்கவே, சர்வர் சென்றவுடன், "ஏன்டா சம்பந்தம்! அவன்கிட்ட பிச்சையா கேட்கிறே?" என்று வினவினார்.

"இல்லையப்பா," என்றான் சம்பந்தம்.

"பின்னே என்டா அவன்கிட்டே கெஞ்சறே? பணம் நாமில்லே கொடுக்கிறோம்!"

"ஆமாம்பா! இது பட்டணம்பா."

"பட்டணமாயிருந்தா என்னடா? பணத்தையும் கொடுத்துப் பிச்சையும் எடுக்கணுமா?"

சிவக்கொழுந்துவின் இந்தக் கேள்விக்கு சம்பந்தம் பதில் சொல்லுமுன்பாகவே சர்வர் இரண்டு மூன்று பிளேட்டுகளில் பலகாரங்களைக் கொண்டுவந்து, பிடியாட்டத்துக்குச் சீட்டுப் போடுபவர் போல் பிளேட்டுகளை ஒவ்வொருவர் முன்பும் வீசினார். அவற்றை ஒரு முறை பார்த்துச் சர்வரையும் நோக்கிய சிவக்கொழுந்து, "எப்பா! நீ கையைக் கழுவினையா?" என்று வினவினார்.

சர்வர் சிவக்கொழுந்தை ஆச்சரியத்துடன் பார்த்தார். "இதோ பார்! கையிலே என்ன இருக்கு கழுவ?" என்று கைகளைக் காட்டினார்.

"கொஞ்சம் முந்தி எச்சில் பண்ணி கிளாஸிலே காப்பி குடிக்கல்லே?" என்று வினவினார் சிவக்கொழுந்து.

"ஆமாம், குடிச்சேன்."

"அது எச்சில் இல்லையா? அத்துடன் இந்தத் தட்டையும் தொடலாமா?"

ஏதோ புது மிருகத்தைப் பார்ப்பது போல் சிவக்கொழுந்துவைப் பார்த்த சர்வர், பதிலேதும் சொல்லாமல் கேலியாகச் சிரித்துக் கொண்டு சென்றார். சம்பந்தம் பலகாரங்களை ஸ்பூன்களின் உதவிகொண்டு வெளுத்து வாங்கினான். சங்கர் எங்கேயோ யோசனையில் பலகாரத்தைத் தொடாமல், அடுத்து வந்த காப்பியை மட்டும் குடித்தான். சிவக்கொழுந்து எதையும் தொடாமல் எழுந்துவிட்டார்.



சர்வர் எச்சில் கையுடன் தொட்டதைப் பற்றித் தந்தை பிரஸ்தாபித்ததே அநாகரிகமாயிருந்தது சம்பந்தத்துக்கு. அவர் அந்தப் பலகாரத்தைச் சாப்பிட மறுத்தது சென்னை நகரத்தையே பழிப்பது போலிருந்தது. சென்னை மாநகரம் பார்ப்பதற்குப் பகட்டேயொழிய, அங்குள்ள விகாரங்கள் கிராமங்களில் இல்லை என்ற முடிவுக்கு வந்தார். சுகாதாரத்துக்கும் சென்னை நகரத்துக்கும் எந்த வித சம்பந்தமுமில்லையென்பதையும், சென்னைவாசிகள் உடையில்தான் நாகரிகவான்களே தவிர மற்றப்படி செயலில் அவர்களுக்கும் பட்டிக்காட்டானுக்கும் அதிக வித்தியாசமில்லை என்பதையும் அந்த ஒரு நாளில் புரிந்து கொண்டார். சென்னையில் எல்லா இடங்களிலும் எச்சிலையும் சுகாதாரக் குறைவையும் கண்டார். அன்று இரவு ஏழு மணிக்கு டவுனிலுள்ள கோயிலுக்குப் போன அவர் தமது கருத்தைப் பூரணமாக ஊர்ஜிதம் செய்து கொண்டார். கோயில் வாயிலிலிருந்த பழக்கடைக்காரன் ஒரு வாழைப்பழத்தின் தோலைப் பாதி வரை உரித்து வாயால் பழத்தைக் கடித்துத் தின்றுகொண்டு அந்தக் கையாலேயே பழ சப்ளை செய்து வந்தான். கோயில் வாயிலிலிருந்தப் பூக்கடைக்காரனோ சிகரெட் பிடித்துக்கொண்டிருந்தான். ஸ்வாமிக்குப் போட பூ கேட்டவர்களுக்கெல்லாம் ஒரு கை விரல்களில் எச்சில் சிகரெட்டை இடுக்கிக் கொண்டே, பூவைக் கிள்ளிக் கொடுத்ததைக் கண்ட சிவக்கொழுந்து, "ஆண்டவா! உனக்கே இப்படித்தானா?" என்று நொந்து கொண்டு, பூ வாங்காமலே உள்ளே நுழைந்து ஆண்டவனைத் தரிசித்து வெளியே வந்தார்.

அவர் மனம் பெரிதும் நொந்து கிடந்தது. 'சென்னை மாநகரமல்ல இது; இது, சென்னை மாநரகம்' என்று தமக்குள் சொல்லிக்கொண்டார் சிவக்கொழுந்து. மறுநாள் சம்பந்தம், அவரையும், சங்கரையும் சினிமாவொன்றுக்கு அழைத்துச் சென்றான். கடற்கரையைக் காட்டினான். உயிர்காலேஜ், செத்த காலேஜ் இரண்டையும் காட்-

டினான். ஷூட்டிங் ஒன்றுக்கும் அழைத்துப் போனான். போனது புராணப்பட மாதலால் விசுவாமித்திர வேஷம் போட்ட ஒரு நடிகரைச் சிவக்கொழுந்துவுக்கு அறிமுகம் செய்து வைத்தான். சிவக்கொழுந்து விசுவாமித்திரருடன் பேசிக்கொண்டிருந்தபோதே உதவி டைரக்டர் ஒருவர், விசுவாமித்திர வேஷதாரிக்கு ஒரு சிகரெட்டு உதவியதன்றி அதைப் பற்றவைக்க லைட்டரையும் சாமார்த்தியமாக அடித்ததைக் கண்டார் சிவக்கொழுந்து. இதையெல்லாம் பார்த்த சிவக்கொழுந்து, மறுநாள் இரவு, ஏதோ பெரும் கெட்ட சொப்பனத்திலிருந்து விடுபட்டவர்போல் சங்கருடன் சிறுவயலுக்கு ரயிலேறினார். ரயிலேறிய இருவரும் வண்டி புறப்பட்ட பின்பும் நீண்ட நேரம் மௌனமே சாதித்தனர். மறுநாள் காலை சிறுவயலுக்கு வந்ததும் சிவக்கொழுந்து ஆசுவாசப் பெருமூச்சு விட்டார். ஆனால் சங்கர் மனத்தில் ஆசுவாசம் ஏதுமில்லை. ஏக்கமே நிரம்பி நின்றது. வண்டியிலிருந்து குதித்த சங்கர், சிவக்கொழுந்துவிடம் கூடச் சொல்லிக்கொள்ளாமல் கைப் பெட்டியுடன் வீட்டின் படிகளில் ஏறினான். வண்டிச் சத்தம் கேட்டதும் ஓடிவந்து வாயிலைத் திறந்து கதவை ஒருக்களித்து நின்ற மனைவியின் மந்தகாச வதனம்கூட அவனுக்கு மகிழ்ச்சியளிக்கவில்லை. ஜெயத்தை ஒதுங்கச் சொல்லி உள்ளே வேகத்துடன் சென்றான்.

## 14. நீதான் மல்லிகை

நல்லதைத் துடைப்பது சுலபம். கெடுதலை அகற்றுவது மிகக் கடினம். நீரைச் சுத்தப்படுத்த வேண்டுமென்றால் அதற்கு ஒரு வடிகட்டி வேண்டும். அந்த வடிகட்டியில் மெள்ள மெள்ள நீரை ஊற்றிப் பாத்திரத்தில் சுத்த நீரை ஏந்த வேண்டும். அசுத்தப்படுத்த இந்த ஏற்பாடு தேவையில்லை. எந்த நல்ல நீரிலும் சேற்றை எடுத்து எறிந்தால் போதும், நிமிட நேரத்தில்



அது கலங்கிவிடும். மாசற்ற நீர் போன்ற சங்கரின் மனத்தில் சென்னை நிகழ்ச்சிகள் பாய்ந்து அதைக் கெடுத்திருந்ததால், அவன் எந்த நல்லதையும் இனிமையான எதையும் பார்க்கும் சக்தியை இழந்திருந்தான். கலையழகியும் ராவ்சாகிப்பும் காட்டிய அசட்டையெனும் ஆணவச்சேறு அவன் நிர்மல மனத்தை அடியோடு கலக்கியிருந்ததால், அவன் மனச்சுமையுடனேயே வீட்டுவாயிலில் இறங்கினான். சென்னையிலேயே அவன் மனம் துன்பச் சுமையைப் பெற்றிருந்ததால், சிவக்கொழுந்துவின் கண்களுக்குப் பட்ட சென்னை நகரத்தின் விகாரங்களை அவன் பார்க்கவும் சக்தியற்றுக் கலையழகியையும் தாமோதரத்தையும் நினைத்தவாறே சிறுவயல் வந்து சேர்ந்தான். கெட்ட சொப்பனத்தை இரவில் கண்டு எழுந்திருப்பவன் எப்படிக் காலை வேளையின் வெளிச்சத்தை ரசிக்க முடிவதில்லையோ, அப்படியே கெட்ட சொப்பனம் போன்ற இருவர் அசட்டைக்கு ஆளான சங்கர், தன் மனைவியின் முகத்தையும், முகத்தில் பொலிவுற்ற முறுவலையும் ரசிக்க சக்தியற்றவனானான்.

வண்டியிலிருந்து இறங்கியவுடன் அவன் முகமிருந்த நிலையைக் கண்டவுடனேயே, ஏதோ தவறு நடந்திருக்கிறதென்று முடிவு செய்துகொண்ட ஜெயம், அவன் சிவக்கொழுந்துவிடம் விடைபெறாமலே வீட்டுப் படிகளில் ஏறி வந்ததைக் கண்டாள். கதவைத் தான் ஒருக்களித்து நின்றால் தன்னை ஆசையுடன் இடித்துக்கொண்டு செல்லும் கணவன், அன்று மட்டும் "உம் ? வழி விடு !" என்று உறுமியதையும், அந்த உறுமலின் காரணமாகத் தான் வழிவிட்டதும் விடுவிடு என்று காமிரா உள்ளே நோக்கிச் சென்று விட்டதையும் பார்த்தாள். ஆகவே வண்டி சென்றதும் வாயில் கதவைச் சாத்திவிட்டு உள்ளே வந்து உள் வாயிற்படியில் நின்ற வண்ணம் சங்கரைப் பார்த்துக்கொண்டே இருந்தாள்.

உள்ளே சென்ற சங்கர் பெட்டியை ஒரு மூலையில் வைத்துவிட்டு, அவசர அவசரமாகச் சட்டையைக் கழற்றி ஆணியில் மாட்டியதையும், பின்பு பெட்டியைத் திறந்து போட்டு ஒரு டவலை எடுத்துத் தோளில் வீசிக் கொண்டதையும், பின்பு ஏதோ பைத்தியக்காரனைப் போல் அப்படியும் இப்படியும் அறையை வெறித்துப் பார்த்ததையும் கண்ட ஜெயம், கணவனுடைய மனம் பெரிதும் அல்லல்பட்டிருக்கிறதைப் புரிந்து கொண்டு, அதன் காரணத்தை அறிய விரும்பி "என்ன தேடுகிறீர்கள்? உங்கள் ஆசைக் கனியைத் தேடுகிறீர்களா ?" என்று வினவினாள்.

இதைச் சொன்ன ஜெயத்தின் முகத்தில் மந்தகாசம் நன்றாக விரிந்தது. அப்பொழுதுதான் அவள் குளித்திருந்தாளாதலால் தலையை வாரவில்லை. முதல்நாள் வாரிப்போட்ட பின்னலைக் குளிப்பதற்காக எடுத்துச் சற்று உயரத் தூக்கி, குண்டாக மலையாளப் பெண் மாதிரிச் சுற்றியிருந்தாள். அப்படி உயரத் தூக்கி, பிச்சோடாவுக்கும் வெறும் முறுக்கலுக்கும் இடையுள்ள புதுப்பாணியில் அவள் கொண்டையிட்டிருந்ததால், பின் கழுத்துக்கூட வெளேரென்று தெரிந்தது. முகத்தில் அவள் நீருற்றி மஞ்சள் தேய்த்தபோது நனைந்த முன் உச்சி மயிர்கள் சில முகத்தின் மேலே ஒட்டிக் கிடந்தன. வட்டமாக இடப்பட்டிருந்த குங்குமப் பொட்டுக்கு அவை ஏதோ கூரை அமைப்பது போலிருந்தது பார்வைக்கு. உள்ளே அப்பொழுதுதான் அடுப்பை மூட்டியிருந்ததால், வேலைக்குச் சன்னத்தமாக அவள் சேலையைத் தூக்கிக் கட்டியிருந்தாளாதலால், மஞ்சள் பூசிய கால்கள் மிக அழகாகத் தெரிந்தன. அவளிருந்த அந்த நிலை என்றுமே சங்கரை ஆட்கொண்ட நிலை.

ஆனால் அன்று மட்டும் அவன் அவளை வெறித்து வெறித்துப் பார்த்தானேயொழிய அருகில்கூட வரவில்லை. அவன் கேட்ட கேள்விக்குக்கூட உடனடியாகப் பதில்



சொல்லவில்லை. சிறிது நேரங்கழித்து, சொப்பனத்திலிருந்து விழித்தவன் போல், "உம் உம்! என்ன கேட்டாய் ?" என்று வினவினான்.

"உங்கள் ஆசைக் கனியைத் தேடுகிறீர்களா என்று கேட்டேன்," என்று ஜெயம் மீண்டும் சொன்னாள், உள்ளத்தில் இல்லாத கேலியைக் குரலில் வரவழைத்துக் கொண்டு.

"ஆசைக் கனியா! என்ன அது ?" என்று கேட்டான் சங்கர். அவன் முகத்தில் குழப்பம் பூர்ணமாயிருந்தது.

"மதுவைச் சொல்கிறேன். சென்னை போன போக்கில் என்னை மறந்திருக்கலாம். மதுவைக் கூடவா மறந்து விட்டீர்கள் ?" என்றாள் ஜெயம், குரலில் முதன்முதலாகத் துன்பத்தைக் காட்டி.

"அடடே! ஆமாம், ஆமாம்! எங்கே மது ?" என்று வினவினான் சங்கர். அந்தச் சமயத்தில் சமையலறையில் ஏதோ ஒரு பாத்திரம் 'டங்' என்ற ஒலியுடன் விழுந்து கணகணவென்று உருண்டு கொண்டிருந்தது காதில் விழுந்தது. அதைக் கேட்டதும்தான் சிறிது சுரணை வந்தது சங்கருக்கு. "பாத்திரத்தை எதற்காகக் குழந்தை கையில் எட்டும்படி வைக்கிறாய்? காலில் போட்டுக் கொண்டதோ என்னமோ, போய்ப் பார்," என்று ஜெயத்திடம் கூறினான்.

அந்த உத்தரவிலும் ஒரு வித்தியாசத்தைக் கண்டாள் ஜெயம். சாதாரணமாக இந்த மாதிரி ஒலி கேட்டால் தனக்காகக் காத்திராமல் பதறி ஓடும் கணவன், அன்று தன்னைப் போய்ப் பார்க்கும்படி சொன்னதும் வித்தியாசமாய் இருந்தது அவளுக்கு. இருப்பினும் தன் எண்ணங்களை வெளிக்குக் காட்டாமல் விடுவிடு என்று வேதனை நிறைந்த உள்ளத்துடன் சமையலறையை நோக்கிச் சென்றாள். அவளைத் தொடர்ந்து சங்கரும் சென்றான்.

சமையலறையில் கைக்கெட்டும் பலகையொன்றில் இருந்த குண்டானை உருட்டி விட்டிருந்த மது, மற்றொரு உருளியைத் தூக்கமாட்டாமல் தூக்கிக்கொண்டு நின்றுகொண்டிருந்தது. சங்கரைக் கண்டதும், அதையும் தொபபென்று கீழே போட்டுவிட்டு, "அப்பா !" என்று கூவிக்கொண்டு, சங்கரை நோக்கி ஓடி வந்தது. சங்கர் மதுவை அப்படியே வாரித் தூக்கிக் கொண்டான். அதன் குண்டுக் கன்னம் அவன் கன்னத்துடன் இழையவே, மெள்ள மெள்ளச் சிறு வயலுக்கும் தன் விடுதிக்கும் சுயநிலைக்கும் வரத் தொடங்கிய சங்கர், குழந்தையை ஆசையுடன் முத்தமிட்டான்.

ஜெயத்தின் கண்களில் நீர் திரண்டது. சங்கரின் வருத்தத்தைத் துடைப்பதில் தன்னைவிட மதுவுக்கிருந்த சக்தியை நினைத்தால் அவள் உள்ளத்தில் மகிழ்ச்சி வெள்ளம் பெருகியது. சங்கர் மனத்தில் புண்பட்டிருக்கிறான் என்ற ஊகத்தால் அந்த வெள்ளத்தில் துன்பமும் கலந்தது. துன்பமும் இன்பமும் கலந்ததால் கண்களில் திரண்ட நீரை மறைக்க வேறுபுறம் முகத்தைத் திருப்பிக்கொண்ட ஜெயம், வீட்டு வேலைகளைக் கவனிப்பதாகப் பாசாங்கு செய்தாள். ஒரு முறை கட்டைகளை உள்ளே தள்ளி அடுப்பைத் தூண்டினாள். பிறகு உட்கார்ந்து முகத்தை அடுப்பின் வாயை நோக்கிக் குனிந்து, தனது அழகிய உதடுகளைக் குவித்து, "உப் உப்" என்று ஊதினாள். புகை அவள் கமலக்கண்ணில் பாய்ந்து நீரைப் பெருக்கியது அந்தப் புகையின் இம்சை, கணவன் காட்டிய அசட்டையைவிட அதிக இம்சையைத் தராததால், மேலும் மேலும் அடுப்பை ஊதினாள் ஜெயம். இதற்கிடையே மது கேட்ட கேள்விகள் [illegible] அவன் இதயத்தில் சஞ்சலத்தை எழுப்பின.

"ஏம்பா ! நீ எப்போ வந்தே ?" என்று கேட்டது ம[illegible]

"இப்பதாம்ப்பா," என்றான் சங்கர் செல்லமாக.

"நீ பட்டணமா போனே ?" என்று மீண்டும் கேட்டது மது.



"ஆமாண்டா கண்ணு."

"அங்கே என்ன இருக்கு."

"எல்லாம் இருக்கு ?"

"எல்லாம் இருக்குன்னா ?"

"கடை, பலூன், ஊதல், எல்லாம் இருக்கு."

"சின்னத் தம்பி கடை மாதிரியா ?"

இதைக் கேட்ட சங்கர் புன்முறுவல் கொண்டான். அந்த ஊருக்கு சின்னத் தம்பி கடைதான் பெரிய கடை. பலவித சாமான்களோடு அழுக்குப் படிந்த பலூன், பம்பரம், பட்டம், ஊதல் இப்படி நானாவித சாமான்களை வைத்திருந்ததால், குழந்தைகள் அவன் கடையையே வட்டமிடும். அதன் விளைவாக, சிறுவயல் வீடுகளிலுள்ள காலணா அரையணாவெல்லாம் சின்னத் தம்பியின் கடையைத் துரிதமாக அடைக்கலம் புகுந்தன. அந்தக் கடையையும் எண்ணி, சென்னைக் கடைகளையும் எண்ணி முறுவல் கொண்ட சங்கரை நோக்கி, "ஏம்ப்பா சிரிக்கிறே ?" என்று கோபத்துடன் உதட்டைக் குவித்தது மது.

"சிரிக்கலைப்பா," என்றான் சங்கர்.

"இல்லையில்லே சிரிச்சே."

"சரி சரி சிரிச்சேன்."

"என் சிரிச்சே ?"

"சின்னத்தம்பி கடையைவிடப் பட்டணத்திலே பெரிய [illegible]டயெல்லாம் இருக்கு."

"அதுக்குத்தான் சிரிச்சையா ?"

"ஆமாம்."

"அப்படின்னா எனக்கும் அம்மாவுக்கும் என்ன வாங்கி வந்தே?"

"ஒண்ணும் வாங்கி வரலேப்பா," என்றான் சங்கர் வருத்தத்துடன்.

"ஏன்" என்றது மது.

"டயமில்லையப்பா," என்று சங்கர் சமாதானம் செய்ததைக் கேட்காத மது அவனை விட்டுப் பிடிவாதம் பிடித்துக் கீழே இறங்கி ஓடியது. "இந்தா இந்தா! காலணா தரேன். சின்னத் தம்பி கடைக்குப் போய் எதை வேணும்னாலும் வாங்கிக்கோ," என்று மதுவை சமாதானப்படுத்திக் காலணாவை அதன் கையில் திணித்து விட்டு நீராடச் சென்றான் சங்கர்.

அன்று முழுவதும் அந்த வீட்டில் மகிழ்ச்சி தாண்டவமாடவில்லை. சங்கர் தாமோதரத்தையும் கலையழகியையும் நினைத்து மனம் புழுங்கிக் கொண்டிருந்தான். கணவன் மனக் கஷ்டத்துக்குக் காரணம் புரியாமல் ஜெயம் வேதனைப்பட்டுக் கொண்டு வீட்டு வேலைகளைக் கவனித்தாள். சாப்பிட்ட பின் சிவக்கொழுந்துவுடன் மருதநாயகத்தின் வீட்டுக்குச் சென்று, தங்கள் பணி வெற்றிகரமாக முடிந்த விஷயத்தைக் கூறிவிட்டு வந்த பின்னும் சங்கர் ஏதேதோ எண்ணச் சுழல்களில் புரண்டு கொண்டிருந்தான். அவனுக்குப் பகல் போஜனம் அளித்த பிறகு காமிரா அறைக்குள் வந்த ஜெயம் அவன் படுத்துக் கிடந்த கட்டிலுக்கு அருகில் போகாமல் கீழேயே ஒரு மூலையில் உட்கார்ந்து கம்பராமாயண வசனத்தைப் படித்துக் கொண்டிருந்தாள். பகல் பூராவும் இப்படிக் கழிந்தாலும், சின்னத்தம்பி கடையிலிருந்து மது வாங்கிக் கொண்டு வந்த பலூன் காமிரா அறையில் பறந்து, மது அத்துடன் ஓடியுங்கூட மேலுக்கு மட்டுமே சங்கர் மகிழ்ச்சியைக் காட்டியதாலும், உளம் நொந்திருந்த



ஜெயம், அன்றிரவு சீக்கிரமாகவே மதுவுக்குச் சாதம் ஊட்டிப் படுக்க வைத்தாள். சங்கருக்கு உணவு பரிமாறித் தானும் ஏதோ சாஸ்திரத்துக்குச் சாப்பிட்டுப் பால் செம்புடன் காமிரா அறைக்கு வந்தாள்.

சங்கர் மெத்தையை விசுபலகையில் விரித்துப் படுத்துக் கிடந்தான். கீழே புடவையில் படுத்திருந்த மதுவை அவன் எடுத்து அன்று தன் பக்கத்தில் விட்டுக் கொள்ளாததைக் கவனித்தாள் ஜெயம். அதன் விளைவாக ஏதும் பேசாமல் செம்பிலிருந்த பாலைக் குவளையில் கொட்டி அவனிடம் நீட்டினாள். "வேண்டாம், நீ சாப்பிடு," என்றான் சங்கர்.

"ஏன் வேண்டாம்?" என்று வினவினாள் அவள், வருத்தத்துடன்.

"வயிறு சரியாயில்லை," என்றான் சங்கர்.

"வயிறா? மனமா?" என்று வினவினாள் ஜெயம்.

"இரண்டும்தான்," என்று சொன்ன சங்கர், மெத்தையில் மறுபுறம் திரும்பி, அவளுக்கு முதுகைக் காட்டிக் கொண்டு படுத்தான்.

அப்படித் திரும்பிப் படுத்த புருஷனைப் பார்த்துக் கொண்டே நின்றான் ஜெயம் பலவிநாடிகள். பிறகு குவளையிலிருந்த பாலை மீண்டும் செம்பில் ஊற்றி, அறையின் மூலையில் வைத்துவிட்டு, விசுபலகை முனையில் வந்து உட்கார்ந்து கொண்டாள். அவள் உட்கார்ந்தது சங்கருக்குத் தெரிந்தே இருந்தது. இருப்பினும் அவன் திரும்பாமலே படுத்துக்கிடந்தான். தான் அப்படி உட்காரும் சமயங்களிலெல்லாம் தனக்குப்பின்புறமும் முன்புறமும் தவழ்ந்து விஷமம் செய்யும் சங்கரின் கைகள் அன்று செயலற்றுக் கிடப்பதைக் கண்ட ஜெயம், அவன் மனப்புண்ணுக்குக் காரணம் யாதாயிருக்கும் என்பதை அறிய முடியாமல் தவித்தாள். பிறகு அறிந்துகொள்ளத் தீர்மானித்து, அவன் உடலைத் தனது இரு கைகளாலும்

மெள்ளத் திருப்பினாள். அந்தப் பூங்கரங்கள் தன்னைச் சுற்றி வளைத்துத் திருப்பியதால் ஏற்பட்ட உணர்ச்சி களின் விளைவாக, சங்கர் அவளை ஏறிட்டு நோக்கினான்.

அப்பொழுதுதான் அவள் தனக்காகச் செய்து கொண் டிருந்த அலங்காரத்தை அவன் கவனித்தான். தலையில் எடுக்கப்பட்டிருந்த நேர்வகிட்டிலிருந்து பிரிந்த மயிரிழை கள் சாளரத்தின் மூலம் அடித்த காற்றில் அலைந்து தன்னை வா வா வென்று அழைப்பதைக் கண்டான். அவள் கமல விழிகள் தன் முகத்தில் பதிந்து முகத்தின் மூலம் ஊடுருவி இதயத்தையும் தொட்டெழுப்புவதைக் கண் டான். அவள் தலையைப் பின்னி எடுத்துக் கட்டி சக்கர வட்டமாக வைத்திருந்த மல்லிகைச்சரம் அறை முழுவதும் நறுமணத்தைப் பரப்பிக்கொண்டிருந்தது. பகலில் வெயில் அன்று சற்று அதிகமாயிருந்தது. இரவிலும் அதன் கபாலம் தெரிந்ததால் ஜெயம் ரவிக்கையைக் கழற்றிவிட்டு மேலாடையை மட்டும் போர்த்திக்கொண்டிருந்தாள். அவளை அப்படியே தன்மீது சாய்த்துக்கொண்ட சங்கர் பெரும் அமைதியை எய்தினான் என்பதை அவன் பெரு மூச்சு வெளிப்படுத்தியது. அவள் உடல் முழுவதும் அந்த மல்லிகை மணம் வீசியதாகத் தோன்றியது சங்கருக்கு. "மல்லிகையால் அல்ல ஜெயத்துக்கு வாசனை. ஜெயத்தின் உடல் வாசனை தான் மல்லிகையைப் பரிமளிக்கச் செய் கிறது," என்று உள்ளே சொல்லிக் கொண்ட சங்கர், தன் துன்பத்தைத் துடைத்துக் கொள்ள அவளிடம் அடைக் கலம் புகுந்தான். ஜெயம் அசையாமல் படுத்துக் கிடந் தாள் நீண்ட நேரம். கடைசியில் சங்கர், "ஜெயம்! என் துன்பம் துடைந்து விட்டது. நீதான் மல்லிகை! அப்பா! என்ன வாசனை!" என்றான்.

ஜெயம் அவன் காதுக்கருகில் தன் இதழ்களைக் கொண்டு சென்றாள். பிறகு மெள்ள ஒரு கேள்வி கேட்டாள். அவ்வளவுதான் துடைந்த துன்பம் மீண்டது அவனுக்கு. அவன் உடலே திடீரெனத் துடித்தது.

# 15. நங்கூரம்

எந்தச் சமயத்தில் எந்தக் கேள்வியைக் கேட்கலாம், எதைக் கேட்கக்கூடாது என்ற பாகுபாட்டை அடியோடு அறியாத ஓர் இனம் உலகத்தில் உண்டென்றால், அது பெண் இனம்தான். எந்தச் சமயத்தில் எந்தக் கேள்வியைக் கேட்டால் ஆண் மனம் திண்டாடுமோ அந்தக் கேள்வி யைத் தவறாமல் கேட்கும் இயல்பு பெண்களுக்கு உண்டு. அந்தக் கேள்விகளைக் கேட்கும் சந்தர்ப்பத்தையும் அவர் கள் நன்றாக அறிந்தவர்கள். ஆண் மகன் தன் கையில் நன்றாகச் சிக்கியிருக்கும் சமயத்தில் அந்தக் கேள்வியை அவர்கள் வீசுவது வழக்கம். இன்பக் கடலை அடியோடு உறிஞ்சிவிடும் சக்தியுள்ள பிரும்மாஸ்திரம் போல் அந்தக் கேள்வி அப்பு வரும். அப்படியொரு கேள்வியைத்தான் ஜெயமும் அந்த இன்ப நேரத்தில் கேட்டாள்.

மல்லிகை மணம் கமழ்ந்த அவளது மலர் உடல் செண்டுகளின் இடையே அவன் முகம் அமைதியை நாடிக் கிடந்த சமயம் அது. ஜெயத்தின் பூவுடலே ஒரு சொர்க்கம் என்று அவன் மனம் அமைதி அடைந்திருந்த நேரம் அது. புயலில் அகப்பட்டு ஆடிய மரக்கலம் போன்ற அவன் மனத்தைத் திடப்படுத்தி ஊன்றி நிற்க வைக்கும் நங்கூரம் போல், அவள் கற்பெனும் உறுதியும், அந்த உறுதியில் விளைந்த அழகும் சேர்ந்து அவனை இறுகப் பிடித்துக் கொண்டிருந்த உன்னத வேளை அது. அது இராக்காலம் தான். வெளியில் இருள் இருக்கத்தான் செய்தது. என்ன காரணத்தாலோ ஜெயம் இழுத்து வைத்திருந்த 'வால் லாம்'ப்பும் அணைந்து விட்டதால், அந்த உள்ளேயும் இருட்டு கவிந்து தானிருந்தது. ஆனால் அந்த இருட்டிலும் ஜெயத்தின் கற்பின் ஒளி மிகத் தீவிரமாகப் பிரகாசித்த தால், அவள் அழகு, கோயில்களில் உற்சவ காலத்தில்

போடும் சகஸ்ர மண்டல தீபம் போல ஆயிரமாயிரம் சுடர்களுடன் ஜ்வலித்திருந்தது.

விசுபலகைக்குச் சற்று எட்ட இருந்த சாளரத்திலிருந்து வந்த சின்னஞ்சிறு இராக்கால நட்சத்திர வெளிச்சம் அறை இருட்டைக் கிழிக்கச் சக்தியற்று இருந்தாலும், ஜெயத்தின் முகத்தின் மீதும் கழுத்திலும் கழுத்துக்குக் கீழிருந்த வழுவழுத்த பிரதேசத்திலும் தாக்கியதால் அந்த வெளிச்சம் லேசாகப் பிரதிபலிப்பது போலும், அந்தப் பிரதிபலிப்பால் வெளியிலிருந்து வந்த அந்த ஒளி அதிக ஒளியைப் பெற்று விட்டது போலும் ஒரு பிரமையை ஏற்படுத்தியது. பிரமை தட்டிய அந்த நிலையில் தன் இதயத்திடம் அடைக்கலமடைந்திருந்த கணவன் தலையை மெள்ளக் கோதிவிட்டாள் ஜெயம். அந்தக் கோதலில் அவன் சிந்தனைத் துயரம் ஓரளவு துடைந்திருக்க வேண்டும். அவன் சாந்திப் பெருமூச்சு விட்டான். பிறகு மெள்ளத் தலையை இருபுறமும் புரட்டினான். மல்லிகை மணம் அவனைச் சூழ்ந்து கிடந்தது. "ஜெயம்! நீதான் மல்லிகை! நீதான் மல்லிகை," என்று இருமுறை சொல்லவும் செய்தான்.

ஜெயம் அவனிடமிருந்து தன்னை விடுவித்துக்கொண்டு சற்றே எழுந்து, கைகளை அவன் உடலின் இருபுறத்திலும் ஊன்றிக் கொண்டு அவனைப் பார்த்தாள். அவள் கண்கள் அவன் முகத்தை விழுங்கிவிடுவன போல் பார்த்தன. அவள் கண்கள் அன்பைப் பொழிந்தன. சற்றே கூம்பியிருந்த உதடுகள் தன் அமுதத்தைக் காப்பதுபோல் தோன்றின. அந்தக் காபந்தையும்மீறி அமுதம் சிறிது வெளி வந்திருக்க வேண்டும். இல்லாவிட்டால் அந்த உதடுகளில் அந்த நீரோட்டம் ஏது? இப்படி சங்கர் எண்ணிய நேரத்தில் அவள் எதையோ நினைத்துத் தலையை ஒருபுறம் சாய்க்கவே தலையில் சூடியிருந்த மல்லிகைச் சரம் அவிழ்ந்து ஒரு பகுதி மட்டும் நீண்டு அவனது வலது கன்னத்தின் பக்கமாகத் தொங்கியது. அந்தச் சரத்தை மீண்டும் எடுத்துத்



தலையில் செருகத்தான் அவள் முயன்றாளா? இல்லை இல்லை. இருக்காது. தலையில் சூட அந்தச் சரத்தை எதற்காக அவள் கன்னத்தில் சேர்த்து இழைக்கிறாள்! மிருது எது, மல்லிகையா அவள் மலர்க் கன்னமா என்று பார்க்கவா? அதையும் முழுக்கப் பார்க்கவில்லையே அவள்? எதற்காகக் கன்னத்தை விட்டாள், கழுத்தைத் தொடுகிறாள்? விவரம் ஏதும் புரியாத செயல்கள்!

விவரம் ஏதும் புரியாத செயல்கள்தாம்! அவற்றுக்குப் பெயர்தான் காதல். கற்புக்கரசியின் காதல் எதிரிடும் போது விவரங்கள் தெரிவதில்லை ஆண் மகனுக்கு. நிலையற்ற காமமானால் வேண்டுவது எது என்பது புரியும். அங்கு புஷ்டியும் சமிருத்தியும் அலுவல் புரிகின்றன. கற்பில் தென்படும் உடலழகுடன் உள்ளத்தின் அழகும் கலக்கிறது, கங்கையும் யமுனையும்போல. அறத்தின் தூய பிரவாகத்தை இத்தகைய கற்பின் சேர்க்கையில் பார்க்கிறோம். அந்தப் பிரவாகத்தில் திளைக்கும் உள்ளங்களுக்கும் விவரம் புரிவதில்லை. உடல்களுக்கும் விவரம் புரிவதில்லை. ஆனால் அதில் ஒரு சாந்தி இருக்கிறது.

விவரம் புரியாத சங்கரின் செயல்களில் அத்தகைய சாந்தியை அவன் மனம் பெற்றிருந்தது. அந்தத் தருணத்தில் மல்லிகை மணத்துடன் கூடிய பூவுடல் அவன்மீதும் பட்டுக் கொண்டிருந்ததால், உடல் பெற்ற சுகத்துடன் ஏற்பட்ட மனச் சாந்தியில் அவன் ஐம்புலன்களும் ஜெயத்தையே நோக்கி லயித்திருந்தன. அப்படி லயித்திருந்ததால் விசுபலகையின் பக்கத்தில் கீழே படுத்திருந்த மது தூக்கத்தில் முனகியதைக்கூட அவன் கவனிக்கவில்லை. வழக்கம்போல் வாசலில் இலுப்பை மரத்தின் ஆந்தை 'கூகூ' என்று கூவியதுகூட அவன் காதுகளில் விழவில்லை. இலுப்பை மரம் காற்றிலாடிய சலசலப்பையும் அவன் செவிகள் வாங்கவில்லை. அவையனைத்தையும் மீறிய ஒலிகள் அவன் காதற் கடலில் எழுந்து உணர்ச்சி அலைகளாக மோதிக் கொண்டிருந்தன.

ஜெயத்தின் கருவண்டு விழிகளை அவன் கண்கள் பார்த்தனவே யொழிய, அவற்றைக் கவர அவன் சக்தி யிழந்து கிடந்தன. அவள் விழிகள் அவன் கண்களை வஜ்ரம்போல் வாங்கி நிறுத்திக் கொண்டன. அந்த விழி களிலிருந்து தப்ப முயன்ற அவன் கண்கள், அவள் கன்னங் களைக் கவனித்தபோது, அந்தக் கன்னங்களும் பார்வை பெற்று அவன் கண்களை நிலைக்க வைத்தன. அவள் கன்னங்கள், கழுத்து, மார்பின் மேற்புறம் இப்படி யாகப் பலப்பல இடங்களில் அவன் கண்கள் பாய்ந்தும், அந்தப் பல இடங்களும் பார்வை பெற்றும் அவன் கண் களை இறுகப் பற்றியதால், ஜெயத்தின் உடலில் கண்கள் இல்லாத இடம் கிடையாதென்பதை உணர்ந்து கொண் டான் சங்கர். அவள் கண்களின் பார்வை மட்டுமல்ல, அவள் கைகால்கள் முதற்கொண்டு எல்லா அங்கங்களின் அசைவுகள் ஒவ்வொன்றும் தன் சலனத்தை இழுத்து நிறுத்த முடியும் என்பதைப் புரிந்து கொண்டான் சங்கர்.

அதனால் பலமடைந்த அவள் மனம் அமைதியடைந்த சமயத்தில்தான், அவன் காதுக்கருகில் குனிந்து அந்தக் கேள்வியைக் கேட்டாள் ஜெயம். அந்தக் கேள்வி அவள் பெண்மையின் பூர்ணத்துவத்தைத் தெரியப்படுத்தியது. ஆயிரம் பலமுடையவளானாலும் பெண்ணின் இயற்கைக் குணம் ஒன்று உண்டு என்பதை ஜெயம் அந்தச் சந்தர்ப்பத் தில் தெரியப்படுத்தினாள். கணவன் மனோநிலை பூர்ண மாகப் புரிந்திருந்தது அவளுக்கு. அவன் தன் சக்தியில் சிக்கிக் கிடக்கிறான் என்பது தெரிந்திருந்தது அவளுக்கு. அவனை அப்படியே விட்டிருந்தால் அவன் மன அமைதி யுடன் உறங்கிக்கூட இருப்பான். ஆனால் அந்த இன்ப வேளையில் அவன் காதுக்கருகில் குனிந்த ஜெயம் மெள்ளக் கேட்டாள், "அவள் எப்படியிருக்கிறாள் ?" என்று.

இந்தக் கேள்வியால் தன்னைச் சுற்றியிருந்த இன்ப வலை அறுந்துவிடவே, திடீரென்று அவன் உள்ளம் சரே லென்று உலுங்கியது. உடல் ஒருமுறை அசைந்தது.



தலையணையில் ஏறிப் படுத்து அவளை நோக்கினான் சங்கர். அவன் பார்வையில் அதுவரையிருந்த காதல் மயக்கம் பறந்து விட்டது. உதடுகளிலிருந்து வந்த சொற் களில் சங்கடமும் சற்று உஷ்ணமும் இருந்தது. "என்ன, என்ன கேட்கிறாய் ?" என்றான் அவன்.

ஜெயம் அவன் கண்களில் மாறிய பார்வையைக் கண் டாள். உதடுகளில் துளிர்த்த சொற்களில் விரவிய சங்கடத்தைக் கண்டாள். உஷ்ணத்தையும் கவனித்தாள். அத்தனையையும் தவறாகப் பொருள் கொண்டாள். "சரி தான் ! இவரும் அங்கு சென்று பல்லை இளித்து விட்டுத் தான் திரும்பியிருக்கிறார்," என்று தனக்குள் சொல்லிக் கொண்டாள். பொறாமை அவள் உள்ளத்தில் மெள்ள உதயமாகியிருந்தது. இருப்பினும் அதை வெளிக்குக் காட்டாமல், "அவள் எப்படி இருக்கிறாள் என்று கேட்டேன்," என்று கேள்வியை மறுமுறை திருப்பினாள்.

"எவள் ?" விபரம் புரிந்தும் புரியாததுபோல் சங்கர் கேட்டான்.

"ஆமாம் ஒன்றும் தெரியாது உங்களுக்கு..." என்று சற்று விஷமத்துடன் சொன்னாள் ஜெயம்.

"எதைத் தெரியாது என்கிறாய் ?" எரிச்சலுடன் இதைக் கேட்ட சங்கர் நன்றாக நிமிர்ந்து சுதந்திரமாகப் படுத்தான்.

"எதுவும் தெரியாது?" என்றாள், அவளும் சற்று விலகி உட்கார்ந்து.

"கேட்பதைத் தெளிவாகத்தான் கேளேன் ?"

"என் கேள்வியில் ஒன்றும் தெளிவு குறைவில்லை, உங்களுக்குத்தான்..."

"என்ன எனக்குத்தான்..."

"கொஞ்சம் குழம்பியிருக்கிறது."

"எது?"

"எது குழம்பும் ?"

"புத்தியா ?"

"ஏன், மனம்கூடக் குழம்பும்."

"இரண்டும் குழம்பியிருக்கிறதா ?"

"அது உங்களுக்கே தெரியும்."

"என் புத்தி சரியாகத்தானிருக்கிறது."

"தெரிகிறது."

"எப்படித் தெரிகிறது ?"

"அவனைப் பற்றிக் கேட்ட உடனேயே நீங்கள் குதிப்பதிலிருந்து தெரிகிறது."

இதைக் கேட்ட சங்கருக்குப் பதில் என்ன சொல்வதென்று தெரியவில்லை. ஜெயத்தின் உள்ளத்தில் பொறாமை மூண்டு கிடப்பதைப் புரிந்து கொண்டான் அவன். காரணமும் அவனுக்குத் தெரிந்தே இருந்தது. காலையில் வந்தது முதல் தான் நடந்து கொண்ட முறை, தன் முகமிருந்த நிலை, எல்லாம் அவளுக்குத் தவறான எண்ணத்தைப் புகுத்தியிருக்குமானால், அது புரிந்து கொள்ளக்கூடியதே என்பது அவனுக்குத் தெள்ளென விளங்கியது. அந்த விளக்கத்தில் ஒரு மகிழ்ச்சியும் ஏற்பட்டது சங்கருக்கு. தன் மனைவியின் பொறாமை தன்னிடமுள்ள எல்லையற்ற அன்பிலிருந்து விளைந்தது என்பதை உணர்ந்தான் அவன். அதனால் அந்தச் சந்தர்ப்பத்தில் ஏற்பட்ட நிலையையும் ஆராய்ந்ததால் சற்று நேரம் மௌனமே சாதித்தான்.

அந்த மௌனம் ஜெயத்துக்குப் பெரும் வேதனையை அளிக்கவே, அவள் விசுபலகையிலிருந்து எழுந்திருக்க



முயன்றாள். சங்கரின் பலமான கையொன்று அவள் கையைப் பிடித்து மீண்டும் அவளை விசுபலகைப் பஞ்சணையில் இழுத்து உட்கார வைத்தது. "வேண்டாம், விடுங்கள்," என்றாள் ஜெயம் அலுப்புடன்.

"ஏன் ?" என்று வினவிய சங்கரின் குரலில் அன்பு பெருக்கெடுத்து ஓடியது.

அவள் உள்ளத்திலிருந்த பொறாமை அன்பின் ஒலியைக் கவனிக்க மறுத்தது. "நான் படுக்க வேண்டும்," என்றாள் அவள்.

"இங்கேயே படுத்துக் கொள்ளேன்," என்று மெத்தையில் இடம் விட்டான் சங்கர்.

"வேண்டாம், வேண்டாம்."

"ஏன் வேண்டாம் ?"

"உங்களுக்குக் கஷ்டமாயிருக்கும்."

"எனக்கா ! கஷ்டமா ! இதோ பார் !" என்று அவள் கன்னத்தைத் திருப்பித் தன்முகத்தைப் பார்க்கச் செய்தான்.

ஜெயத்தின் கண்களில் நீர் திரளும் போலிருந்தது. அதைக் கண்ட சங்கர் அவள் முகத்தைத் தன்னிடம் இழுத்து அவள் கண்களை உற்று நோக்கி, "ஜெயம் !" என்று குளிர அழைத்தான்.

அவள் பதிலேதும் சொல்லவில்லை. கழுத்தில் ஏற்பட்ட அசைவிலிருந்து துன்பத்தை அவள் விழுங்குகிறாளென்பதைப் புரிந்து கொண்ட சங்கரே மேற்கொண்டு சொன்னான். "ஜெயம் ! சங்கரை நீ இன்னும் புரிந்து கொள்ளவில்லையா ?" என்று.

"உம்," என்று ஜெயத்தின் குரலில் துக்கம் வழிந்தது.

"பார்க்கும் பெண்களைப் பார்த்துப் பல்லிளிப்பவனா உன் புருஷன் ?" இரண்டாம் கேள்வி கேட்டான் சங்கர்.

"பின்...?" அதற்குமேல் கேட்க முடியவில்லை ஜெய தால்.

"பின் அவனைப்பற்றிக் கேட்டதும் ஏன் துடித்தே னென்று கேட்கிறாய்? சொல்கிறேன் கேள். என்னைத் துரும்பென நடத்தினாள் அந்த நாட்டுப் பக்கிரி. கலையழகி யாம் கலையழகி! அவளிடம் கலையும் இல்லை. அழகும் இல்லை. இருப்பது என்ன தெரியுமா ஜெயம்? படாடோபம். வீண் டப்பம். தான் சீமான்தாவென்று அறிந்ததும் என்னைத் துரும்பென நடத்தினாள். அப்பா என்ன திமிர் பிடித்தவள்; அவள் தானிருக்கட்டும். பண்ணாடும் அம்மாக்கண்ணு மகள்; படிப்பில்லாதவள் படித்த அந்த தாமோதரம் எப்படி நடத்தினார் என்னை அவர், 'நல்லது, நல்லது' என்று சொன்னதைக் கேட் போது நாக்கைப் பிடுங்கிக் கொள்ளலாம் போலிருந்தது எனக்கு! சே! என்ன உலகம் இது? இதில் மனிதத் தன்மைக்கு மதிப்பில்லை ஜெயம். பணம், பதவி இரண்டுக் குத்தான் மதிப்பு. அவை இரண்டும் இல்லாததால், கேவலம் சித்தாந்தானாயிருந்து கலையழகியான இவ கூட அவமதிக்கும் நிலையில்தான் இருக்கிறேன்." ட— விடுவிடு, என்று பேசிக் கொண்டு போன சங்கர், நிம ஜெயத்தின் கைகளை இறுகப் பிடித்துக் கொண்ட

அவன் சொன்னதைக் கேட்கக் கேட்க மனதில் அன்பு வெள்ளம் பெருகியோடியது. மனத் துன்பத்துக்குக் காரணத்தைப் புரிந் அவள் மனதில் ஆனந்தம் பொங்கித் கன இன்னும் கணவன் மனம் தன்னிடம்தானிரு உணர்ச்சியால், அவள் உள்ளம் உடல் எல்லாம் விகசித்த தாமரை மலர்போல் ஆனாள் அவள். மலரை நீரில் ஊன்ற வைக்கும் திடமான நீண்ட யைப் போல் அவன் சிந்தனை திடப்பட்டது. அவள் கள் விரிந்து அவனைச் சுற்றி வளைத்தன.



சுடர்கள் காட்டிய அச்சடை அலைகளில் எழுந் ஆடிய அவன் மனக்கலத்தை இழுத்து நிறுத்திய நங்கூர மான அவள் கற்பு உடல் அவனை நாடியது. அவன் மனம் ராந்தியில் திளைத்தது. அன்பெனும் பூம்பொழில் விரிந்தது மனதில்.

அவள் கன்னம் அவன் கன்னத்துடன் இழைந்து கிடந் தது. அவன் மெள்ள அவள் காதுக்கருகில் உதடுகளைத் திருப்பி அழைத்தான், "ஜெயம்" என்று மெதுவாக.

"உம்." அவள் ஆசை உணர்ச்சி அந்த உம் ஒன்றுக்குத் தன் இடமளித்தது.

"ஜெயம்!" என்றான் இரண்டாம் முறை அவன். அந்தச் சமயத்தில் எத்தனை தடவை சொன்னாலும் இனிக்கும் சொல் அது.

"உம்."

"ஒன்று சொல்லட்டுமா?"

"ஊம்."

"நீதான் நங்கூரம்."

"என்ன?"

"துன்பக் கடலின் புயலில் ஆடிய என் மனக்கப்பலைப் நிறுத்தி விட்டாய்."

"ம்..."

அதன் பின் இருவரும் பேசவில்லை. வாய்ச்சொல் தேவைப்படாத வேளை அது.

# பக்கொழுந்தும் நாகரிகமும்

"ண்டகசாலை ஆண்டு விழாவுக்கு ராவ்சாகிபுவையும், கலையழகியையும் அழைக்கச் சென்னை சென்று, விவரிக்க ஒண்ணா வேதனையுடன் மீண்டு வந்த சங்கரின் மனக்

கப்பலின் இன்டாட்டத்தை மனைவியின் உறுதியான அன்பெனும் நங்கூரம் நிடப்படுத்தி அவன் மனச் சோர்வை அடியோடு ஒரே இரவில் துடைத்து விட்டதானாலும், சிலக்கொழுந்துவின் மனதிலேற்பட்ட பெரும் வெறுப்பையும் பிற்கால சந்ததிகளைப் பற்றிய கவலையையும், எந்தச் சக்தியாலும் துடைக்கவே முடியவில்லை.

சென்னையிலிருந்து வந்ததும் சிலக்கொழுந்துவின் மனைவியும் இன்முகத்துடன்தான் அவரை வரவேற்றாள். தான் கொடுத்த பட்டியலில் ஒன்றுகூட விடாமல் சகல சாமான்களையும் அவர் வாங்கி வந்திருந்ததைப் பார்த்ததும் அவளுக்குண்டான மனமகிழ்ச்சியும் முகமலர்ச்சியும் சொல்லத் தரமல்லதான். அதுவும் அவர் கந்தசாமி கோயில் கடை வீதியிலிருந்து நாட்டுப்புறத்தார் எல்லாரும் விரும்பி வந்த பெருங்காயத்தை வாங்கி வந்ததைக் கண்டவுடன், கணவர் ஏதோ பெரிய ஏரோப்ளேனையே வாங்கிக் கொண்டு வீட்டில் இறக்கிவிட்ட ஆதாகலத்தைக் காட்டினாள். அந்தக் குதூகலத்தைச் சொல்லிலும் காட்டி, "ஏங்க, சம்பந்தம் ஒண்ணுகூட விடாம வாங்கிக் கொடுத்திருக்கானே, முக்கியமா பெருங்காயத்தை விடலைப் பாருங்க," என்றாள்.

சிலக்கொழுந்து வியப்பு மண்டிய விழிகளை மனைவி மீது திருப்பி, "என்ன சொன்னே ?" என்று வினவினார். தான் பிராணனை விட்டு அவனுக்குப் பயந்து எல்லாச் சாமான்களையும் வாங்கிக் கொண்டு வந்திருக்க, பிள்ளை சகலத்தையும் புரட்டி விட்டதாக அவள் பேசியது அவருக்கு ஓரளவு எரிச்சலைக் கொடுத்தது. அவளின் அடுத்த வார்த்தைகள் அவருக்குக் கோபத்தைக் கிளறவில்லையானாலும், அவரது விஷமத்தைத் தூண்டவே செய்தன.

"சம்பந்தம்தானே சாமானை வாங்கி வந்தான் ? இல்லே, நீங்க கடைக்குப் போனீங்களா ?" என்றாள் சிலக்கொழுந்துவின் மனைவி.



"ஏன் ? கடைக்குப் போக எனக்குத் தெரியாதோ ?" என்று வினவினார் சிலக்கொழுந்து.

"உங்களுக்குத்தான் பட்டணமே தெரியாதே. அங்கே யிருக்கிற கடை எங்கே தெரியப் போவுது ?" என்று ஒரு கேள்வியைக் கேட்டாள் சிலக்கொழுந்துவின் மனைவி.

எல்லாரையும் பேச்சில் மடக்கும் திறமை வாய்ந்த சிலக்கொழுந்து, இதைக் கேட்டதும் என்ன பதில் சொல்வதென்று தெரியாமல் திணறிக் கொண்டிருக்கையில், அவர் மனைவி மேலும் சொன்னாள்: "சம்பந்தம் தான் பட்டணத்திலே இருக்கான். அவனுக்குத்தான் எல்லாம் தெரியும்," என்று.

"ஆமாண்டி, ஆமாம், பையன் எல்லாம் தெரிஞ்சுகிட்டிருக்கான்," என்று சிலக்கொழுந்து உறுமினார்.

"அதைத்தான் நானும் சொன்னேன், உங்களை அவன்தானே எல்லா இடத்துக்கும் கூட்டிக்கிட்டுப் போயிருப்பான்," என்றாள் அவள்.

"ஆமாம், ஆமாம், அவனேதான் கூட்டிகிட்டுப் போனான்," என்றார் சிலக்கொழுந்து இகழ்ச்சியுடன்.

"எல்லா இடமும் அவன் தெரிஞ்சு வைச்சுகிட்டிருக்கான்னு சொல்லுங்க. பட்டணத்துக்குப் போனாத்தான் நாலு விஷயமும் தெரியும்."

"நாலு என்ன ? நாப்பது தெரியும்."

"இங்கே வரப்போதெல்லாம் பிள்ளையை என்ன கரிச்சுக் கொட்டுவீங்க ! பட்டணம் போகவிட்டுத்தானே அவனுக்கு என்ன தெரியுங்கறதைப் புரிஞ்சுகிட்டீங்க !"

"இப்ப நல்லாப் புரிஞ்சு போச்சு. பய எல்லாத்தையும் கலனுச்சிருக்கான்."

"ஊம்."

''ஆமாண்டி, பொம்பிளைகளெல்லாம் என்னென்ன உடை உடுப்பாங்க, சினிமாக்காரி வீடெல்லாம் எங்கே யிருக்கு, அங்கெல்லாம் போனா நடந்துக்க வேண்டிய முறை என்ன, இதெல்லாம் பையனுக்குப் பூரணமாப் புரிஞ்சிருக்கு.''

சிவக்கொழுந்து இந்த வார்த்தைகளை மிக விஷமத்துடனும் வெறுப்புடனும் சொன்னாரானாலும், வெகுளியான அவர் மனைவிக்கு அவர் இடக்குப் புரியாததால், அவள் மகிழ்ச்சியுடன் சொன்னாள். ''பட்டணம்போகவே தான் பிள்ளைக்குக் கொஞ்சம் நாகரிகம் தெரிஞ்சிருக்கு. இல்லாமே போனா உங்களைப்போல அவனும் இந்தப் பட்டிக்காட்டையும் பஜனையையும் கட்டிக்கிட்டு அழவேண்டியதுதான்,'' என்று.

இதற்குப் பிறகு சிவக்கொழுந்து மனைவியுடன் பேச்சுக் கொடுக்கவில்லை. பட்டணத்தைப் பார்க்காதிருக்கும் தமது மனைவிக்குப் பட்டணத்தைப் பற்றிப் பிள்ளையாண்டான் ஊருக்கு வரும்பொழுதெல்லாம் போட்டிருந்த நாகரிக தூபம் எத்தனை மயக்கமேற்றியிருக்கிறதென்பதைப் புரிந்து கொண்டார் சிவக்கொழுந்து.

சிவக்கொழுந்து சென்னையிலிருந்து வந்த நாளன்று மாலை பஞ்சாயத்து ஆபிஸில் மருதநாயகத்தைச் சந்தித்துத் தமது பணி வெற்றிகரமாக நிறைவேறியதைப் பிரஸ்தாபித்தபோது, சற்று வெறுப்புடனேயே விஷயத்தைச் சொன்னார். விஷயத்தைக் கேட்ட மருதநாயகம் தம்மைப் பாராட்டியதைக் கூட அவரால் ரசிக்க முடியவில்லை.

தாமோதரமும் கலையழகியும் சிறுவயலுக்கு வர ஒப்புக் கொண்டு விட்டதைப் பற்றிக் காலையிலேயே சங்கரிடமிருந்து அறிந்து கொண்ட மருதநாயகம், அன்று மாலை ஆர அமர வந்து சிவக்கொழுந்து சம்பிரதாயமாக



விஷயத்தைச் சொன்னதைக் கேட்டவுடன், "சிவக்கொழுந்து, உம்மை அனுப்பினால்தான் காரியம் வெற்றியளிக்கும் என்றுதான் உம்மை அனுப்பினேன். நீர் செய்துள்ள சேவைக்குச் சிறுவயல் உமக்குக் கடமைப்பட்டிருக்கிறது," என்றார்.

''ஆமாம், பெரிதும் கடமைப்பட்டிருக்கிறது," என்று வெறுப்புடன் பதில் சொன்னார் சிவக்கொழுந்து.

அந்த வெறுப்பை மருதநாயகம் கவனிக்கவே செய்தார். ஆகவே சொன்னார், "சிவக்கொழுந்து, பெரியவரென்றால் உம்மைத்தான் சொல்ல வேண்டும்," என்று.

"எப்படிப் பெரியவன் நான்?" என்று வினவினார் சிவக்கொழுந்து.

"பெரிய சாதனைகளைச் செய்து விட்டு அதைச் சாதாரணமாகப் பாவிப்பவர்கள் பெரியவர்கள்," என்றார் மருதநாயகம்.

"அப்படியென்ன பெரிய காரியத்தைச் செய்து விட்டேன்?" என்று கேட்டார் சிவக்கொழுந்து.

"தாமோதரத்தையும் கலையழகியையும் சிறுவயலுக்குக் கொண்டு வருவது லேசுப்பட்ட காரியமென்று நினைக்கிறீர்களா?"

"இல்லை. இல்லை. லேசில்லை."

"என்னய்யா சொல்கிறீர்?"

"இரண்டுக்கும் செலவு ஐயாயிரம் ஆகும் போலிருக்கே."

"பணத்தைச் சொல்கிறீரா?"

"ஆமாம்."

"டாமிட், பணத்தைத் தள்ளுமையா."

சிவக்கொழுந்து உள்ளம் பதறியது. தள்ள வேண்டிய பணம் ஐயாயிரத்துக்கு வரும் என்று அவர் ஏற்கெனவே கணக்குப் போட்டிருந்தபடியால், அதை எப்படிப் பஞ்சாயத்து செலவழிக்க முடியும் என்று எண்ணினார். தவிர, அத்தனையும் பொது மக்கள் பணமாயிற்றே என்றும் நினைத்தார். அதைப் பற்றி, 'டாமிட், தள்ளுமையா' என்று மருதநாயகம் சொன்னது பெரு வியப்பாயிருந்தது அவருக்கு. ஆகவே கேட்டார், "தள்ளுவதற்குப் பஞ்சாயத்தில் பணம் ஏது ?" என்று.

"பஞ்சாயத்திலிருக்கிற பிசாத் காசை நம்பியா இவர்களை வரவழைக்கிறேன் நான் ?" என்று கேட்டார் மருதநாயகம் சிவக்கொழுந்துவை நோக்கி,

"அப்பொ ...?" என்று இழுத்தார் சிவக்கொழுந்து.

"தாமோதரத்தின் போக்குவரத்துச் செலவு முதலானதை நான் பார்த்துக்கிறேன். கலையழகி நடன செலவை மட்டும் பஞ்சாயத்திலே சாங்ஷன் செய்வோம், துண்டு விழுந்தா ஊர் மிராசுதாரர்கள் ஆளுக்கு நூறு போட்டால் தீர்ந்தது," என்று அலட்சியமாகப் பேசினார் மருதநாயகம்.

சிவக்கொழுந்து விஷயத்தைப் புரிந்து கொண்டார். செலவில் முக்கால்வாசியை வழக்கம்போல் மருதநாயகம் கொடுத்து விடுவாரென்பதை நினைத்து, எத்தனையோ துர்க்குணங்களிருந்தும் சிறுவயலைப் பெருமைப்படுத்துவதில் மருதநாயகத்துக்கு இருந்த தியாக புத்தியை நினைத்து மிகவும் பெருமிதமடைந்தார். 'பழைய பரம்பரை தர்மவான்கள் யாரோ ஒவ்வொருவர் ஒவ்வொரு கிராமத்திலும் இருப்பதால் தான் கிராமங்கள் எத்தனையோ வசதியின்மைகளுக்கிடையிலும் செழித்திருக்கின்றன' என்று தமக்குள் சொல்லிக் கொண்டார் சிவக்கொழுந்து. இருப்பினும் எல்லாச் செலவையும் மருதநாயகத்தின் தலையில் சுமத்த இஷ்டப்படாமல்,



"எல்லாவற்றுக்கும் நீங்களே செலவு செய்வது தவறு. வேண்டுமானால் நானும்..." என்று ஆரம்பித்தவரைக் குறுக்கே விழுந்து தடுத்த மருதநாயகம், 'சிவக்கொழுந்து, பேசவேண்டாம். நீர் ஒரு சல்லிகூடச் செலவழிக்கக் கூடாது. நான் செலவழிக்கிறேனென்கிறீரே யார் பணமய்யா இது ? சிறுவயலிலுள்ள வயல்கள் கொடுக்கும் பணம். அதில் ஒரு பகுதியைத்தானே சிறுவயலுக்குக் கொடுக்கிறேன். தாமோதரத்தையும் கலையழகியையும் வரவழைத்த காரியமே பெரிது. அதை நீர் சாதித்திருக்கிறீர்," என்றார்.

"அதற்கும் வழி சொல்லிக் கொடுத்தது நீங்கள் தானே ?" என்றார் சிவக்கொழுந்து.

"வழி சொல்லிக் கொடுத்தால் எல்லாராலும் சாதிக்க முடியுமா என்ன ? உம்ம காரியத்தைக் குறைத்துச் சொல்லிக் கொள்வதே உமக்குப் பழக்கமாகப் போயிற்று" என்ற மருதநாயகம், "சிவக்கொழுந்து, மீதிப் பணத்தையும் உமது தலைமேல்தான் போடப் போகிறேன்," என்றார்.

"சொல்லுங்கள் மருதநாயகம்," என்றார் சிவக்கொழுந்து.

"விழாவுக்குப் பந்தல் ஜோடனையும் மற்ற ஏற்பாடுகளையும் நீங்கள் கவனித்துக் கொள்ள வேண்டும். தாமோதரத்துக்கும் கலையழகிக்கும் என் வீடுகளில் இரண்டை ஒழித்து விடுகிறேன். மீதி விஷயங்களை நீங்கள் கவனித்துக் கொள்ளுங்கள்," என்று கேட்டுக் கொண்டார் மருதநாயகம்.

சிவக்கொழுந்து ஒப்புக்கொண்டு, அன்று முதலே ஏற்பாடுகளைப் பிரமாதமாகவும் செய்தார். விழா நாளும் நெருங்கிவந்து. சிறுவயல் அல்லோலகல்லோலப்பட்டது. விழா தினம் வந்தது. அதுவரையில் சங்கரின் வீடு அமைதியிலும் இன்பத்திலும் அமிழ்ந்து கிடந்தது. விழாவன்று

நடந்த ஒரு நிகழ்ச்சி, அந்த அமைதி இன்பம் அனைத்தையும் அடியோடு குலைத்தது. அந்த நிம்மதியான குடும்ப வாழ்வில் தாமோதரம், கலையழகி இருவருமே புகுந்தார்கள்.

## 17. சம்பந்தத்தின் முன்னேற்பாடு

ஏற்பாடுகளை மிக நன்றாகத் திட்டமிட்டு, 'இதைவிட ஏற்பாடுகளை யாரும் செய்ய முடியாது' என்று எல்லாரும் ஏகோபித்து ஒப்புக்கொள்ளும் அளவுக்குச் செய்து முடித்தார் சிவக்கொழுந்து.

விழாவுக்கு ஒரு வாரம் முன்னதாகத்தான் மறுபடியும் சிவக்கொழுந்துவைக் கூப்பிட்டு அனுப்பினார் மருதநாயகம். தலைவர் அழைப்புக் கிடைத்ததும் உடனடியாக ஓடிவந்த சிவக்கொழுந்துவிடம், "சிவக்கொழுந்து! அடுத்த தெருவிலிருக்கும் இரண்டு மாடி வீடுகளையும் ஒழித்து விட்டிருக்கிறேன். ஒன்றில் ராவ்சாகிப்பும் இன்னொன்றில் கலையழகியும் தங்கட்டும். நம் வீட்டிலிருந்தே இரண்டு சோபாக்கள், நாற்காலிகள் அனுப்புகிறேன். அந்த இரண்டு வீட்டிலும் கட்டில்கள் இருக்கின்றன. மற்ற சப்ளையை நீங்கள் கவனித்து விடுங்கள்," என்றார். "கவரொட்டிகள் வந்து விட்டன. அவற்றைக் கிராமங்களில் ஒட்ட நான் ஏற்பாடு செய்து விடுகிறேன். இந்தாரும், தாமோதரத்துக்கும் கலையழகிக்கும் சப்ளைகளுக்காக இது இருக்கட்டும்," என்று சொல்லி, இரண்டு நோட்டுக் கற்றைகளைக் கொடுக்கவும் செய்தார் மருதநாயகம்.

வீடு வந்து எண்ணிப் பார்த்ததில், பத்து ரூபாய் நோட்டு நூறு இருந்ததைப் பார்த்த சிவக்கொழுந்து பிரமித்தார். "இரண்டு பேர் சப்ளைக்கு ஆயிரம் ரூபாய் எதற்கு? இங்கு என்ன, இரண்டு பேரும் மாதக் கணக்கில்



தங்கப் போகிறார்களா?" என்று தம்மைத் தாமே கேட்டுக் கொண்டே, கூடத்து ஊஞ்சலில் மெள்ள ஆடிக் கொண்டிருந்த சிவக்கொழுந்துவைப் பார்த்த அவர் மனைவி, "எதுக்குங்க பணம், ஏன் கையிலே வச்சுக்கிட்டு முழிக்கிறீங்க?" என்று வினவினாள்.

"பணம் மருதநாயகம் கொடுத்தார். தாமோதரத்துக்கும் கலையழகிக்கும் சப்ளை செய்ய," என்றார் சிவக்கொழுந்து.

"என்ன சொல்றீங்க? இரண்டு பேர் சாப்பாட்டுக்கா இத்தனைப்பணம்? எத்தனை மாசம் இருக்கப்போறாங்க?" என்று கேட்டாள், சிவக்கொழுந்துவின் மனைவி.

"இரண்டே நாள்," என்றார் சிவக்கொழுந்து எரிச்சலுடன்.

"அதுக்கு இத்தனைப் பணம் எதுக்கு?" என்று கேட்டாள் அவர் மனைவி.

"அதுதான் புரியலை எனக்கும்," என்றார் சிவக்கொழுந்து.

அவர் மனைவி சிறிது நேரம் யோசித்தாள். பிறகு திடீரென்று அவள் முகத்தில் ஒரு புத்தொளி பிறந்தது. "அது நியாயந்தானே?" என்றாள் கடைசியில்.

"எது நியாயந்தானே?" என்றார் சிவக்கொழுந்து எரிச்சலுடன்.

"உங்களுக்குப் புரியலேன்னீங்களே அது," என்றாள் அவர் மனைவி.

"உனக்கு மட்டும் புரிஞ்சு போச்சோ?" என்று சீறினார் சிவக்கொழுந்து.

"எனக்கு மட்டும் எப்படிப் புரியும்? நானும் உங்களோடு இந்தப் பட்டிக்காட்டிலேதானே இருக்கேன்?"

"பின்னே யாருக்குப் புரியுங்கறே?"

"நம்ப சம்பந்தத்துக்கு ஒரு கார்டு போட்டு புர வழைங்க." என்று சொன்ன சிவக்கொழுந்துவின் மனைவி யின் முகத்தில் பெருமிதம் தாண்டவமாடியது.

மிகுந்த ஆத்திரத்தால், 'உம் உம்!' என்று ஏதோ சத்தங்களை வெளியிட்டு உறுமினார் சிவக்கொழுந்து. உள்ளெழுந்த ஆத்திரத்தின் காரணமாக அவர் அன்று பகல் வரை எதுவும் பேசவேயில்லை. இருப்பினும் தீவிர யோசனைக்குப் பிறகு சம்பந்தத்தை இரண்டு நாட்கள் புறப்பட்டு வரும்படி கார்டு எழுதினார்.

இரண்டு நாட்களுக்கு ஒரு வாரமாக லீவு எடுத்துக் கொண்டு சம்பந்தம் துரிதமாக வந்து சேர்ந்தான்.

தகப்பனுக்கும் பிள்ளைக்கும் சம்பாஷணையைச் சிவக் கொழுந்துவின் மனைவியே துவக்கி வைத்தாள். "சம்பந்தம்! இந்த விழாவில் அப்பாவுக்கு நீதாண்டா ஒத்தாசையாயிருக்கணும்," என்றாள் அவள்.

"என்னப்பா செய்யணும் நான்?" என்று பயபக்தி யுடன் வினவினான் சம்பந்தம்.

கூடத்து ஊஞ்சலில் உட்கார்ந்திருந்த சிவக்கொழுந்து தமது மனைவியையும் பார்த்துப் பையனையும் பார்த் தார். பிறகு ஏதோ காரணமில்லாமல் தமது கால்களை இரண்டு கைகளாலும் உருவி விட்டுக் கொண்டார். இப்படி ஏதோ சங்கடப்பட்டபின் விஷயத்தைச் சொல்லத் தொடங்கி, "டேய் சம்பந்தம்! விழாவுக்குத் தாமோதர மும் அவனும் வராங்களோ இல்லையோ?" என்றார்.

"ஆமாம்ப்பா. கலையழகி வராங்க," என்றான் சம் பந்தம் மிகுந்த மரியாதையுடன் 'ஸ்டாரி'ன் பெயரை உச்சரித்து.

"அவங்க ரெண்டு பேருக்கும் சப்ளை செய்யும் பொறுப்பு நம்முடையது." என்றார் சிவக்கொழுந்து.



சம்பந்தத்தின் முகத்தில் கவலையும் சந்துஷ்டியும் கலந்து தெரிந்தன. "ரொம்பச் செலவாகுமே அப்பா?" என்றான் கவலையை மட்டும் குரலில் காட்டி.

"செலவைப் பற்றிக் கவலையில்லை, மருதநாயகம் பணம் கொடுத்திருக்கிறார்," என்று விளக்கினார் சிவக் கொழுந்து.

இதனால் கவலை மறைந்த முகத்துடன் கேட்டான் சம்பந்தம். "பின்னே என்ன கஷ்டம்?" என்று.

"ஏண்டா, அவங்க என்ன சாப்பிடுவாங்கன்னு தெரிய வேண்டாமா? அதுக்கு ஒரு சமையற்காரனை ஏற்பாடு செய்ய வேண்டாம்?" என்றார் சிவக்கொழுந்து.

"சமையற்காரனை நாம்ப ஏற்பாடு செய்ய வேண் டாப்பா."

"ஏண்டா?"

"தாமோதரத்துடன் பட்லர் வருவான். அவனே அவங்க ரெண்டு பேருக்கும் சமைப்பான். நாம்ப சப்ளை மட்டும் செய்தால் போதும்."

"பட்லரா?"

"ஆமாம்ப்பா!"

"அவன் யார்ரா?"

"வெள்ளைக்காரர்களுக்குச் சமைக்கிறவன் அப்பா."

"வெள்ளைக்காரன்தான் போய்ட்டானேடா?"

"இருந்தாலும், அவன் மாதிரி வாழுறவங்க இருக் காங்க அப்பா."

"அதிலே தாமோதரம் ஒருவர் போலிருக்கு?"

"ஆமாம்ப்பா."

சிவக்கொழுந்து சற்று யோசித்துவிட்டு, "சரி சரி. அவர் என்ன சாப்பிடுவார் சொல்லு ?" என்று கேட்டார்.

"அவருக்கு வயிற்றுவலி. அதிகமாகச் சாப்பிடமாட்டார். காலையிலே கொஞ்சம் ஓட்ஸ் கஞ்சி, பகலிலே கொஞ்சம் ரைஸ், பாயில்ட் வெஜிடபிள்ஸ், சாயந்திரம் ஒரு ஸ்டீம் நக்ட் ஆப்பிள், டீ. ராவிலே ஒரு கப் மில்க், மல்டி விடமின் டாப் ஒன்று," என்றான் சம்பந்தம்.

சிவக்கொழுந்துவின் கண்கள் சம்பந்தத்தைச் சுட்டு விடுவனபோல் பார்த்தன. முக்கால்வாசி ஆங்கிலத்திலும் கால்வாசித் தமிழிலும் சொன்ன தாமோதரத்தின் உணவைக் கேட்டு அவர் கொதிப்படைந்திருந்த சமயத்தில், அவர் மனைவி பெருமையுடன் கேட்டாள், "இவனை வரவழைத்தது எவ்வளவு சௌகரியமாப் போச்சு ?" என்று.

"ரொம்ப சௌகரியம் ! ரொம்ப சௌகரியம்," என்று உறுமிய சிவக்கொழுந்து, "ஏண்டா, அவன் என்னடா சாப்பிடுவான் ?" என்று வினவினார்.

"காலையிலே ஒரு எக்கை தட்டிப் போட்ட ஒரு கப் மில்க். பகல்லே சிக்கன் பிரியாணி..." என்று மேலும் ஏதோ சொல்லப் போனவனை, "டேய், டேய் ! நிறுத்துடா. தமிழிலே சொல்லுடா." என்றார்.

"காலையிலே முட்டையை உடைச்சுப் போட்ட பால் கொடுக்கணும். பகல்லே கோழிக்குஞ்சு..." என்று சம்பந்தம் பேச்சை முடிக்கவில்லை.

"இருடா. என்ன சொன்னே ?" என்று சீறி எழுந்தார் சிவக்கொழுந்து.

"கோழிக் குஞ்சு சேர்த்த சோறு திம்பாங்க அப்பா..." என்றான் சம்பந்தம் சற்று நகர்ந்து.

"அப்புறம் ஆடோ ?"



"அது தினம் கிடையாது."

"அதுக்கப்புறம் என்ன ?"

"பகல்லே ஒரு டிபன், இராத்திரி சப்பாத்தி, பழம் பால், கொஞ்சம் மீன் வறுவல்..."

சிவக்கொழுந்து பார்த்த ஒரு பார்வை, சம்பந்தத்தை அப்படியே அசந்து நிற்க வைத்து விட்டது. "உனக்கு எப்படிடா இதெல்லாம் தெரியும் ?" என்று வினவினார் சிவக்கொழுந்து.

சம்பந்தம் வெற்றியுடன் தந்தையைப் பார்த்தான். "நீங்க இப்படிக் கேட்பீங்கன்னு தெரியும். அதனால்தான் முன்னேற்பாடோடு வந்திருக்கேன்" என்று சொல்லி விடுவிடு வென்று உள்ளே சென்று ஒரு சினிமாப் பத்திரிகையைக் கொண்டு வந்து ஒரு பாதியைப் பிரித்துக் காட்டினான். 'கலையழகியுடன் ஒரு நாள்' என்ற தலைப்பில் சினிமா நிருபரின் பேட்டி வந்திருந்தது. அதைக் கையில் வாங்கிக் கொண்டு ஊஞ்சலில் உட்கார்ந்திருந்த சிவக்கொழுந்து அதை ஊன்றிப் படித்தார்.

பிறகு சம்பந்தத்தை அவர் எதுவும் கேட்கவில்லை. அவன் 'முன்னேற்பாட்டை'க் கண்டு திகிலடைந்தார் அவர். அவன் படிக்கும் புத்தகங்கள் அவருக்கு வெறுப்பை ஊட்டின. அன்று மாலையே மருததாயகத்திடம் சென்று சப்ளையை வேறு யாரையாவது கவனிக்கும்படி கேட்டுக் கொண்டு திரும்பினார்.

# 18. பாரதத்தின் கலைகள்

சுத்த சைவரான சிவக்கொழுந்து தாமோதரத்துக்கும் கலையழகிக்கும் சப்ளை செய்யும் பணியை ஏற்க மறுத்ததால், சிறுவயல் கோழிகள் மூன்றும் அப்படிப் பிரமாதமாகப் பிழைத்து விடவில்லை. கலையழகியும் தாமோதரமும் வருவதற்கு ஒருநாள் முன்பே வந்துவிட்ட

தாமோதரத்தின் 'பி.ஏ.', கலையழகியின் வயிறு குளிருவ தற்கான ஏற்பாடுகளைச் செய்துவிட்டபடியால், கோழிக் குஞ்சுகள் சில பதப்பட்டு, கலையழகியின் வயிற்றில் ஜீரணமாயின. இதைப் பற்றிக் கேள்விப்பட்ட சிவக் கொழுந்து ஓரளவு வருத்தப்பட்டாலும் அந்தப் பாவம் தமது தலையில் இறங்காதது பற்றிச் சந்தோஷப்பட்டார். ஆகவே விழாப் பந்தலுக்கு வந்தபோது, மற்றவர்களைப் போல் ஆனந்தத்துடனேயே வந்தார்.

சிவக்கொழுந்துவின் ஏற்பாட்டால் விழாப்பந்தல் அன்று ஜெகஜ்ஜோதியாய் காணப்பட்டது. விழாவின் நிகழ்ச்சிகள் நடந்தேற அவர் இடம் பார்த்து அமைத் திருந்த மேடையும் பிரமாதமாக இருந்ததன்றி, மூன்று தெருக்களை இணைத்துப் போடப்பட்டிருந்த பந்தலில் சுமார் இரண்டாயிரம் பேர் உட்காருவதற்கும் வசதி யிருந்தது. மருதநாயகம் செலவை லட்சியம் செய்யாமல் சுவரொட்டிகளைப் பல கிராமங்களுக்கு அனுப்பியிருந்த தால், மாலை ஐந்து மணியிலிருந்தே பந்தலில் கூட்டம் நெருக்கிக்கொண்டு உட்கார்ந்திருந்தது. ஏதோ திருவிழா பார்க்க வருபவர்கள் போல், கிராமவாசிகள் பற்பல வித அலங்காரங்களுடனும் குழந்தை குட்டிகளுட னும் வந்திருந்தார்கள். பஞ்சாயத்து, பண்டகசாலை டைரக்டர்களின் குடும்பங்கள் உட்கார முன்னணியில் மேடைக்கு அடுத்தபடி போடப்பட்ட நாற்காலிகளும் நிரம்பிக் கிடந்தன. அன்று ஜெயம், தானும் முதல் தரமாக அலங்காரம் செய்துகொண்டு, மதுவையும் நன்றாக சிங்காரித்து அழைத்து வந்திருந்தாள். அவளும் குழந்தை யும் சிவக்கொழுந்தின் மனைவியின் பரிகாசத்துக்கு உள்ளானார்கள். "என்ன ஜெயம், கூரைப்புடவையைக் கட்டியாத்துட்டே! மருமகப் பிள்ளையையும் புதுக் கல்யாணப் பிள்ளையா அடிச்சுட்டே!" என்று விசாரித் தாள் சிவக்கொழுந்தின் மனைவி, ஜெயத்தையும் பார்த்து, மேடைக்கருகில் சிவக்கொழுந்துவுடன் நடமாடிக்



கொண்டிருந்த சங்கரின் சில்க் ஷர்ட்டையும் விசிறிமடிப்பு சரிகை அங்கவஸ்திரத்தையும் பார்த்து.

ஜெயம் மகிழ்ச்சிப் புன்முறுவல் கொட்டினாள். உண்மையில் சங்கர் அன்று மிக நைஸான நுரைப்பூ வேஷ்டியைக் கட்டி சில்க் ஷர்ட் அணிந்து நீண்ட நாளாகப் பெட்டியில் கிடந்த சரிகை அங்கவஸ்திரத்தையும் எடுத்து போட்டுக் கொண்டிருந்தான். அந்தப் புது உடையாலும் முகத்திலிருந்த அர்த்தசந்திர சந்தனத் திலகத்தாலும் ஏற்கெனவேயிருந்த அவன் இயற்கை அழகு ஆயிரம் மடங்கு அதிகமாகப் பிரகாசித்ததைக் கண்ட ஜெயம், ஏதோ புதி தாக அவனைக் கண்டுவிட்டதுபோல் பிரமிப்பின் எல்லையைத் தொட்டுக் கொண்டிருந்தாள்.

மணி ஆறு ஆகியதும், பந்தலிலிருந்த விளக்குகள் எரிய ஆரம்பிக்கவே, சிவக்கொழுந்து ஆட்களைவிட்டு மருதநாயகத்துக்குச் சொல்லியனுப்பினார். சற்று நேரத் துக்கெல்லாம் பக்கத்து ஊர் மிட்டாதாரரிடமிருந்து இரண்டு நாட்களுக்கு இரவல் வாங்கியிருந்த காரில் தாமோதரத்துடனும் கலையழகியுடனும் பந்தலுக்கருகில் வந்து இறங்கினார் மருதநாயகம். டவாலியணிந்த பஞ்சாயத்துப் பியூன்கள் மருதநாயகத்தையும் தாமோ தரத்தையும் காத்து வர, கலையழகியைச் சுற்றி போலீஸ் கான்ஸ்டேபிள்கள் பந்தோபஸ்து செய்ய மூவரும் மேடையிது ஏறினார்கள். முதலில் மேடைமீது வந்த மருதநாயகத்தையும் தாமோதரத்தையும் கண்டதுமே கரகோஷம் செய்த கூட்டம், கலையழகி மேடைமீது ஏறியதும் பைத்தியம் தலைக்கேறி நானாவிதமாகக் கூச்ச லிட்டது. போலீஸார் தடிகளைத் தலைக்குமேல் வீசிக் காட்டியும், கூட்டத்தின் பக்கங்களில் பாய்ந்து எழுந்த வாலிபர்களைத் தலையைப் பிடித்து அமுக்கி உட்கார வைத்தும், அமைதியை நிலைநிறுத்த முயன்றார்கள்.

கலையழகி மேடைக்கு நாட்டிய உடையிலேயே வந்திருந்தாள். அவள் அணிந்திருந்த உடையை,

கவனித்த மக்கள் அன்று பழைய பரத நாட்டியம் நடக்காது என்பதையும், புது பாணியில் சினிமா முறையில் நாட்டியம் நடக்குமென்பதையும் புரிந்து கொண்டார்கள். அது மட்டுமல்லாமல் மேடைக்கு எதிரே கீழேயிருந்த முதல் இரண்டு நாற்காலி வரிசைகளில் பெரிய பெரிய ஆங்கில வாத்திய வகையறாக்களைத் தூக்கிக் கொண்டு வந்து அமர்ந்த வாத்தியக் கோஷ்டியைக் கண்டதும் நட்டுவனார் தமது குழி ஜால்ராவைத் தட்டித் தட்டிப் பாடினதையே திரும்பத் திரும்பப் பாடிப் பிராணனை வாங்க மாட்டாரென்பதையும் புரிந்து கொண்ட ஜனங்கள், மகிழ்ச்சி வெள்ளத்தில் திளைத்தார்கள். அந்தக் கோஷ்டிக்கு நடுநாயகமாக பல் ஜிப்பாவுடனும், கிர்தாவுடனும், கையில் பிரம்புடனும் வந்த ஒருவரைப் பார்த்த சிவக்கொழுந்து, "ஏம்பா சங்கர்? இவர் ஏன் பிரம்பைத் தூக்கிக் கொண்டு வரார்?" என்று வினவினார்.

"அவர்தான் இந்த வாத்திய வித்வான்களை இயக்குபவர். பிரம்பைக் காட்டித்தான் இயக்குவார்," என்றான் சங்கர்.

"இவங்க என்ன துஷ்டப் பசங்களோ? பிரம்பைக் காட்டினாலொழிய..." என்ற சிவக்கொழுந்தை இடைமறித்த சங்கர், "அப்படியொன்றும் இல்லை. இது வாத்தியங்களை இயக்கும் புது முறை," என்று அறிவித்தான்.

சிவக்கொழுந்து அந்த வாத்தியக் கருவிகளையும் வாசிக்க வந்திருந்தவர்களையும் விநோதமாகப் பார்த்தார். அதே சமயத்தில் மேடைமீது ஏறிய கலையழகி இருமுறை நமஸ்காரம் செய்ததும் ஏற்பட்ட அல்லோலகல்லோலத்தைக் கண்டு ஜனங்களையும் இகழ்ச்சியுடன் பார்த்தார். ஆனால் அவர் இகழ்ச்சியை லட்சியம் செய்வார் அந்தக் கூட்டத்தில் யாருமில்லை. எல்லாரும் கலையழகியைக் காணும் மயக்கத்திலிருந்தனர்.



கலையழகி மேடைமீது தேவதைபோல் தோன்றினாள். அன்று வெள்ளையான மெல்லிய ஆடையையே அவள் அணிந்திருந்தாள். உதட்டில் சாயத்தை மிகச் சாமர்த்தியமாகத் தேவையான அளவுக்குப் பூசியிருந்ததால் மின்சார விளக்குகளின் ஒளியில் அவள் உதடுகள் செம்புகள் போல் பிரகாசித்தன. கண்களில் அவள் மையைத் தீட்டி இமைகளின் கடைக்கோடுகளை மையால் நீள இழுத்து விட்டிருந்ததால், அசாத்திய சலனத்துடன் கண்கள் தெரித்தன. அடுத்து நடக்க வேண்டிய நடனத்தை உத்தேசித்து மார்புக்குக் கச்சையே போட்டுக் கட்டி, அதன் மேலே சிறு மெல்லிய அங்கவஸ்திரத்தை மட்டுமே போர்த்தியிருந்தாள். இடுப்பில் இருந்த சரிகைப் பாவாடையும் உள்நிஜாரும் அவள் வயதை மிகக் குறைத்துக் காட்டின. தலை சீவப்பட்டிருந்த முறையிலும் அதிலிருந்து தொங்கிய ஓர் ஆபரணச் சரத்திலும்கூடப் புதுமையிருந்தது. செழித்த அவள் கன்னங்களும், புடைத்துத் தெரிந்த கை இடை முதலிய பகுதிகளும், காம இச்சையை அள்ளித் தெளித்தன.

அந்த அவயங்களோ அலங்காரமோ மக்களுக்குப் புதிதல்ல. சமீபத்தில் வந்த படமொன்றில் அவள் தரித்திருந்த நடன உடையை வேண்டுமென்றே அன்று தரித்திருந்தாள். இருப்பினும் திரையில் பார்த்ததை நேரிலும் பார்த்த மக்கள் அவளை அதிசயத்துடன் பார்த்துப் பார்த்துப் பிரமித்தனர். அவள் அமர்ந்திருந்த ஆசனத்துக்குப் பின்னாலிருந்த கறுப்புத் திரை அவள் அலங்காரத்தைப் பன்மடங்கு அதிகமாகக் காட்டியது. அவள் மேடையில் வந்தது முதல் ஏற்பட்ட சலசலப்பு கூட்டத்தில் அடங்காததால் துரிதமாக மருதநாயகம் நிகழ்ச்சிகளை ஆரம்பிக்கும்படி தாமோதரத்தைக் கேட்டுக் கொண்டார். ராவ்சாகிப் ஒருமுறை கலையழகியைப் பார்த்துப் புன்முறுவல் செய்து, அவளிடமிருந்து ஓர் ஆமோதிப்புப் புன்முறுவலையும் பெற்ற பிறகு மைக்கினிடம் வந்து 'பிரார்த்தனை' என்று விழா

வின் துவக்க நிகழ்ச்சியை அலட்சியமாக அறிவித்தார். அந்த அறிவிப்புக்குப் பின் மருதநாயகத்தின் சைகையைத் தொடர்ந்து மேடைக்கு வந்த சங்கர் செய்த நமஸ்காரத்தையும் அலட்சியத்துடன் வாங்கிக் கொண்டார். அவர் அலட்சியம் சில விநாடிகள் தானிருந்தது. பிறகு அவர் கண்கள் வியப்பால் மலர்ந்தன. உள்ளமும் பிரமித்தது.

சங்கர் பிரார்த்தனையைத் துவக்கியபோது அவனை மிகச்சாதாரணமாக மதிப்புப் போட்ட தாமோதரம், கூட்டத்தை இரண்டு விநாடிகளில் அவன் வளைத்து விட்டதைக் கண்டதும், வைத்த கண் வாங்காமல் அவனைப் பார்த்துக் கொண்டிருந்தார்.

சங்கரின் சங்கீதம் கணீரென்று எழுந்து அந்தக் கூட்டத்தை ஊடுருவியது. கர்நாடக சங்கீதத்தின் பரிசுத்தத்தையும் பலத்தையும் அறியாத தாமோதரம் அன்று அதன் சக்தியை ஓரளவு உணர்ந்தார். 'குலந்தரும்...' என்ற பாட்டை மந்தர ஸ்தாயியிலிருந்து சற்றே கரகரப்புள்ள ஜீவாவுடன் துவக்கிய அவன் சாரீரம் தனது கனத்தினாலும் பலத்தினாலும் முதல் விநாடியிலேயே அந்தப் பெருங்கூட்டத்தில் பெரும் அமைதியை நிலவச் செய்தது. அடுத்த பஞ்சமத்தைத் தொட்ட ஆனந்த பைரவியின் கனம், பரிமாணம், சாந்தம், மெள்ள படிப்படியாக மேலெழும்பி நிரவிக்கொண்டு மெள்ள ஷட்ஜமத்தைத் தொட்டு அதையும் தாண்டியதும் கூட்டத்தின் உணர்ச்சிகளை அடியோடு ஊடுருவிவிட்டது. 'குலந்தரும் செல்வம் தந்திடும்' என்ற வரிகளில் உலாவிய ஆனந்த பைரவியை அடுத்து, "அடியார் படுதுயராயின வெல்லாம் நிலந்தரும் செய்யும்..." என்ற வரிகள் பிலஹரியாக உருவெடுத்துச் சுழன்றும், அதையும் எடுத்துச் சுருண்டும் நீண்டும் மென்மையாகவும் கனத்தும் வந்த மோகனமும் சிந்து பைரவியும் ஏதோ வேறு உலகத்துக்கு மக்களை அழைத்துச் சென்று கொண்டிருந்தன. பாட்டின் சொல்



வழமும் சங்கர் இசையின் வேகமும் அந்தப் பந்தலை பெரும் மயக்கத்தில் இறுகப் பிடித்துக் கொண்டிருந்தபடியால், ஊசி விழுந்தாலும் சத்தம் கேட்கக்கூடிய பெரும் நிசப்தம் அங்கு குடிக் கொண்டிருந்தது. கர்நாடக சுத்தமான சங்கீதம் ராவ்சாகிப்பின் படாடோபத்தால் ஏற்பட்ட சலசலப்பு, கலையழகியின் நவீனத் தோற்றத்தால் ஏற்பட்ட பிரமிப்பு, ஆகிய இரண்டையும் விழுங்கி விட்டதே, கலையழகியும் தாமோதரமும் கூடப் பிரமித்தே உட்கார்ந்திருந்தனர். பிரார்த்தனையைப் பத்து நிமிடங்கள்தான் பாடினான் சங்கர். அந்தப் பத்து நிமிடங்களில் எத்தனை பெரிய பொக்கிஷம் சிறுவயல் பஞ்சாயத்தில் புதைந்து கிடக்கிறதென்பதை மக்கள் நினைக்கும்படி செய்தான். அவன் பிரார்த்தனைக் கீதம் முடிந்ததும் பெரும் கரகோஷம் வானைப் பிளந்தது. தாமோதரம் கையைப் பலமாகத் தட்டினார். கலையழகியின் முகத்தில் சற்று அசடு தட்டியிருந்தது. கைகளிரண்டும் அவளையும் மீறி லேசாகத் தட்டின.

சங்கர் பிரார்த்தனையை அடுத்து மருதநாயகம் நிகழ்த்திய வரவேற்பு உரையை யாரும் ரசிக்கவில்லையென்பதைக் கூட்டத்திலிருந்த சலசலப்பு நிரூபித்தது. ஆகவே மருதநாயகம் தமது வரவேற்பைச் சட்டென்று முடித்துக் கொண்டு, தாமோதரத்தைப் பேசும்படி கேட்டுக் கொண்டார். தாமோதரம் மக்களின் மனோநிலையை நன்றாகப் புரிந்து கொண்டபடியால், வெகு சாமர்த்தியமாகப் பேசினார். எத்தனையோ கூட்டங்களைப் பார்த்திருந்த ராவ்சாகிப்புக்கு அந்தக் கூட்டத்தைச் சமாளிப்பது அதிகக் கஷ்டமாகத் தானிருந்தது. இருந்தாலும் தமது சாமர்த்தியத்தால் சமாளித்தார். முதலில் சங்கர் மீது மக்களுக்கு ஏற்பட்டிருந்த அன்பை உபயோகப்படுத்தி, ஆரம்பத்திலேயே அப்ளாஸ் வாங்கிக் கொண்டார். "உங்கள் பஞ்சாயத்தில் இப்படியொரு கலைப்பொக்கிஷம் புதைந்து கிடப்பது

இன்றுவரை எனக்குத் தெரியாது." என்று சொற்பொழிவை ஆரம்பித்த தாமோதரம், 'கலைப்பொக்கிஷம்' என்று சொல்ல வந்த சமயத்தில், கையால் சங்கரைச் சுட்டிக் காட்டினார். அவ்வளவுதான், கரகோஷம் வானைப் பிளந்தது. அடுத்து அவர் சிறுவயலை மட்டுமின்றி, இந்தியாவின் கிராமங்களையும் பாராட்டினார் "நமது பாரதநாடு கலைகளில் சிறந்த நாடு. இந்த நாட்டின் சங்கீதம் நடனம் முதலியவைதான் உலகத்துக்குப் பழைய காலத்தில் வழிகாட்டிகளாக இருந்தன. அவை பிற நாட்டு ஆதிக்கத்தால் நசித்து விட்டதாகச் சொல்கிறார்கள். ஆனால் நான் நம்பவில்லை. நமது கலைகள் என்றும் நசுங்கா. அவை இந்த நாட்டின் கிராமங்களில் ஏதாவது மூலைகளில் புதைந்து கிடக்கும். என்னைச் சென்னையில் இதற்கு யாராவது சான்று கேட்டால் 'சிறுவயலுக்குப் போ' என்று கூறுவேன்" என்று முகவுரை பகன்றார் ராவ்சாகிப்.

மீண்டும் கரகோஷம் ஏற்பட்டது.

அந்த உற்சாகத்தை ராவ்சாகிப் நன்றாக உபயோகப் படுத்திக் கொண்டார். "இப்பொழுது உற்சாகப்படுகிறீர்கள். ஆனால் இந்த உற்சாகத்துக்கு நாம் கொடுக்க வேண்டிய உரு என்ன? பஞ்சாயத்துக் குமாஸ்தா வேலையா?" என்று வினவினார் ராவ்சாகிப்.

"இல்லை" என்று பல குரல்கள் கூட்டத்திலிருந்து எழுந்தன.

ராவ்சாகிப் "ஆம், இல்லை. அதற்குத் தகுந்த இடம் இது இல்லை. கலைஞர்கள் இருக்க வேண்டிய இடத்திலிருக்க வேண்டும். சென்னையில் இருக்க வேண்டும் என்று நான் சொன்னால், ஏதோ பட்டணத்தான் தனது ஊரைப் பெருமைப்படுத்திக் கொள்கிறான் என்று நினைப்பீர்கள். அதல்ல என் நோக்கம். பாரதத்தின்



கலைஞர்கள் செழிக்க வேண்டும். உலகம் அதன் சிறப்பை உணரவேண்டும் என்பது எனது அவா. நமது கலைகள் இன்று பாரதத்தின் கிராமங்களில் புதைந்து கிடக்கின்றன. ...ந்து விளக்காக இருக்கின்றன. அந்த விளக்கை வெளிப் எடுக்க வேண்டும். அதன் ஒளி உலகத்தை ஆட்கொள்ள வேண்டும். அதுதான் என் அவா. இதோ என் அருகில் அமர்ந்திருக்கும் கலைவாணியான கலையழகியும் கிராமத்திலிருந்தான் ஒரு காலத்தில். கிராமத்திலேயே அவன் இருந்திருந்தால் அவன் கதி என்ன? நடனக் கலையின் கதிதானென்ன? இரண்டும் மண்ணில் மக்கிப் போயிருக்கும். பட்டணம் வந்தான்; கலை மலர்ந்தது. ஏன்? அங்கு கலையைப் பயன்படுத்தும் சாதனங்கள் இருக்கின்றன. முக்கிய சாதனம் பணம். அது இருக்கிறது. கிராமத்தில் பள்ளாடினால் பத்து ரூபாய் கிடைக்கும். இன்று பட்டணத்தில் நடனமாடக் கலையழகி மேடை ஏறினால் பத்தாயிரம் கொடுக்கக் காத்திருக்கிறார்கள். அவர்கள் கலை இன்று மேடையிலும் பிரகாசிக்கிறது; திரைவானிலும் பிரகாசிக்கிறது. அத்தகைய ஒரு கலை சங்கரின் கலை. அது இந்தப் பிரார்த்தனை மேடையை விட்டுப் பட்டண மேடைக்கும் திரைக்கும் வருமானால் அதன் மதிப்பு என்ன தெரியுமா?" என்று கேட்டார் ராவ்சாகிப். சற்று நிதானத்துடன் சொன்னார்: "பாட்டுக்கு இரண்டாயிரம் ரூபாய். இவர் பாட்டில் கால்பாகமில்லாத பாட்டின் விலையைச் சொல்கிறேன்." என்று.

கரகோஷம் பந்தலைப் பிளந்தது. "இந்தக் கலைஞர் உங்கள் கிராமச் சொத்தல்ல. நாட்டின் சொத்து. இவர் சென்னை வரட்டும். ஒவ்வொரு வார்த்தையை ஒவ்வொ...டத்தில் போடுகிறேன். இவர் செல்வத்திலும் செல்வாக்கிலும் மிதப்பார்," என்று தாமோதரம் மெள்ளச் சங்கரை விட்டுக் கலையழகியிடம் தாவினார். "கலையழகியைப் பற்றி உங்களுக்குத் தெரியும். நான் சொல்லத் தேவை...

யில்லை. தவிர நீங்கள் மேடைமீது சற்று நேரத்தில் அவர்கள் நடனத்தைப் பார்க்கப் போகிறீர்கள்," என்று கூறி, "கலையழகி வாழ்க, அவர்கள் கலை வாழ்க!" என்றார்.

உடனே கூட்டம் வெறிபிடித்து, "கலையழகி வாழ்க, கலையழகி வாழ்க!" என்று கூச்சலிட்டது.

அடுத்தபடியாகத் தாமோதரம், மருதநாயகம் சிறுவயலுக்குச் செய்திருக்கும் சிறந்த சேவையைப் பற்றிச் சில வார்த்தைகள் சொல்லி, சிறுவயல் மக்களின் மேதையைப் பற்றி (அதில் உண்மையில் அவருக்கு நம்பிக்கையில்லாதிருந்தும்) பாராட்டி விட்டு, பெரும் கரகோஷத்தைச் சன்மானமாக வாங்கிக் கொண்டார். பஞ்சாயத்துக்கள் தமிழ் நாட்டின் பரம்பரைச் சொத்து என்பதையும் கூறி, தமது தமிழபிமானத்தையும் காட்டினார். அதற்குப் பல மேற்கோள்களையும் காட்டினார்.

அன்று தாமோதரம் மிக அருமையாகப் பேசினார். அந்தப் பேச்சு அப்படியே மக்களை மலைக்க வைத்தது. ஆனால் அது ஒரு பெரும் தீமையையும் அன்று விளைவித்தது. அவர் அன்று வைத்த தீமைப் பொறி தீப்பொறியாக ஒரு குடும்பத்தையே சுட்டது. அந்த தீப்பொறியை ராவ்சாஹிப் மூட்டினார். கலையழகி அதை நன்றாக ஊதினாள்.

## 19. கலையழகியின் நடனம்

ராவ்சாஹிப் தாமோதரத்தின் பேச்சின் சுவையாலும், சாகசத்தாலும் அவர் தமது குரலை எழுப்பியும் தாழ்த்தியும் உணர்ச்சிகளைப் பேச்சினூடே ஊடுருவ வைத்த திறமையாலும், அந்த மாபெரும் பந்தலில் திரண்டு நின்ற ஆயிரக் கணக்கான மக்கள் ஆச்சரியத்தால் மலைத்தார்களென்றால், பிரார்த்தனையை முடித்துவிட்டு மேடையி



லிருந்து கீழிறங்கி எதிரேயிருந்த ஆசனத்தில் அமர்ந்து விட்ட சங்கரின் மனதில் ராவ்சாஹிப்பின் சொற்கள் ஆசையெனும் பெரும் தீமையைப் புகைய வைத்து விட்டது. அந்த தீமையெனும் தீப்பொறி மேடையில் ஏற்பட்ட நிகழ்ச்சிகளின் விளைவாக உடனே பற்றி எரியவில்லையென்றாலும், அவன் மனத்தின் ஒரு மூலையில் இருந்து கொண்டுதானிருந்தது. அந்தச் சமயத்தில் அவன் மனதில் தன்னைப் பற்றிய ஒரு பெருமிதமும், ராவ்சாஹிப் பாராட்டியதால் ஏற்பட்ட பெருமகிழ்ச்சியுமே மண்டிக் கிடந்ததால், அவற்றின் அடியே கருவெனக் கிடந்த ஆசையை அவன் புரிந்து கொள்ள இயலவில்லை.

அடுத்த சில விநாடிகளில் கலையழகியின் நடனம் துவங்கி விட்டபடியால் தன் மனநிலையை முழுவதும் ஆராய்வதற்கோ, அலசிப் பார்ப்பதற்கோ அவகாசம் அவனுக்குச் சிறிதுமில்லை.

ஆர்ச்செஸ்ட்ரா ஒரு உருப்படியை வாசித்து முடித்ததுமே திரை எழுந்து மேடையில் கலையழகி தோன்றினாள். பெரிய பெரிய ஊர்களில் நடனமாடியிருக்கும் கலையழகி, சிறுவயல் போன்ற நாகரிகமற்ற ஊர்களின் குப்பலைக் காக்க வைப்பது எத்தனை அபாயமென்பதை அறிந்திருந்தாளாகையால், சிறிதும் தாமதியாமல் நடனமாட வந்தாள். திரை எழுந்து பந்தல் விளக்குகள் அணைந்ததால், மேடை விளக்குகளின் வெளிச்சத்தில் ஏதோ ஆகாசத்திலிருந்து வந்திருக்கும் தெய்வமங்கை போல் தோற்றமளித்தாள் அவள். விடுதியிலிருந்து வந்த போதே 'மேக்கப்' அணிந்து வந்திருந்தபடியால், முகத்தில் பவுடர் கலைந்த இடங்களை மட்டும் சற்றுச் சரிபடுத்திக் கொண்டு, மெல்லிய மேலாடையை இழுத்து இடுப்பில் செருகிக் கொண்டு மிகத் துரிதமாக வந்திருந்தாள்.

மேடை விளக்குகளின் வெளிச்சத்தில் தலையிலிருந்து தொங்கிய வைரச்சரம் பளபளவெனப் பிரகாசித்ததன்றி,

சரிகை இழைகள் ஓடியிருந்த மெல்லிய மேல் தகடியும் பிரமாதமாக ஒளிவிட்டது. இடையேயிருந்த பாவாடை இடையை மிகச் சுருக்கிக் காட்டியதன்றி இடைக்குக் கீழே மிக விரிந்தும் பாவியும் இருந்தது. ஆங்காங்கு புடைத்தும் செழித்துமிருந்த கைகளில் அணிந்திருந்த ஒவ்வொரு வளையலிலும் செம்பும் வைரமும் மின்னியதைக் கண்ட மற்றவர்கள் ஏதும் புரிந்து கொள்ளவில்லையென்றாலும், அவையெல்லாம் ராவ்சாகிப்பின் தாராளத்துக்கு அடையாளமென்பதைச் சிவக்கொழுந்து புரிந்து கொண்டார். இப்படிக் கூட்டத்தையும், ஏன், சிவக்கொழுந்துவையும் கூடக் கவர்ந்து சில வினாடிகள் மேடைமீது நின்ற கலையழகி, கண்களைத் திடீரென ஆகாயத்துக்காகத் தூக்கினாள். உடனே மேடை விளக்குகளும் அணைந்தன. மேடைக்குக் கீழே ஆர்செஸ்ட்ராவுக்குப் பக்கத்திலிருந்த பெரு விளக்கு சிவப்பு ஒளியை மேடை மீதிருந்த கலையழகி மீது வீசியதும், கலையழகி ஆட ஆரம்பித்தாள்.

கலையழகி அன்று பிரமாதமாக ஆடினாள். எந்தெந்த வளைவுகளைத் தன் உடலில் உண்டாக்கினால் அந்தந்த மக்களுக்குப் பைத்தியம் பிடிக்குமோ, அந்தந்த வளைவுகளை உண்டாக்கினாள் பலபடி. நெளிந்தாள். மேடையில் படுத்தாள். எழுந்திருந்தாள். மேடையில் அங்குமிங்கும் ஓடினாள். தாவினாள், துவண்டாள். இந்த அத்தனை வளைவுகளையும், ஓட்டங்களையும் விவரிக்கும் வகையில் மேடை மீதிருந்த பெருவிளக்கு ஒளிகளை மாற்றி மாற்றிச் சிவப்பும், பச்சையும், நீலமும், வெளுப்புமாக வீசியது. ஆர்செஸ்ட்ராவின் வாத்தியங்கள் திடீரெனப் பெரியதாகவும் அடுத்துச் சரேலெனத் தாழ்ந்தும், ஒருமுறை துரிதமாகவும் அடுத்து மிக நிதானமாகவும் மாறி மாறி ஒலிகளைக் கிளப்பின. அந்தந்த ஒலிகளுக்குத் தக்கபடி கலையழகி ஆடினாள். ஆனால் அவளை விட அதிகமாக ஆர்செஸ்ட்ராவின் இயக்குனர் எழும்பியும் தாழ்ந்தும் தமது கைப்பிரம்பைத்



திடீரென கரகரவென ஆட்டியும் பிராணனை விட்டுக் கொண்டிருந்தார். அவர் இத்தனை செய்தும் அவர் இருட்டில் இருந்தபடியால் அவரையாரும் பார்க்கவில்லை. வெளிச்சத்திலிருந்த கலையழகியையே பார்த்தார்கள்.

கலையழகி பல ரகங்களை நாட்டியங்களில் காட்டினாள். ஆனால் அந்த ரகங்களில் எல்லாம் காம இச்சையே பிரதானமாக இருப்பதைச் சிவக்கொழுந்து கவனித்தார். இடைக்கு மேலே மார்பையும், கீழே வயிற்றுப் பிரதேசத்தையும் அசக்கி அசக்கி முன்னழகுகளும், பின்னழகுகளும் குலுங்கக் குலுங்க நடந்ததில் அழகு இருந்தது. அது கண்களைக் கவரும் அழகுதான். ஏன் இதயத்தை இழுக்கும் அழகுகூடத் தான் என்பதைச் சிவக்கொழுந்து உணர்ந்தாரானாலும் அது இதயத்தில் நிலைக்கும் அழகல்ல என்பதை உணர்ந்தார். அந்த அழகில் முகபாவத்தின் உணர்ச்சிகள், கண்ணின் சுழற்சிகள் ஓரளவு இருந்தாலும், அவற்றையெல்லாம் சதைகளின் அசைவு இருக்குமிடம் தெரியாமல் அடித்து விட்டதை அவர் கவனித்தார். "இந்த நடனம் வாலிப வேகமுள்ளவர்களை ஈர்க்கும். ஆனால் எந்த வயதிலும் இதயத்தில் மென்மையை ஊட்டக் கூடிய கலைச்சிறப்பு இதில் குறைவு," என்று சிவக்கொழுந்து தமக்குள் சொல்லிக் கொண்டார்.

ஆனால் சிவக்கொழுந்துவின் கருத்து மிகத் தவறென்பதைக் கூட்டத்தார் தங்கள் ஆர்ப்பாட்டத்தினால் நிரூபித்தார்கள். அந்தக் கூட்டத்திலிருந்த அத்தனை பேரும் கலையழகியின் சதையசைவுகளைக் கண்டு பிரமித்தார்கள். மேடையில் அவள் வளைந்த விந்தையைக் கண்டு வியந்தார்கள். அவள் ஆட்டத்தைக் கண்டு சிவக்கொழுந்துவின் மனைவியும் சங்கரின் மனைவியும் கூடப் பிரமித்தார்கள். மது கண் கொட்டாமல் தன் கொட்டை விழிகளால் மேடையைப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தது. சில வேளை

களில் எதிர் நாற்காலியிலிருந்தவர்கள் மறைத்தபோது தாயின் மடியில் எழுந்தும் நின்று கொண்டது. அதற்கு நாட்டியம் வேடிக்கையாயிருந்தது. ஜெயத்துக்கோ அது பெரும் வேதனையாயிருந்தது தன் சிறப்பைக்கூட அந்த இரண்டு மணி நேரத்தில் அந்தக் குலமகள் மறந்து, 'இத்தனை அழகு உள்ளவளைப் பார்த்தால் அவர் மனம் என் திண்டாடாது?' என்று தனக்குள் சொல்லிக் கொண்டாள்.

அந்தச் சமயத்தில் முன் வரிசையில் சிவக்கொழுந்துவுடன் உட்கார்ந்திருந்த சங்கர் மீதும் கண்களை ஒரு முறை ஓட்டினான். சங்கர் மேடை மீது கண்களை நாட்டியது நாட்டிய படி உட்கார்ந்திருப்பதைக் கவனித்தான். அவன் மனதில் பொறாமை மீண்டும் மூண்டது. அது பெருமூச்சாகவும் ஒருமுறை வெளி வந்தது. அந்தச் சமயத்தில் கலையழகியின் நாட்டியமும் நடந்தது.

மேடை மீதும் பந்தலிலும் மீண்டும் விளக்குகள் பளிச்சிட்டன. மேடையின் நடுவே நின்று கால்களைக் குவித்து உடல் குனிந்து கரங்குவித்தான் கலையழகி. நாட்டியத்தின் கடைசிக் கட்டமாக அவன் காட்டிய நன்றி முத்திரை அது. அதைக் கண்ட மக்கள் பெருங் கூச்சலிட்டும், நிற்காமல் நிலையாமல் கரகோஷம் செய்தும் தங்கள் மதிப்பைக் காட்டினார்கள். அத்துடன் நிற்காமல் மேடையை நோக்கியும் நகரத் தொடங்கினார்கள். மக்கள் நகர்ந்ததைக் கலையழகி கவனித்தான். அவர்கள் நெருங்கி வந்தால் என்ன ஆகுமென்பதையும் உணர்ந்திருந்ததால், சரசரவென நடன உடையுடன் மேடை மீதிருந்து இறங்கி, மருதநாயகத்துக்கும் ராவ்ஸாகிபுக்கும் இடையில் உட்கார்ந்து கொண்டான்.

மக்களின் கலை(யழகி) வெறியை ஏற்கெனவே உணர்ந்திருந்த மருதநாயகம், அவர்களைத் தடுக்கப் போலீஸாரை மட்டுமன்றித் தமது ஆட்களையும் நிறுத்தி வைத்திருந்ததால் கூட்டம் மேடையையோ



அதை அடுத்திருந்த நாற்காலிகளையோ அணுக முடியவில்லை. இருப்பினும் பெரும் குழப்பம் பந்தலிலும் அதைச் சுற்றிலுமிருந்து கொண்டிருந்தது.

அதைப்பற்றி மருதநாயகம் அதிகம் கவலைப் படாமல், கலையழகியின் நாட்டியத்தைப் பாராட்டினார். "நீங்களும் ராவ்சாகிப்பும் இந்தச் சிறு கிராமத்துக்கு வந்தது எங்கள் அதிர்ஷ்டம்," என்றும் உபசாரமாகச் சொன்னார்.

சிவக்கொழுந்து அவர்கள் அருகாமையில் கூட வரவில்லை. சிவக்கொழுந்துவை மருதநாயகம் வலுக் கட்டாயமாகக் கிட்டே அழைத்து, "இவர் இந்தப் பஞ்சாயத்தின் தூண்," என்று கலையழகியிடம் பாராட்டிச் சொன்னார்.

கலையழகி ஒருபுறம் தலையைச் சாய்த்து, "தெரியுங்களே!" என்று கொஞ்சினாள்.

இப்படிப் பரஸ்பர உபசார வார்த்தைகள் நடந்த பிறகு, ராவ் சாகிபையும் கலையழகியையும் அழைத்துச் செல்ல நான்கைந்து போலீஸ்காரர்களைத் தடியுடன் வரும்படி அழைத்த மருதநாயகம், ஆசனத்தை விட்டு எழுந்தார். ராவ்சாகிபும் கலையழகியும் கூட எழுந்தார்கள். கலையழகி முன்னே செல்ல, அவனைத் தொடர்ந்து மருதநாயகமும் ராவ்சாகிபும் செல்லத் துவங்கியபோது, சிவக்கொழுந்து சும்மா இராமல் சங்கரை அருகில் வரும்படி அழைத்தார். சங்கர் வந்ததும், "அம்மா, இதோ எங்கள் ஊர்க் கலைஞர்" என்று புதிதாக எதையோ சொல்வது போல் சங்கரைப் பாராட்டினார்.

சங்கரும் கலையழகியை நோக்கிக் கரங்குவித்து "உங்கள் நாட்டியம் மிகவும் சிறப்பாயிருந்தது," என்று பாராட்டினான்.

கலையழகி பதிலேதும் சொல்லவில்லை. சில விநாடிகள் உற்றுப் பார்த்தாள் அவனை. 'ஊஹூம்'

என்ற சப்தம் மட்டும் அவனிடமிருந்து கிளம்பியது. அவன் கடையிதழ்கள் இகழ்ச்சியுடன் மடிந்தன. பிறகு அவனிட மிருந்து முகத்தை அலட்சியமாகத் திருப்பிக் கொண்டு வெளியே நடக்க முயன்றான்.

நான்கு பேர் முன்பு இப்படி அவமானப்படுத்தப் பட்டதன் காரணமாகச் சிலையென நின்றான் சங்கர். அவன் விபரீத நடத்தைக்குக் காரணம் மருதநாயகத் துக்குக்கூடப் புரியவில்லை. நிலைமையைச் சரிப்படுத்த, "அம்மா! அம்மா! இவர்..." என்று ஏதோ சொல்ல முயன்றார்.

அதற்குள் கலையழகி போலீஸ் காவலுடன் பத்தடி நடந்து விட்டாள். இடையே புகுந்த கூட்டம் மருதநாய கத்தை ராவ்சாகிபிடமிருந்தும், கலையழகியிடமிருந்தும் பிரித்துவிட்டது. மருதநாயகத்தின் முகத்தில் கோபம் மண்டிக்கிடந்தது. சிலக்கொழுந்துவின் முகத்தில் பழைய இகழ்ச்சியும் வெறுப்பும் விரவியிருந்தன. சங்கரின் மனோ நிலை சொல்லத் தரமல்லாதது. அங்கு, உருவெடுத்துக் கொண்டிருந்தது வேதனையா. வெறுப்பா, கோபமா? எல்லாமே அதில் இருந்தன.

அந்த உணர்ச்சிகளில் விளைந்ததோ பெரும் விபரீதம். அவன் வாழ்வின் ஒரு பெரும் மாறுதலுக்குப் பண்டக சாலை விழா நிகழ்ச்சிகள் அசைக்க முடியாத அஸ்திவாரத் தைப் போட்டுவிட்டன. அந்த நிலையில் இல்லம் செல்ல முயன்ற சங்கர், தன் மனைவியும் குழந்தையும்கூட அந்தப் பந்தலில் இருக்கிறார்களென்பதை மறந்தான். தன்னந் தனியே இல்லம் நோக்கி விரைந்தான்.

## 20. போதுமென்ற மனம்

கணவன் இதயத்திலே விபரீத எண்ணங்கள் கலந் துலாவிக் கொண்டிருந்ததையோ, அவற்றின் விளைவாக இரண்டு நாட்கள் கழித்துத் தங்கள் குடும்ப வாழ்க்கை யையே மாற்றவல்ல முடிவை அவன் எடுப்பான்



என்பதையோ சிறிதும் நினைத்துப் பாராமலும், கணவனுக்கு அன்றைய விழாவில் கிடைத்த கௌரவத் தையும் பாராட்டுதலையும் நினைத்து நினைத்துப் பெரு மகிழ்வெய்தியும் வீட்டுக்குத் திரும்பிய ஜெயம், திண்ணை மீது சங்கர் தன்னந்தனியே உட்கார்ந்திருப்பதையும், அவன் முகம் பேயறைந்ததுபோல் இருந்ததையும் கவனித்ததும், விடுவிடுவென்று படிகளிரண்டிலும் ஏறி மதுவை அவன் பக்கத்தில் உட்கார வைத்துவிட்டு, "ஏன், என்ன? உடம்புக்கு ஏதாவது...?" என்று கவலையுடன் கேட்கவும் செய்தாள்.

"உடம்புக்கு எதுவுமில்லை. கதவைத் திற," என்றான் சங்கர் வறட்சி தட்டிய குரலில்.

மது சிறிது நேரம் அவனைத் தன் பெருவிழிகளால் உற்றுப் பார்த்தது. பிறகு கேட்டது, "ஏம்பா! இன்னிக்கு நீ மேலே ஏறி நின்னு பாடினையோ இல்லையோ?" என்று.

அத்தனைத் துன்பத்திலும் சங்கர் குழந்தையை மடி மேல் எடுத்துவைத்து அணைத்துக் கொண்டான். அந்தக் குழந்தையின் தேகம் அளித்த ஆறுதலில் சிறிது மனச் சுமையும் இறங்கவே, "ஆமாம்மா," என்றும் கூறினான்.

"என்னை ஏன் நீ அங்கே அழைச்சிண்டுப் போகலை?" என்றது மது மீண்டும்.

"எங்கே?"

"நீ நின்னுண்டு பாடினையே, அங்கே."

"அங்கே சின்னவங்கள்ளாம் வரக்கூடாதுடா கண்ணு."

"வந்தா என்ன?"

இதற்குப் பதில் சொல்லத் தெரியாத சங்கர், மதுவின் கன்னத்தில் தன் இதழ்களை ஆழப் புதைத்தான்.

"நீ ஒண்ணும் முத்தம் இட வாணாம் போ," என்று சிணுங்கியது மது.

"பின்னே யாரையடா கன்னு இடுவேன் நான்?" என்று சங்கர் கொஞ்சினான்.

"உன்னோட மேடையில் உட்கார்ந்தாளே அவளை இட்டுக்கோ," என்றது மது.

இதைக் கேட்ட சங்கர் மலைத்தான். கதவின் பூட்டைச் சிரமப்பட்டுத் திறந்த ஜெயம் ஆத்திரத்துடன் மதுவிடம் வந்து அதை அரைத் தூக்கலாகத் தூக்கிக் கொண்டு கதவையும் படேலென்று ஓசையுடன் தள்ளித் திறந்து உள்ளே சென்றாள். அவர்களிருவரையும் சாதாரணமாகப் பின்தொடரும் பழக்கமுள்ள சங்கர் அன்று அவர்களுடன் போகவில்லை. வாசல் திண்ணையிலேயே உட்கார்ந்திருந்தான். உள்ளே சென்று மதுவை இரண்டு சாத்து சாத்தி, பலவந்தமாகச் சோற்றைப் போட்ட ஜெயம், வெளியில் வந்து, "தட்டை வைத்துவிட்டேன்," என்றாள்.

சங்கர் அவளை ஒரு முறை ஏறெடுத்து நோக்கினான். பிறையில் இருந்த அகல் விளக்கின் வெளிச்சத்தில் அவள் முகத்தின் கோபம் மிகப் பயங்கரமாகத் தெரிந்தது. அந்தக் கோபத்துக்குக் காரணம் மதுவின் பேச்சே என்பதை அவன் உணர்ந்திருந்ததால் சிறிது புன் சிரிப்பும் அவன் இதழ்களில் தவழ்ந்தது. "இப்பொழுது என்ன நடந்து விட்டதென்று குழந்தையை இந்தப் பாடுபடுத்துகிறாய்?" என்று வினவினான் சங்கர்.

"நடக்காதது உங்களுக்குக் குறைச்சலாயிருந்தால், அதையும் தீர்த்துக் கொள்கிறதுதானே?" என்றாள் ஜெயம் கடுங்கோபத்துடன்.

"எதைச் சொல்லுகிறாய்?" என்று வினவினான் சங்கர்.



"புரியவில்லையோ உங்களுக்கு?" ஜெயத்தின் குரலில் சினம் மண்டிக் கிடந்தது.

"புரியவில்லை."

"அதுதான் பெண் சொல்லிக் கொடுத்தாளே இப்பொழுது!"

"என்ன சொல்லிக் கொடுத்தாள்?"

"அந்த நாட்டியக்காரியை முத்தம் இட்டுக் கொள்ள."

அத்தனை மனத்துயரத்திலும் புண்பட்ட இதயக் கொந்தளிப்பிலும்கூட அந்த சமயத்தில் வாய்விட்டுச் சிரித்தான் சங்கர். தன்னைத் துரும்பாக நினைத்து நடத்திய கலையழகியிடமே இத்தனைப் பொறாமை ஜெயத்துக்கு இருக்குமானால், உண்மையில் கலையழகியுடன் தான் நெருங்கிப் பழகினால் வீடு நரகமாகிவிடும் என்பதைப் புரிந்து கொண்டான் சங்கர். ஆனால், கலையழகி தன்னை நடத்திய தோரணையில் அவளுடன் தான் பழகுவது குதிரைக் கொம்பு என்பதை உணர்ந்ததால் மறுபடியும் ஒருமுறை நகைத்தான்.

"எதற்குப் பைத்தியம் போல் சிரிக்கிறீர்கள்?" என்று கேட்டாள் ஜெயம்.

"பைத்தியம் போல் என்ன? பைத்தியம்தான்," என்றான் சங்கர்.

"யாரிடம் பைத்தியம்? அவளிடமா?"

சங்கர் ஒருமுறை அவளை ஏறிட்டுப் பார்த்தான். அவன் முகத்திலிருந்த சிரிப்புக் குறி மறைந்தது. "பைத்தியம் எனக்கல்ல, உனக்குத்தான்," என்றான் முடிவாக.

"எனக்கா!" என்றாள் ஜெயம் கோபத்துடன்.

"ஆம்." சங்கரின் பதில் திட்டமாக வந்தது.

"என்ன பைத்தியம் எனக்கு ?"

"பைத்தியமில்லாவிட்டால் அவளைப் பற்றி இப்படிப் பேசமாட்டாய்."

"அப்படியா, விஷயம் ?"

"ஆமாம். நீ அவளைச் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை."

"நீங்கள் சரியாகப் புரிந்து கொண்டு விட்டீர்களாக்கும் ?"

"ஆமாம்."

"பின் அவள் வாலைப் பிடித்துக் கொண்டு போவது தானே ? இங்கு ஏன் வந்தீர்கள் ?"

ஜெயத்தின் இந்தக் கடைசிச் சொற்களைக் கேட்ட சங்கரின் முகத்தில் எள்ளும்கொள்ளும் வெடித்தன. திண்ணையிலிருந்து திடீரென எழுந்த அவன், "நீ முட்டாள் ! வழியை விடு," என்று சொல்லிக் கொண்டு அவளை ஒரு கையால் தள்ளி வழி செய்து கொண்டு உள்ளே விடுவிடு என்று சென்று விட்டான்.

அவனைத் தொடர்ந்து ஜெயமும் உள்ளே நுழைந்து நேராக அடுக்களைக்குச் சென்று உட்கார்ந்திருந்தாள். நாழிகைகள் ஓடினவே தவிர, காமிரா அறைக்குள் சென்று சங்கர் அதைவிட்டுக் கிளம்பவே இல்லை. தரையில் வைத்த தட்டையும் சுவர் ஆணியில் தொங்கிய அகப்பைக் கட்டையையும், மதுவுக்கு எடுத்த இரண்டு கரண்டி சாதம் தவிர மீதிச்சாதத்துடன் இருந்த வெண்கலப் பானையையும் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாள் ஜெயம். கணவன் உணவருந்த வராததால் காமிரா உள்ளை நோக்கிச் சென்றாள்.

காமிரா உள்ளின் நிலை பரிதாபமாயிருந்தது. சங்கர் விசிறி மடிப்பு அங்கவஸ்திரத்தை ஒரு மூலையில் எறிந்து



விட்டு, சில்க் ஷர்ட்டைக் கழற்றாமலே படுக்கையில் கிடந்தான். மது அறையின் ஒரு மூலையில் பயந்து நின்று கொண்டிருந்தது. சுவரிலிருந்த வால் லாம்ப் கூட அந்தக் காட்சியால் ஒளி மங்கிக் கிடந்தது. உள்ள நிலையை ஒரே பார்வையில் அளவெடுத்துக் கொண்ட ஜெயத்தின் முகத்திலிருந்த கோபம் பறந்தது. மெள்ளக் கணவன் படுக்கையை நெருங்கி அதன் முனையில் உட்கார்ந்து கொண்டாள். பிறகு அவன் நெற்றியில் கையை வைத்துப் பார்த்தாள். சிந்தனைகளின் ஓட்டத்தாலும் உள்ள உணர்ச்சிகளின் நெகிழ்ச்சியாலும் துளிர்த்திருந்த வியர்வை முகத்தை ஐஸ்கட்டி போல் அடித்திருந்தது.

ஜெயத்தின் முகம் கனிந்தது. கணவன் நெற்றியில் கை வைத்தபடியே, "வாருங்கள் சாப்பிடலாம்," என்றாள் முகக் கனிவுக்கிணையாகக் கனிந்த குரலில்.

சங்கர் அவளை வெறுத்துப் பார்த்தான். "பசியில்லை ஜெயம்." என்றும் சொன்னான்.

"ஏன் பசியில்லை ?" என்றாள் ஜெயம்.

"மனம் சரியில்லை." என்றான் சங்கர்.

"உங்கள் ஜெயத்தின் முட்டாள்தனம் உங்களுக்குத் தெரியாதா ?" என்று கேட்டாள் அவள் அனுதாபத்துடன்.

"நீ முட்டாளென்று யார் சொன்னது ?"

"ஒருவர் சொல்வானேன் ? உங்களை அனாவசியமாகக் கடிந்து கொண்டேனே !"

"விஷயம் புரியாததால் கடிந்து கொண்டாய். நீ இருக்கும்போது இன்னொருத்தியிடம் என் மனம் போகுமா ஜெயம் ?" என்ற சங்கர், அவள் இடையில் கையைத் தவழ விட்டான்.

சிறிது நேரம் இருவரும் பேசவில்லை. திடீரென்று, பஞ்சணை முகப்பிலிருந்து எழுந்திருந்த ஜெயம் அறை

மூலையில் அவர்கள் இருவரையும் பார்த்துக் கொண்டு கொட்டை விழிகளுடன் நின்று கொண்டிருந்த மதுவை எடுத்துக் கொண்டு வந்து கணவனிடம் கொடுத்துவிட்டு, "இவனைத் தூங்கச் செய்யுங்கள். இதோ வந்து விட்டேன்," என்று சொல்லி விடுவிடு என்று வெளியே சென்றாள்.

சென்றதும் அடுக்களையை நன்றாக ஒழித்து வெண்கலப் பானையை மூடி வைத்தாள். பிறகு பாலைக் காய்ச்சி, செம்பில் கொட்டிக் கொண்டு காமிரா அறைக்குத் திரும்பினாள்.

அவள் வந்தபோது மது சங்கரின் மார்பில் படுத்த படியே நன்றாகத் தூங்கிவிட்டது. பால் செம்பை வழக்கப் படி ஜன்னலில் வைத்த ஜெயம், தரையில் பாயை விரித்துப் போட்டு மதுவை எடுத்து அதில் விட்டாள். பிறகு பால் செம்புடன் கட்டிலின் முனையில் உட்கார்ந்து கொண்டு "எழுந்திருங்கள்," என்று கணவனுக்குக் கட்டளையிட்டுப் பாலை டம்ளரில் ஊற்றிக் கொடுத்தாள்.

டம்ளரில் வழிய வழிய இருந்த பாலைப் பார்த்த சங்கர், "இத்தனை பால் வேண்டாமே !" என்றான்.

"சாதந்தான் சாப்பிடவில்லை, பாலும் சாப்பிடாமல் போனால் ?" என்றாள் ஜெயம் கவலையுடன்.

"நீ சாப்பிட்டாயா ?" என்று வினவினான் சங்கர்.

"இல்லை, எனக்குப் பசிக்கவில்லை," என்றாள் ஜெயம்.

"எனக்கு மட்டும் பசிக்குமா ?" என்று சங்கர் கேட்டான்.

ஜெயத்தின் இதயத்தில் ஏதேதோ எண்ணங்கள் ஓடின. ஆனால் அவற்றில் எதையும் வெளிக்குக் காட்டிக் கொள்ள வில்லை. "சரி சரி. சாப்பிடுங்கள்," என்றாள் அவள்.



"முதலில் நீ சாப்பிடு," என்று பால் டம்ளரை அவளிடம் நீட்டினான் சங்கர்.

"நீங்கள் சாப்பிட்ட பின்புதான் நான் சாப்பிடுவேன்."

"ஏன் ?"

"நீங்கள் புருஷர்."

"அதனாலென்ன ?"

"புருஷன் சாப்பிட்ட பின்புதான் மனைவி சாப்பிட வேண்டும். இது நியதி."

சங்கர் அவளை உற்று நோக்கினான். அத்தனை கவலையிலும் அவள் முகம் மிக அழகாயிருந்தது. அவள் செவ்விய அதரங்கள் கூம்பிக் கிடந்ததிலும் தனிச் சுவை இருந்ததை அவன் உள்ளம் அறிந்தது. சொற்கள் அவனிட மிருந்து தழு தழுத்து வந்தன. "அந்த நியதி பொது நியதி, ஜெயம்," என்றான் சங்கர்.

"அப்படியென்றால் ?" என்று கேட்ட ஜெயம் அவன் கைகளிரண்டும் தன் இடையை அழுத்துவதை உணர்ந்தாள்.

"படுக்கை அறை நியதி வேறு," என்ற சங்கர் எழுந்து உட்கார்ந்து கொண்டான்.

ஜெயத்தின் கண்களில் வெட்கமும் மகிழ்ச்சியும் படர்ந்தன. "அப்படியா !" என்றாள் அவள்.

இருவரும் அந்த இரவில் பெயருக்கு இரண்டு வாய் பாலைத்தான் குடித்தார்கள். பால் செம்பையும் டம்ளரையும் வைத்துவிட்டுத் திரும்பக் கட்டிலுக்கு வந்த ஜெயத்தை ஏதோ வெறி பிடித்தவன் போல் வாரி அணைத்துக் கொண்ட சங்கர், அந்தக் கற்புக்கரசியிடம்

தன் மன அலைச்சலுக்கு ஆறுதலைத் தேடினான். பிறகு ஜெயத்திடம் கேட்டான் சங்கர், "ஜெயம்! இந்த வாழ்க்கை உனக்குப் பிடிக்கிறதா?"

"எந்த வாழ்க்கை."

"இந்த அல்ப வாழ்க்கை."

"நம் வாழ்க்கையில் அல்பமென்ன இருக்கிறது?"

"அவன் என்னை இன்று துரும்பென நடத்தினான், தெரியுமா?"

"தெரியாதே!"

"தெரியாதென்றால் தெரிந்து கொள் ஜெயம். சென்னையில் மிகக் கேவலமாக நான் நடத்தப்பட்டேன். நான் சமுதாயத்தில் எத்தனை சின்னஞ் சிறியவன் என்பதைப் புரிந்து கொண்டேன். இன்று அது ஊர்ஜிதமாகி விட்டது. என்னிடம் கலையில்லையா? சாமர்த்தியமில்லையா எதற்காக நான் சின்ன மனிதனாயிருக்க வேண்டும்?" என்று சங்கர் உணர்ச்சியுடன் சொன்னான்.

ஜெயம் பதில் சொல்லவில்லை. "ஜெயம்!" என்று அழைத்தான் சங்கர்.

"என்ன?"

"நான் எது செய்தாலும் ஒப்புக் கொள்வாயா?"

"ஒப்புக் கொள்ள வேண்டியது என் கடமை."

"நான் ஒரு முடிவுக்கு வந்திருக்கிறேன்..."

"சரி."

"ஆரம்பத்தில் சிறு கஷ்டங்களிருக்கலாம்! ஆனால் முடிவு பிரமாதமாயிருக்கும்."

"சரி."



"நீ மனப்பூர்வமாக அனுமதி கொடுக்கிறாயா?"

"கொடுக்கிறேன்."

"எதற்கென்று கேட்கவில்லையே நீ?"

"கணவன் எவ்வழி அவ்வழி மனைவி. ஆனால் ஒன்று சொல்லத் தோன்றுகிறது."

"என்ன? சொல்லேன்."

"போதுமென்ற மனமே பொன் செய்யும் மருந்து என்று ஒரு பழமொழி இருக்கிறது."

இதற்கு சங்கர் பதில் சொல்லவில்லை. அதை ஒப்புக் கொள்ளும் பக்குவத்தில் அவன் மனம் இல்லை. தன் முடிவில் உறுதியாக நின்றான். அந்த முடிவை அடுத்த மூன்றாவது நாள் நிறைவேற்றவும் செய்தான். அவன் செய்கையைக் கேட்டுச் சிறுவயல் கிராமமே பதறியது.

## 21. இரண்டு முத்திரைகள்

கடவுள் எத்தனை பெரியவர்? இக் கேள்விக்கு மகா இலக்கிய விமர்சகரான நம்பிள்ளை என்ற பெரியார் பதில் சொல்லியிருக்கிறார். "மனிதனுடைய ஆசை எத்தனை பெரியதோ அத்தனை பெரியவர் கடவுள்." என்று அவர் தமது ஈட்டு இலக்கியத்தில் விளக்கம் தந்திருக்கிறார். இதை விடச் சிறந்த விளக்கத்தை யாரும் கொடுக்க முடியாது." கடவுளைப் போலவே மனிதனுடைய ஆசையும் அளவிட முடியாதது. அந்த ஆசை ஒருமுறை மனிதனைப் பிடித்து விட்டால் அவன் என்ன விபரீதங்களுக்கு ஆளாவான் என்பதை யாராலும் சொல்லவும் முடியாது.

தாமோதரத்தின் சொற்கள் விளைவித்த ஆசையெனும் பிசாசின் வசப்பட்ட சங்கரின் மனநிலை பெரும் விபரீதத்துக்கு உட்பட்டிருந்தது. தனது இசைத் திறமை

யைப் பற்றித் தாமோதரம் சொன்னதில் பெரும் உண்மை யிருந்ததென்பதைத் திரும்பத் திரும்ப அவன் மனம் சொல்ல, தன் திறமையில் நூற்றிலொரு பங்கு திறமையோ யோக்கியதையோ அற்ற கலைமுகி தன்னை அவமதித்து விட்டதை அவன் இதயம் திரும்பத் திரும்ப எடுத்துக் காட்ட, வாழ்வில் தனக்குள்ள உண்மையான அந்தஸ்தைத் தேடிக் கொள்ள அவன் தீர்மானித்தான். அந்தத் தீர்மானத்தின் விளைவாக, கிறுவலே பதறும்படியான அந்தக் காரியத்தை அவன் செய்தான்.

சுமார் ஆறு ஆண்டுகளாகப் பலரும் மதிக்கும்படி பஞ்சாயத்தில் வேலை பார்த்து வந்த சங்கர், அப்படித் திடுதிப்பென்று தமது வேலையை ராஜிநாமாச் செய்து விடுவானென்று யாருமே எதிர்பார்க்கவில்லை. ஆகையால் கிராமத்திலுள்ள எல்லாருமே அதைப் பற்றித்தான் திரும்பத் திரும்பப் பேசிக் கொண்டிருந்தார்கள்.

அந்த ராஜிநாமாக் கடிதம் கொடுக்கப்பட்ட போது எதற்கும் மசியாத மருதநாயகமே அதிர்ச்சியடைந்தார். அதிர்ச்சி தீர்ந்தபின் கோபத்தின் வசமும் சிக்கியதால் எதிரே பணிவுடன் நின்ற சங்கரை நோக்கிக் கேட்டார், "சங்கர்! உன் புத்தி சுவாதீனத்தில் இருக்கிறதா?" என்று.

ஆசை விஷம் சூழ்ந்திருந்த மனத்துடனிருந்த சங்கர் நிதானமாகவே பதில் சொன்னான், "என் புத்தி பிசகவில்லை ஐயா," என்று.

"இந்த முடிவின் விளைவுகளை யோசித்து விட்டாயா?" என்ற மருதநாயகத்தின் குரலில் கடுமை பலமாக இருந்தது.

"மூன்று நாட்களாக அதே யோசனைதான்," என்றான் சங்கர் உறுதியான குரலில்.

"ராஜிநாமாவுக்குப் பிறகு என்ன செய்வதாக உத்தேசம்?" என்று வினவினார் மருதநாயகம்.



"அது என் சொந்த விஷயம்," என்றான் சங்கர் சற்று முரட்டுத்தனமாக.

இதைக் கேட்ட மருதநாயகத்தின் முகத்தில் கோபம் சிறிதும் வரவில்லை. அவனை விநோதமாகக் கூர்ந்து நோக்கினார். முரடனான தம்மிடமே அப்பாவி சங்கர் முரட்டுத் தனத்தைக் காட்ட வேண்டுமென்றால், அவனுக்குப் புத்தி கண்டிப்பாய்ப் பிசகித்தானிருக்கிறதென்று தீர்மானித்துக் கொண்டார். ஆகவே முடிவாகச் சொன்னார். "சங்கர்! இன்னும் மூன்று நாள் அவகாசம் தருகிறேன். நன்றாக யோசித்துப் பார். நான்காவது நாள் இதை நீ வாபஸ் வாங்காவிட்டால் ஐந்தாவது நாள் இந்த ஆபீசுக்குள் கால் வைக்க வேண்டாம்," என்று சீறிவிட்டு, அவனை வெளியே அனுப்பினார். ஆனால் சங்கர் அந்த மூன்று நாட்களுக்குப் பிறகும் மசியாமல் தான் பிடித்த பிடியில் நின்றான். சிவக்கொழுந்து, அவர் மனைவி இருவரும் மன்றாடியுங்கூட அவன் தன் பிடிவாதத்தை விடவில்லை.

ராஜிநாமாக் கடிதத்தை அவன் கொடுத்த அன்றே அதைப்பற்றிக் கேள்விப்பட்ட சிவக்கொழுந்து மிக அவசரமாக அவன் வீட்டுக்கு மனைவியுடன் வந்து சேர்ந்தார். காமிரா அறைக்குள் உட்கார்ந்திருந்த அவனுக்கு எதிரில் கட்டிலில் உட்கார்ந்த அவர், அவனை நோக்கி, மாப்பிள்ளை! என்ன இது? ஏன் இப்படிச் செய்து விட்டீர்கள்?" என்று வினவினார். அவனுடன் நேரில் பேச முடியாத அவர் மனைவி வாயிற்படியிலிருந்த ஜெயத்தின் பக்கத்திலமர்ந்து, "ஏம்மா! என்னம்மா இது?" என்று கேட்டாள்.

சங்கர் பதில் ஏதும் சொல்லாமல் இடிந்த புளி மாதிரி உட்கார்ந்திருந்தான். ஜெயம் மட்டும் பதில் சொன்னாள்.

"அவர் இஷ்டந்தானேம்மா இதெல்லாம்," என்று.

"இந்தக் காலத்திலே இருக்கிற வேலையை விடுகிறது அத்தனை சரியில்லை அம்மா. ஆனால் சொல்கிறதுக்கு நான் யார்?" என்று வருத்தப்பட்டுக் கொண்டாள் சிவக்கொழுந்துவின் மனைவி. சிவக்கொழுந்து அத்தனை சுலபத்தில் விடவில்லை. என்னதான் புருஷனானாலும் குடும்பத்தை நடுத்தெருவில் நிறுத்த அதிகாரமில்லையென்று திடமாக நம்பியதால், "மாப்பிள்ளை! ராஜிநாமாவுக்குப் பிறகு என்ன செய்வதாக உத்தேசம்?" என்று வினவினார்.

சிறிது யோசித்துவிட்டு, "சென்னைக்குப் போக உத்தேசம்." என்றான் சங்கர்.

"போய்?" என்று வினவினார் சிவக்கொழுந்து.

"உலகில் எனக்கும் ஒரு ஸ்தானத்தை சம்பாதித்துக் கொள்ள உத்தேசம்."

"இப்பொழுது இருக்கிற ஸ்தானத்துக்கு என்ன குறைச்சல்?"

"என்ன குறைச்சலென்பதை நீங்கள் பட்டணத்திலும் பார்த்தீர்கள். விழாவன்று இங்கும் பார்த்தீர்கள்."

சிவக்கொழுந்து ஒரு விநாடி சிந்தனையிலாழ்ந்தார். தாமோதரம் கலையழகி இருவரும் பட்டணத்திலும், கலையழகி சிறுவயல் நடனத்தின் முடிவிலும் காட்டிய அவமரியாதை அவன் இதயத்தைப் பிய்த்துக் கொண்டிருப்பதை அவர் உணர்ந்தார். "சிவசிவா! கேவலம் சித்தாத்தாளும் அந்தப் பெரிய மனிதனும் சொன்னதற்காகவா இப்படி நீ உன்னை நாசமாக்கிக் கொள்ளப் பார்க்கிறாய்? சங்கர்! சித்தாத்தாளுக்கு உன்னை எடைபோட என்ன யோக்கியதை இருக்கிறது?" என்று கேட்டார்.

"பொதுவாழ்வில் அவளுக்கு ஸ்தானமிருக்கிறது!"

"உனக்கு மட்டும் இல்லையா? நீயும் ஒரு பண்டகசாலை டைரக்டர்."



"சிவக்கொழுந்து! என் அந்தஸ்து எனக்கு நன்றாகப் புரிந்துவிட்டது. பண்டகசாலை டைரக்டர் பிச்சைக்காரனுக்குச் சமானமென்பதைப் புரிந்து கொண்டு விட்டேன். ஆகையால் என் வாழ்வை நான் சீர்படுத்திக் கொள்ளத் தீர்மானித்துவிட்டேன். சென்னை சென்று என் அதிர்ஷ்டத்தைச் சோதிக்க முடிவு செய்து விட்டேன்."

"எப்படி?"

"என்னிடம் இருக்கும் கலையை உபயோகப்படுத்தி."

"அது அவ்வளவு சுலபமென்று நினைக்கிறாயா?"

"திட்டக்குடி சித்தாத்தாள் கலையழகியாகும் போது சிறுவயல் சங்கர் குறைந்த பட்சம் பெரிய வித்வானாகப் பெயரெடுக்க முடியாதா? மருதநாயகம் சொன்னபடி பிளேபாக் பாடினால் பாட்டுக்கு இரண்டாயிரம் வேண்டாம், இருநூறு கிடைக்காதா? சித்தாத்தாளிடம் உள்ளது என்னிடம் என்ன இல்லை?"

சிவக்கொழுந்து சங்கரைப் பரிதாபத்துடன் நோக்கினார். பிறகு கேட்டார், "சங்கர், சித்தாத்தாள் முன்னுக்கு வந்ததற்கு அவள் கலை காரணமென்று நினைக்கிறாயா?" என்று.

"வேறென்ன காரணம்?"

"அவள் ஒரு பெண் அப்பா!"

"இருக்கிற பெண்களெல்லாம் சித்தாத்தாள் நிலைக்கு வருகிறார்களா?"

"வராதிருப்பது இந்த நாட்டின் அதிர்ஷ்டமப்பா. எல்லோரும் அப்படியாகிவிட்டால் குடும்பம் ஏது, நடத்தையேது, இந்த நாடுதானேது?"

சிவக்கொழுந்து குறிப்பிடுவது எது என்பதை நன்றாகப் புரிந்து கொண்டான் சங்கர். அவனுக்கு மட்டும்

காலம் சரியாயிருந்தால், அவன் புத்தி அவர் சொல்வதை நன்றாக வாங்கிக் கொண்டிருக்கும்.

ஒரு மனிதனுடைய கர்மா எவ்வழி செல்கிறதோ, அவ்வழிதான் புத்தியும் இருக்கும் என்று வடமொழி வாக்கியம் ஒன்று உண்டு. ஆகவே சிவக்கொழுந்துவின் அறிவுரைகள் அவன் இதயத்தைச் சிறிதும் தொடவில்லை. எப்படியும் பட்டணம் சென்று தாமோதரத்தின் உதவிபெற்றுத் தன் வாழ்வையும் கலையையும் பரிமளிக்கச் செய்ய உறுதி பூண்டிருந்தான். ஆகவே இறுதியாகச் சொன்னான்: "சிவக்கொழுந்து! நீங்கள் என் தந்தைக்குச் சமம். இன்றுவரை நீங்கள் சொன்ன எதையும் நான் மீறியது கிடையாது. இந்த முறை என் வழியே விடுங்கள்," என்று.

அவனைத் திருப்புவது சாத்தியமில்லையென்பதை அறிந்த சிவக்கொழுந்து அதற்குமேல் ஏதும் பேசாமல் தனது இல்லம் திரும்பினார். நான்காவது நாள் அவன் ராஜிநாமாவை ஒப்புக்கொண்ட மருதநாயகம் அவனைப் பார்க்க இஷ்டப்படாமல் சிவக்கொழுந்துவிடமே அவன் சம்பளப் பாக்கி ஐம்பது ரூபாயையும் சேமிப்பு நிதித் தொகை ஐந்நூறு ரூபாயையும் கொடுத்தனுப்பினார். அந்த ஐந்நூற்றைம்பது ரூபாயில் உள்ளூரில் கொடுக்க வேண்டியிருந்த மளிகைப் பாக்கி; சில்லறைக் கடன்கள் இவற்றையெல்லாம் பட்டுவாடா செய்தது போக, பாக்கி முன்னூறு ரூபாயுடன் குடும்ப சகிதம் சென்னை கிளம்பினான் சங்கர்.

அதையும் சிவக்கொழுந்து சிறிது ஆட்சேபித்துப் பார்த்தார். "ஜெயமும் குழந்தையும் என்னுடனிருக்கட்டும் தம்பி. நீ சென்னை போய்க் காலை ஊன்றிக்கொண்டு கடிதம் போடு. நான் அழைத்து வருகிறேன்," என்று சொல்லிப் பார்த்தார். அதற்கும் மசியாத சங்கர் தன் குடும்பப் பாத்திரங்களில் அவசியமானதை ஒரு சிறு பெட்டியில் எடுத்துக்கொண்டு மற்ற பாத்திரங்களை



அவர் வீட்டில் கட்டிப் போட்டுவிட்டுக் கிளம்பினான். இத்தனைக்குப் பிறகும் சிவக்கொழுந்துவுக்கு அவனிடமிருந்த பாசம் போகாததால் சென்னையில் காலூன்றவும் அவரே ஏற்பாடு செய்தார். சங்கருக்குச் சென்னையில் யாரும் தெரியாதாகையால் தன்னுடைய தூர பந்து ஒருவரின் மகன் விலாசத்தை அவனிடம் கொடுத்து, "இவன் எனக்கு உறவுதான். மாணிக்கம் என்று பெயர். உன்னை ஸ்டேஷனிலேயே வந்து சந்திப்பான். அவனுடன் பத்து நாள் தங்கி, பிறகு வீடு பார்த்துக் கொண்டு போ. இந்த உறவு முறிந்து நீண்ட நாளாகிறது சங்கர், இருப்பினும் உனக்காக அவனுக்குக் கடிதம் எழுதினேன்," என்றார்.

சிவக்கொழுந்துவின் அன்பின் ஆழம் சங்கரின் பிடிவாத இதயத்தைக் கூட உருக்கியதால் அவன் கண்களில் நீருடன் பட்டணத்திற்கு ரயிலேறினான். ஜெயத்தையும் மதுவையும் இறுகத் தழுவிய சிவக்கொழுந்துவின் மனைவி விம்மி விம்மி அழுதாள். ஜெயம் கதறினாள். மதுவுக்கு விவரம் புரியாததால் திரும்பத் திரும்ப அவர்களை மும்முறை பார்த்து அதுவும் அழுதது. சிவக்கொழுந்து தமது துயரத்தைக் காட்டாதிருக்க முகத்தை வேறுபுறம் திருப்பிக் கொண்டார். ரயிலில் ஏறி சீட் பிடித்து உட்கார்ந்த பின்பும் ஜெயத்தின் கண்களில் நீர்த் துளிகள் திரண்டு நின்றன. அவற்றின் ஊடே மெள்ள மெள்ள மறையத் தொடங்கிய சிறுவயல் பிளாட்பாரத்தைப் பார்த்தாள் ஜெயம். பிளாட்பாரத்தில் சிவக்கொழுந்துவின் உருவமும் அவர் மனைவியின் உருவமும் அவள் கண்களின் நீரில் மழுங்கி மிதந்து ஆடின. எத்தனை நேரம் ஆடியதோ அவளுக்கே தெரியாது. அப்படியே உறங்கிப் போனாளோ, சோகம் போட்டாளோ தெரியாது. சொப்பனம் புத்தியில் சுழன்றது.

அவள் கண் விழித்தபோது எதிரே விரிந்த உலகம் வேறு. சிறுவயலின் அமைதியான பிளாட்பாரத்துக்கு நேர் விரோதமான எழும்பூர் பிளாட்பாரம் அவளை நோக்கி

வந்தது. ரயில் உள்ளே நுழையும்போதே பெரும் கூச்சல். போர்ட்டர்கள் சண்டை, வண்டியில் இரவு முழுவதும் பிரயாணம் செய்தவர்கள் எப்படியாவது சீக்கிரம் வீட்டுக்குப் போக வேண்டுமென்ற துரிதத்தில் வண்டி நிற்குமுன்பே சாமான்களைக் கதவுகளுக்கருகில் கொண்டு அடைக்க முயன்ற சலசலப்பு, ஸ்டேஷன் யார்டில் தனி என்ஜின்களின் புஸ்புஸ் என்ற மூச்சு, ஷண்டிங் வண்டிகளின் ஓசை, இப்படிப் பல கூச்சல்கள் அவன் காதைப் பிளந்தன.

## 22. யார் நீ?

எழும்பூர் பிளாட்பாரத்தில் ஆங்காங்கு கிளம்பிக் கொண்டிருந்த நானாவிதக் கூச்சல்களுடன் மாணிக்கத்தின் இன்முகம் சங்கரையும் அவன் குடும்பத்தையும் வரவேற்றது. மாணிக்கமும் சங்கரும் ஒருவரையொருவர் என்றும் பார்த்திராவிட்டாலும், சிவக்கொழுந்து எழுதியிருந்த அடையாளங்களிலிருந்து ஒருவரையொருவர் அடையாளம் கண்டு கொள்வது அவர்கள் இருவருக்குமே சுலபமாயிருந்தது. மாணிக்கம் மதுவின் கன்னத்தில் ஒரு முத்தம் கொடுத்துவிட்டு, போர்ட்டர் ஒருவனை அமர்த்திச் சாமான்களைத் தூக்கச்சொல்லி, ஒரு டாக்ஸியை அமர்த்திச் சங்கரின் குடும்பத்தைத் தியாகராய நகரிலுள்ள தனது இல்லத்துக்கு அழைத்துச் சென்றான். மாணிக்கத்தின் மனைவி மரகதம் ஜெயத்தை முகமலர்ச்சியுடன் வரவேற்று உள்ளே அழைத்துச் சென்றாள்.

அந்த வீட்டிற்குள் நுழைந்த உடனேயே மாணிக்கத்தின் அன்பின் ஆழத்தைச் சங்கர் புரிந்து கொண்டான். மாணிக்கம் தியாகராயநகரின் பெரிய வீடு ஒன்றில் மூன்று குடித்தனங்களுடன் நான்காவதாகக் குடித்தனம் இருந்தான். அதே வீட்டில் மாடியிலிருந்த வீட்டுக்காரர் மிகச் சாமர்த்தியசாலியாயிருந்தபடியால் கீழேயிருந்த



சிறு பகுதியில் குறுக்கும் நெடுக்குமாகப் பல மரத்தடுப்புகளை ஏற்படுத்தி அவற்றுக்கு அறைகள் என்று நாமகரணம் செய்திருந்தாலும் அதற்காக வாடகையைக் குறைப்பது குற்றமெனக் கருதி, இரண்டு அறைகளுக்கு அறுபது ரூபாய் என்று மலிவு வாடகைக்கு விட்டிருந்தார். அந்த விகிதப்படி மூன்று அறைகளை வைத்துக்கொண்டு தொண்ணூறு ரூபாயைக் கொடுத்து வந்த மாணிக்கம், தனது படுக்கை அறையிலேயே சங்கரின் சாமான்களை வைத்தான். இத்தனை நெருக்கடியில் மாணிக்கம் தன்னை இருக்க அனுமதித்தது பெரும் தியாகம் என்பதைச் சங்கர் மட்டுமல்ல, ஜெயமும் புரிந்து கொண்டாள். தவிர சங்கரின் மனைவி தனியாகச் சமைக்க முயன்றதையும் மாணிக்கமோ மரகதமோ அனுமதிக்கவில்லை. "நான் உங்களுக்குச் சோறுகூடப் போடவில்லையென்றால், இத்தனை நாள் வீட்டுக்கு வராத எங்கள் மாமா இங்கே வந்து, என் விழிகளைப் பிடுங்கி விடுவார்," என்று மாணிக்கம் சிவக்கொழுந்துவிடம் தனக்கிருந்த அச்சத்தைக் காட்டினான்.

உண்மையில் சங்கர் குடும்பத்தையும் சேர்த்துச் சமாளிக்கும் நிலையில் மாணிக்கம் இல்லை. அவன் சென்னை கணக்காயர் இலாகாவில் ஒரு குமாஸ்தா. ஆபிஸில் பிராவிடண்டு நிதி, கூட்டுறவு சங்கக் கடன், இதர கைமாற்று, இத்தனை பிடிப்பும் போகப் பாக்கி வரும் சொற்பத் தொகையைக் கொண்டு காலட்சேபம் செய்து வந்தான். கடன் வாங்க ஆரம்பித்து விடுபவனுக்குத் துரிதமாக மூளை வேலை செய்வது வழக்கமாகையால், கூட்டுறவு சங்கத்தில் சம்பளம் வாங்கிய மறுநாளே அவசரக் கடன் போட்டும், அக்கம்பக்கத்தில் கைமாற்றுக்குக் கிளம்பியும் வாழ்க்கையை வெகு சாமர்த்தியமாக 'அட்ஜஸ்ட்' செய்து வந்தான். இப்படியே வழக்கமாகி விட்டபடியால், சங்கரின் குடும்பம் வந்ததை அவன் ஒரு பொருட்டாக மதிக்கவில்லை. ஆனால் மாணிக்கம்

ஆபீஸ் போய் விட்டவுடன் மளிகைக்காரன், வெண்ணெய்க்காரன், வாசலில் வரும் கறிகாய் வண்டிக்காரன் இவர்களிடம் பிடுங்கல்படும் மரகதத்துக்கு, சங்கர் இனி மேல்தான் வேலை தேடப்போகிறான் என்பது பெரும் அதிர்ச்சியை அளித்தது. அதுவும் பாட்டை நம்பி அவன் பட்டணம் வந்திருக்கிறானென்பது பெரும் பயத்தைக் கொடுத்தது, "பத்துப் பதினைந்து நாள் சங்கரை உன்னிடம் வைத்துக்கொள்." என்று சிவக்கொழுந்து எழுதியிருந்ததை நினைத்துப் பார்த்த மரகதம், "பத்துப் பதினைந்து நாளில் என்ன நடந்து விடுமோ ?" என்று ஏங்கினாள்.

அடுத்த இரண்டு நாட்களுக்குள் அவள் பயம் உச்ச நிலையை அடைந்தது. கிராமத்தில் நன்றாகச் சாப்பிட்ட மதுவுக்கு பட்டணத்து ரேஷன் அரிசி பிடிக்காததால், இரவில் பால் கொஞ்சம் அதிகமாகத் தேவையாயிருந்தது. அவர்கள் வீட்டு வாடிக்கைப் பால்காரன் பால் என்ற பெயரில் கொடுத்துவந்த வெள்ளைநீரை மது முதலில் அருந்த மறுத்தாலும், மூன்றாம் நாள் சற்று அதிகமாகவே குடிக்க ஆரம்பித்தது. ரேஷனில் பெரியவர்களைக் குழந்தைகளாக பாவித்து அரசினர் அளித்து வந்த அரிசியும் போதாமலிருக்கவே, வாசலில் வந்த கறுப்பு மார்க்கெட் அரிசியையும் மரகதம் வாங்கத் துவங்கினாள். இத்தனைக்கும் மாணிக்கம் மட்டும் மசியவில்லை. காலையில் ஆபீஸுக்குக் கிளம்பியவன், இரவு பத்து மணிக்கு வர ஆரம்பித்தான்.

முதல் நான்கு நாட்களுக்குள் தங்கள் வரவால் அந்தக் குடும்பம் திண்டாடின திண்டாட்டத்தைக் கவனித்த ஜெயலக்ஷ்மி, பெட்டியிலிருந்த முந்நூறு ரூபாயில் ஒரு நூறு ரூபாயை எடுத்து மரகதத்திடம் கொடுத்து, 'தங்கச்சி! இதை வைத்துக்கொள். வித்தியாசமாக நினைக்காதே, வேண்டியதை வாங்கிக் கொள்," என்றாள்.



முதலில் மரகதம் வாங்க மறுத்தாள். பிறகு, "இதைக் கடனாகத்தான் வைத்துக் கொள்வேன். நீங்கள் திரும்ப வாங்கிக் கொள்வதானால் கொடுங்கள்," என்றாள். ஜெயம் "அப்படியே செய் தங்கச்சி," என்று கூறவே அந்த நூறு ரூபாயை வாங்கிக்கொண்டாள் மரகதம்.

இந்த நிலையில், அந்த நான்கு நாளும் சங்கரும் பெரும் சிரமப்பட்டுத் தன் வாழ்க்கைக்குப் புது வழி தேடினான். தாமோதரத்தின் வீட்டை அவன் முன்பே அறிந்திருந்ததால, அவரைத் தேடி நான்கு நாளும் சென்றான். சங்கரின் அதிர்ஷ்டம் அவர் எங்கோ பிரசங்கத்துக்கு வெளியூர் சென்றிருந்தார். ஐந்தாம் நாள்தான் வந்தார். அன்றும் அவரைப் பார்க்க இயலவில்லை சங்கரால். நான்கு நாள் ஊரில் இல்லாததால் ராவ்சாகிப் மிகவும் 'பிஸி' என்று 'பி. ஏ.' கூறிவிட்டார். அப்படியும் விடாமல் சங்கர் தினசரி அவர் வீட்டுக்குச் சென்றான். அடுத்த மூன்று நாட்கள் அவன் தொல்லையைப் பொறுத்த 'பி. ஏ.' நான்காவது நாள், "ஏன் ஐயா பிராணனை வாங்கறே? உனக்கு என்ன வேணும்? சொல்லித் தொலை" என்று எரிந்து விழுந்தார்.

"சங்கீத விஷயமாய் வந்தேன்," என்றான் சங்கர்.

'சங்கீதமா?' என்ற பி.ஏ. சங்கரை உற்றுப் பார்த்தார். பிறகு "அடடே! மறந்துவிட்டேனே! ஓ! நீதானா அது? சிறுவயலில்..." என்ற பி.ஏ யைக் குதூகலத்துடனும் கவலையுடனும் குறுக்கிட்ட சங்கர், "நானே தான். எனக்கு ராவ்சாகிப் அவர்கள் உதவுவதாகச் சொன்னதை நீங்களே கேட்டீர்களல்லவா?" என்றான்.

பி.ஏ வாய்விட்டு நகைத்தார். "ஏம்பா! ராவ்சாகிப் கூட்டத்திலே ஏதோ சொன்னார். அதுக்காக இங்கே வந்து அவர் பிராணனை வாங்குகிறதா? உனக்கென்ன அவர் ஏஜண்டா? சரி, சரி, இனிமேல் இங்கே வராதே.

ஊரைப் பார்க்கப் போய்ச் சேர்," என்று கூறிவிட்டு உள்ளே சென்றார்.

சங்கருக்குத் தலையில் பெரிய இடி விழுந்த மாதிரி இருந்தது. "என் கலையை ராப்சாஹிப் எத்தனை ஸ்லாகித்தார்! என் கலை குடத்து விளக்காக இருக்கக்கூடாது, அது நாட்டின் சொத்தாக வேண்டும் என்று சொன்னாரே அது பொய்யா? சே! சே! இருக்காது. பெரிய மனிதன் வீணாகவா பேசுவார்? அதுவும் பட்டணம் வந்தால் தானே உதவுவதாக அத்தனை ஆயிரம் பொது மக்களுக்கு முன்னால் சொன்னாரே? அதை இப்பொழுது மாற்று வாரா? மாட்டார் மாட்டார்,' என்று மெள்ளத் தனக்குத் தைரியம் சொல்லிக் கொண்டான். இத்தனை தைரியத் திலும், பி.ஏ.யின் பேச்சு அவனை ஓர் உலுக்கு உலுக்கி விட்டது. அன்றுவரை ஏற்படாத ஒரு பயம் இதயத்தைச் சூழ்ந்து கொண்டது. அந்தப் புண்பட்ட இதயத்துடன் அன்று எங்கெங்கோ அலைந்து விட்டு இரவு பத்து மணிக்கு வீடுவந்து சேர்ந்தான் சங்கர். சாப்பிடக் கூட மனமில்லாத தால், பட்டினியாகவே படுத்துக் கொண்டான்.

அவன் அன்று சென்னைக்கு வந்த பத்தாவது நாள். தினசரி அலைந்ததில் கையிலிருந்த பணம் அநேகமாகக் கரைந்துவிட்டது. ஜெயம் மரகதத்திடம் கொடுத்த ரூபாய் நூறும் அவன் செலவழித்ததும் போக, கையில் நூற்றுச் சொச்சமே பாக்கியிருந்தது. இன்னும் பத்து நாளில் அதுவும் பைசலாகிவிடும் என்று தெரிந்த ஜெயமும், அன்று பட்டினியாகவே படுத்துக் கொண்டாள். இதய வேதனை யால் படுத்திருந்த அவ்விருவருக்கும் மாணிக்கத்தின் படுக் கையறைக்கும் இடையேயிருந்தது வீட்டுச் சொந்தக்காரர் அமைத்திருந்த பிளைவுட் பார்ட்டிஷன். ஆகையால் அடுத்த அறையிலிருந்த மாணிக்கம் தம்பதிகள் பேசுவதும் அவ்விருவர் காதிலும் தெள்ளத் தெளிவாக விழுந்தது.

மரகதம் மாணிக்கத்திடம் மெள்ளக் கேட்டாள்: "என்னாங்க! பத்து நாளாச்சுங்களே?" என்று:



"எதற்கு?" என்றான் மாணிக்கம்.

"உங்க அண்ணனும் அண்ணியும் வந்து."

"அதனாலென்ன?"

"அதனாலென்னவா? பட்டணத்திலே இந்த ரேஷன் காலத்திலே நாம பிழைக்கிறதே கஷ்டமாயிருக்கு. இன்னொரு குடும்பத்தை வச்சு சமாளிக்க முடியுமா?"

"நீ என்ன நிரந்தரமாச் சமாளிக்கப் போறியா? இன்னும் ஐந்து நாளானா அவங்களே போயிடறாங்க."

"எனக்குத் தோணலைங்க."

"என்ன தோணலை உனக்கு?"

"அவங்க போவாங்கன்னு."

"ஏன்?"

"உங்க அண்ணன் பத்து நாளா ஊரைச் சுத்தறாரு வேலை தேடி."

"என்ன வேலையாம்?"

"நீங்க ஒண்ணுமே விசாரிக்கவில்லையா?"

"பதினைந்து நாள் தங்கப் போறதா மாமா எழுதி யிருந்தாரு. மற்றதெல்லாம் கேக்கறது நாகரிகமில்லேன்னு நினைச்சேன்."

"நான் விசாரிச்சுட்டேன்."

"ஏன்?"

"நான் நாகரிகம் பார்த்து முடியலே."

"ஏனாம்?"

"மளிகைக்காரன், கிரஸினாயில் வண்டிக்காரன், பால்காரன் யாரும் எங்கிட்ட நாகரிகம் காட்டறதில்லை."

சிறிது நேரம் மௌனம் சாதித்தான் மாணிக்கம். "அண்ணன் என்ன வேலை தேடறாராம்?" என்று வினவினான் கடைசியில்.

"பாட்டுப் பாடப் போகிறாராம்."

"பாட்டா!"

"ஆமாம். பாட்டுத்தான்."

மாணிக்கமும் அதிர்ச்சியடைந்தான். "என்ன! பட்டணத்திலே இருக்கிற பெரிய பெரிய வித்வான்களெல்லாம் லாட்டரி அடிக்கறச்சே, இவர் எப்ப சான்ஸ் வாங்கறது? எப்போ சம்பாதிக்கிறது?" என்று அதிர்ச்சியுடன் சொன்ன மாணிக்கத்தை இடைமறித்த மரகதம், எப்போ இவங்க இங்கேயிருந்து கிளம்பறது?'' என்று முடித்தாள். அத்துடன் விடவில்லை, அவள். "கிளம்பறதே துங்க! இந்தக் காலத்திலே ஓட்டுகிற ஆள் விடறதில்லை. நாம்பதான் ஜாடை மாடையாகச் சொல்லணும்" என்றும் ஊதிக் கினாள்.

இந்த சம்பாஷணை பிளைவுட் பார்ட்டிஷனுக்கு இப்புறம் படுத்துக்கிடந்த சங்கர் ஜெயம் இருவர் காதிலும் தெளிவாக விழுந்தது. ஒவ்வொரு சொல்லும் சங்கரின் இதயப் புண்ணில் தீயில் காய்ச்சின வேல் நுனியெனப் பாயவே, அவன் கண்களில் நீர் வழிந்தோடியது. மௌன விம்மவும் செய்தான் அவன். அன்றுவரை அவன் அழுது பார்க்காத ஜெயத்தின் இதயவேதனை சொல்லத் தரமில்லா திருந்தும் அவள் தன்னைப் பெரிதும் அடக்கிக் கொண்டாள். எழுந்து உட்கார்ந்து, அவன் கண்ணீரைத் தன் முந்தாணையால் துடைத்தாள்.

"ஜெயம், நாளை இதற்கொரு முடிவு காண்கிறேன். நாளை இவ்விடம்விட்டுப் புறப்பட நீ தயாராயிரு," என்று துக்கம் நெஞ்சடைக்கக் கூறினான் சங்கர். அந்தச் சமயத்தில் ராவ்சாகிபை எப்படியும் மறுநாள் பலவந்தமாகப்



பார்த்து விடுவதென்று, முடிவு செய்து கொண்டான். அந்த முடிவின் விளைவாக மறுநாட்காலை உறுதிபெற்ற மனத்துடன் எழுந்த சங்கர், காப்பி கூட அருந்தாமல் வெளியே கிளம்பினான். அவன் அத்தனை காலையில் கிளம்புவதைப்பார்த்த மாணிக்கம்,

"என்ன அண்ணே? இத்தனை காலையிலே கிளம்பிட்டீங்க?" என்று கேட்டான்.

"இன்று எப்படியும் ராவ்சாகிபைப் பார்த்துவிடப் போகிறேன்," என்றான் சங்கர்.

''எந்த ராவ்சாகிபை?"

"தாமோதரத்தை!"

"அவரையா?"

"ஆம் அவர்தான் என்னை இங்கு வரச்சொன்னது," என்று கூறி, சற்று நிதானித்துவிட்டு, "தம்பி! இன்று மாலை நான் இங்கிருந்து கிளம்பிவிடுகிறேன்," என்றான்.

மாணிக்கத்துக்குத் தூக்கிவாரிப் போட்டது. "ஏன் அண்ணே? உங்களுக்கு இங்கே ஏதாவது...?" என்று வினவினான், உள்ளூர சந்தேகத்துடன்.

"எந்தக் கஷ்டமுமில்லை தம்பி! இருந்தாலும் தங்கச்சியையும் எத்தனை நாள் கஷ்டப்படுத்தறது?" என்று கூறிய சங்கர், விடு விடு என்று படிகளில் இறங்கி நடந்தான்.

அன்றும் தாமோதரத்தைப் பார்க்க இடங்கொடுக்கவில்லை அவரது பி.ஏ. சங்கர் அவனை முறைத்து நோக்கி "இன்று எப்படியும் பார்த்துத்தான் தீருவேன் என்று சொல்" என்று சொல்லிவிட்டுப் பங்களாவை விட்டு வெளியே வந்தான். அங்கிருந்த சூர்க்காவிடம் தாமோதரம் டைரக்டராயிருக்கும் பாங்கியின் இருப்பிடத்தை அறிந்து கொண்டான்.

பாங்கியின் பெரிய கட்டிடத்தின் படிகளுக்கருகில் நின்ற சங்கர், அடுத்த தாழ்வாரத்தில் 'ராவ்சாகிப் தாமோதரம், டைரக்டர்' என்ற அர்கம் பலகையையும் அதன் கீழிருந்த இரண்டு பாதிக் கதவுகளையும் நோக்கினான்.

ராவ்சாகிப் அறையிலிருந்த கடிகாரம் மணி பதினொன்று அடித்தது. அவர் காரும் சர்ரென்று போர்டிகோவில் வந்து நின்றது. டவாலியணிந்த சேவகன் காரைத் திறக்க, ராவ்சாகிப் தாமோதரம் படிகளில் ஏறி வந்தார். கடைசிப் படியை அவர் அடைந்ததும், குறுக்கே அவரை மறித்த சங்கர் "ஐயா, வணக்கம்" என்று கரங் குவித்தான்.

ராவ்சாகிபின் முகத்தில் சீற்றத்தின் தீப்பொறி பறந்தது. "யார் நீ?" என்று மிகக் கடுமையாகக் கேட்டார்.

# 23. பெரிய மனிதன் பேச்சு

முகத்தில் ஓங்கி ராவ்சாகிப் அறைந்திருந்தால் கூட அத்தனை அதிர்ச்சியை அடைந்திருக்க மாட்டான் சங்கர். ராவ்சாகிபின் "யார் நீ?" என்ற அந்தச் சிறு கேள்வி அவன் உள்ளத்தை அப்படியே உறைய வைத்து விட்டதால், பெரும் பிரமை பிடித்து ஒரு விநாடி நின்றான். பிறகு உதடுகளை அசைத்து, "என்ன, அதற்குள்ளாகவா மறந்து விட்டீர்கள்?" என்று குழறினான் மெள்ள.

இந்தக் கேள்வியும் குழறலும் ராவ்சாகிபின் சீற்றத்தை அதிகமாக்கவே, "யாரப்பா, சொல்லித் தொலை, என்ன வேண்டும் உனக்கு?" என்று மீண்டும் உஷ்ணத்துடன் வினவினார்.

"நான்தான் ஸார் சங்கர். சிறுவயல், நீங்கள்கூட..." என்று தட்டுத் தடுமாறிச் சொன்னான் சங்கர்.



ராவ்சாகிபின் புருவங்கள் சற்று மேலே ஏறின, சிந்தனைக்கு அறிகுறியாக. பிறகு, "ஓகோ, நீதானா? அந்தப் பஞ்சாயத்துக் கிளார்க்கா? எங்கே வந்தே? சுருக்கமாகச் சொல். எனக்கு நேரமில்லை," என்றார் தாமோதரம் படபடவென்று.

அவர் வார்த்தைகளின் தோரணையும் அவற்றில் கண்ட படபடப்பும் சங்கரின் முகத்தில் வியர்வைத் துளிகளைச் சிருஷ்டித்தனவென்றாலும் அவன் இதயத்தில் ரத்தத் துளிகள் தோன்றிக் கொண்டிருந்தன. "சுருக்கமாகச் சொல்," என்ற ராவ்சாகிபின் சொற்கள் தன் வாழ்க்கையைச் சுருக்கி விடும் போல் தோன்றியதால், மீண்டும் "ஐயா நீங்கள் விழாவன்று என் இசையைப் புகழவில்லையா? அது குடத்து விளக்காக இருக்கக் கூடாது என்று கூறவில்லையா?" என்றான்.

ராவ்சாகிபின் முகத்தில் எரிச்சல் அதிகமாகத் தெரிந்தது. "ஆம், புகழ்ந்தேன், சொன்னேன்," என்றார்.

"அது நாட்டுச் சொத்தாக வேண்டும், கிராமத்தில் மட்கி மடியக்கூடாது என்று சொல்லவில்லையா?" என்று மறுபடியும் மன்றாடினான்.

ராவ்சாகிபின் முகத்தில் குழப்பம் தெரிந்தது. "ஆமாம், சொன்னேன், அதற்கென்ன?" என்று கேட்ட அவர் குரலிலும் குழப்பம் பிரதிபலித்தது.

"அதை நாட்டுக்குப் பயன்படுத்த வந்து விட்டேன். நீங்கள் உதவ வேண்டும். உதவுவதாக அன்று அத்தனை ஆயிரம் மக்கள் முன்னிலையில் கூறவில்லையா தாங்கள்?" என்றான் சங்கர் கரங்குவித்து.

ராவ்சாகிப் மெள்ளப் புன்முறுவல் கொண்டார். "ஆகட்டும் பார்க்கலாம். பிறகு வா," என்று சொல்லி விட்டு, உள்ளே செல்ல முயன்றார்.

மீண்டும் அவர் குறுக்கே நின்ற சங்கர், "ஐயா! தாங்கள் சீக்கிரம் ஏதாவது செய்ய வேண்டும், என் நிலைமை மோசமாயிருக்கிறது," என்றான்.

ராவ்சாகிப் சற்று நிதானித்தார். "என்ன அப்படி அவசரம்?" என்று கேட்டார்.

"வேலையை ராஜிநாமாச் செய்து விட்டேன். சென்னைக்கே வந்து விட்டேன்," என்றான் சங்கர். அவன் குரலில் திகில் மண்டிக் கிடந்தது.

ராவ்சாகிப் நன்றாக நிமிர்ந்து நின்று கொண்டார். "வேலையை விட்டு விட்டாயா? நான் பிரசங்கத்தில் சொன்னதைக் கேட்டா? மூளையிருக்கிறதா உனக்கு?" என்று வினவினார் கடுங்கோபத்துடன்.

"ஸார்! ஸார்! நீங்கள் தானே சொன்னீர்கள்..." என்று துவங்கிய சங்கரின் பேச்சை ராவ்சாகிபின் ஒரே பார்வை நிறுத்தி விட்டது. "அட ராமா! இந்தக் காலத்திலே யாரைப் பத்தியும் ஒரு நல்ல வார்த்தை சொல்லக் கூடாது போலிருக்கிறது! மேடையில் நான்கு பேர் எதிரில் எப்படியப்பா பேசுவார்கள்? ஏதோ பாவம் கிராமத்திலிருக்கிறவர்களுக்கும் உனக்கும் திருப்தியாயிருக்கட்டுமென்று பாராட்டு வார்த்தை நாலு சொன்னால், நான் ஏதோ பத்திரம் எழுதிக் கொடுத்த மாதிரி வேலையை விட்டானாம். இங்கே குறுக்கே நின்று மடியைப் பிடிக்கிறானாம். உன்னைப் போல ஒரு இடியட்டுக்குச் சிபாரிசு செய்தாலும் தவறு," என்று கூறிவிட்டு, "நிற்காதே இங்கே. கெட் அவுட்," என்று சீறி விட்டு, விடுவிடு என்று உள்ளே நடந்தார் தாமோதரம்.

சங்கருக்குத் தலை சுழல்வது போலிருந்தது. அவன் கண்களில் நீர் திரண்டது. "உன்னை எத்தனையோ மரியாதையாக வைத்திருந்த கிராமத்தை உதறி இந்தப் பட்டணத்துப் பெரிய மனுஷன் வார்த்தையை நம்பி வந்து



விட்டாயே, முட்டாளே," என்று இதயம் சுருக்சுருக்கென்று குத்திக் குத்திக் காட்டியது. உணர்ச்சிகள் அவனைப் பல திசைகளில் தூக்கியெறிய, கால் நடக்க மறுக்க, அந்தப் பாங்கியின் படிகளில் மலைத்து நீண்ட நேரம் நின்று விட்டான் சங்கர்.

சங்கர் எதையும் கவனிக்காமல் ஏதும் புரியாமல் எங்கு போகிறோம் என்பதை அறியாமல் நடந்து சென்று கொண்டிருந்தான். பன்னிரண்டு மணி நடுப்பகல் வெயில் கூட அவன் காலைச் சுடவில்லை. மனச்சூடு அத்தனை அதிகமாயிருந்தது அவனுக்கு. எங்கோ ஒரு தோட்டம் வந்தது. பக்கத்தில் ஒரு ஆறும் ஓடிக் கொண்டிருந்தது. பசி தெரியவில்லையானாலும் கவலையால் களைப்பு அதிகமாயிருந்ததால் ஒரு மரத்தடியில் படுத்துவிட்ட சங்கர் கண்களை மூடினான். அவன் கண்களை மூடியதற்குக் காரணம் பசியா, களைப்பா, கவலையா, ஏமாற்றத்தால் ஏற்பட்ட அதிர்ச்சியா? ஏதும் அவனுக்கே விளங்கவில்லை. கண்கள் மூடியதும் விரிந்த உள்ளக் கண்களும் காரணத்தை விளக்கவில்லை. ஏதேதோ காட்சிகள் அவன் உள்ளத்தில் வலம் வந்திருக்க வேண்டும். அப்படி வலம் வந்ததை அவன் முகத்தில் அவ்வப்பொழுது மாறுபட்ட உணர்ச்சிகள் நிரூபித்தன. அவன் புத்தியிலே சிறுவயலின் ஆனந்த வாழ்க்கை விரிந்தது. பஞ்சாயத்து ஆபீஸ் விரிந்து பண்டகசாலை ஆண்டு விழாப் பந்தலும் விரிந்தது. அதோ நம் மக்கள் கூக்குரல்! தாமோதரம் என்ன அழகாகப் பேசுகிறார்! கலை குடத்து விளக்காக இருக்கக் கூடாது! அதோ மக்களின் ஆரவாரிப்பு! கலையழகி தோன்றி விட்டாளே மேடை மீது. காலைத் தட்டுகிறான்! காலை என் தலை மீது தட்டுகிறான், எடு எடு காலை!

இதையெல்லாம் அவன் வாய்விட்டுச் சொல்லவில்லை. உள்ளூரச் சொல்லிக் கொண்டிருந்ததை முகம் காட்டியது. அடிக்கடி புரண்டான். முனகினான். இப்படி எத்தனை

நாழிகை வேதனைப்பட்டிருப்பானோ தெரியாது. அவன் மெள்ள எழுந்து மாலை விளக்கு வைக்கும் வரையில் தான் உறங்கிவிட்டதை நினைத்து வாரிச் சுருட்டிக் கொண்டு ஆங்காங்கு இருந்த திண்ணைகளிலும் மரத்தின் அடிகளி லும் மக்கள் கும்பல் கும்பலாக உட்கார்ந்திருப்பதைக் கண்டான். தூரத்திலிருந்த ஒலிபெருக்கியிலிருந்து சங்கீதம் வந்து கொண்டிருந்தது.

அந்தச் சமயத்தில் அந்தத் தோட்டத்துக்குள் நுழைந்த ஒரு மனிதர் அதே மரத்தடிக்கு வந்து அவனிடமிருந்து சற்றுத் தள்ளி உட்கார்ந்தார். பிறகு ரேடியோவிலிருந்து வந்த சங்கீதத்தில் லயித்து விட்டார். ரேடியோ சங்கீதக் காரர் பைரவி பாடி, ஸ்வரங்களைத் தாரையாக உதிர்த் தார். பிறகு தோடி பாடினார். கிருதியை ஆரம்பித்தார். வந்த மனிதன் ஒவ்வொரு சங்கதியையும் உணர்ச்சியுடன் வாங்கினார், சில வேளைகளில் 'ஆகா' வென்று கூவினார். திடீரென்று அந்தச் சங்கீதத்தைத் தனியாக அனுபவிக்கக் கூடாது என்ற காரணத்தாலோ என்னவோ, "என்னாங்க, எப்படி தோடி ?" என்று சங்கரையும் வினவினார்.

சங்கர் ரேடியோவை வெறித்துப் பார்த்துக் கொண் டிருந்தானே தவிரப் பதில் ஏதும் சொல்லவில்லை. "என்னாங்க கேட்கிறேனே' என்ற இரண்டாம் முறை கேள்வியைத் திருப்பினார் அந்த மனிதர்.

"உம்..." திடுக்கிட்டவன் போல் அவரை நோக்கித் திரும்பினான் சங்கர்.

"தோடி எப்படின்னேன்?" என்றார் அந்த மனிதர்.

"உம், தோடியா ?"

"ஆமாம் ! பின்னே பாடறது என்ன ?"

"ஆமாம்," தோடிதான் என்று கூறிவிட்டு முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டான் சங்கர்.



"ஏங்க, உங்களுக்குச் சங்கீதம் பிடிக்காதா ?" என்று வினவினார் அந்த மனிதர்.

சங்கர் அவரை உற்று நோக்கினான். "அதை வெறுக் கிறேன்," என்று ஆத்திரத்துடன் சொன்னான்.

"என்னாங்க இப்படிச் சொல்றீங்க ? சங்கீதத்தை அனு பவிக்காதவன் கொலை செய்யத்தான் லாயக்குன்னு ஷேக்ஸ்பியர் சொல்லியிருக்கிறதாச் சொல்றாங்களே" என்று அவர் தமது அரைகுறை இலக்கிய அறிவையும் காட்டினார்.

"சங்கீதமே ஆளைக்கொலை செய்யுமே," என்றான் சங்கர்.

வந்த மனிதர் சங்கரை உற்றுப் பார்த்தார். அவன் முகத்தில் கவலை பாய்ந்து கிடப்பதைக் கவனித்தார். "ஐயா ! உங்களைப் பார்த்தா நீங்க ரொம்பக் கஷ்டப்பட் டிருக்கிறதாகத் தெரியுது. அதனாலே ஏதோ வெறுப்பிலே பேசுறீங்க. உங்களுக்கு என்ன கஷ்டங்க ? சொல்லலாம்னா சொல்லுங்க. ஏழைங்க ஒருத்தர் கஷ்டத்தை இன்னொருத் தர் கிட்டச் சொல்லித்தான் தீர்த்துக்கணும்," என்றார்.

அந்த மனிதரின் குரலில் அளவிட முடியாத அன்பு தொனித்தது. அந்த அன்பு ஆட்கொண்டதாலும் தன் துயரப் பளுவை மனத்திலிருந்து இறக்கிக் கொள்ளவும் தன் கதையை விரிவாக மெள்ள மெள்ளச் சொன்னான் சங்கர்.

அதை மிக நிதானமாகக் கேட்டுக் கொண்ட அந்த மனிதர், "ஐயா ! பெரிய மனுஷன் பொதுக் கூட்டத்திலே பேசற பேச்சை நம்பலாமா நீங்க ? பெரிய மனிதர்கள் அதுவும் அரசியல் வாதிகள், பொதுக்கூட்டத்தில் பேசற தெல்லாம் நிறைவேறுவதாயிருந்தா இந்த நாடு இத்தனை நாள் சொர்க்கமாயிருக்கும். அதெல்லாம் நடக்கிற தில்லீங்க. பெரிய மனுஷனெல்லாம் தங்கள் பேச்சுத்

திறமையைக் காட்டறதுக்காகவும், அந்தச் சமயத்தில் அப்னார்ஸ் வாங்கவும் பேசுவாங்க. அதைப் போய் நிசம்னு நினைக்கலாமா ?" என்றார்.

பிறகு சில நிமிஷங்கள் சிந்தனையில் இறங்கி விட்டுக் கேட்டார். "அடுத்தபடி என்ன செய்யறதா உத்தேசம் ?" என்று.

"அதுதான் தெரியவில்லை."

"ஏன், திரும்ப ஊருக்குப் போனா ?"

"உயிர் போனாலும் அங்கே திரும்பப் போறதில்லை. அதைவிட மானக்கேடு ஏதுமில்லை."

"வேறு வழி ?"

"ஏன் இல்லை, ரயில், கடல், அநாதைகளுக்கு எத்தனைப் புகலிடங்கள்."

அதைக் கேட்ட அந்த மனிதர், "அதெல்லாம் முட்டாள் செய்யும் வேலை," என்று கடுமையாகவும் அனுதாபத்துடனும் சொன்னார். பிறகு ஆழ்ந்த யோசனையில் இரண்டாம் முறையும் இறங்கினார் "சரி, கிளம்புங்கள்," என்றார்.

"எங்கே ?"

"நீங்க இருக்கிற வீட்டுக்கு ?"

"எதுக்கு ?"

"உங்க மனைவியையும் குழந்தையையும் அழைச்சிட்டுப் போக."

"எங்கே போக ?"

"என் வீட்டுக்கு."

"உங்களை எனக்குத் தெரியாதே."

"தெரிந்து கொள்ளலாம் வாங்க," என்று அந்த மனிதர் எழுந்திருந்தார்.

# 24. அன்புப் பழம்

அந்த மனிதர் கட்டையாகவும் குட்டையாகவும் கறுத்தும் பெரிய மீசையுடனும் சற்றுப் பயங்கரமாகவே காணப்பட்டாலும், அவருடைய கண்களில் மட்டும் கருணை பிரவாகித்துக் கொண்டிருந்தது. அவரை ஏறிட்டுப் பார்த்த சங்கர் "ஐயா உங்களை எனக்கு முன்பின் தெரியாது. உங்கள் பெயரைக் கூட' நான் அறிய மாட்டேன்..." என்று இழுத்தான்.

அவரும் அவனைக் கூர்ந்து நோக்கினார். "உண்மை தான். உலகத்தில் ஏமாற்றுகிற ஆட்கள் நிரம்பிக் கிடக்கும் போது திடீரென்று ஒருவரை நம்புவது கஷ்டம்தான், இருந்தாலும் என்னை நம்புவதில் உங்களுக்கு ஒன்றும் நஷ்டமில்லை," என்றார் புன்முறுவலுடன்.

"ஏன் ?" என்று குழப்பத்துடன் கேட்டான் சங்கர்.

"சற்று முன்பு நீங்கள், ரயில், கடல் இவற்றில் பிராணனை விடத் தயாராயிருந்தீர்கள்," என்று சொல்லிச் சங்கரை நோக்கினார் அந்த மனிதர்.

"ஆம்."

"அவற்றைவிட என்னால் அதிக ஆபத்தில்லை. நம்பிக்கையிருந்தால் வாருங்கள்."

சங்கர் நீர்க்காலோசனையில் இறங்கினான். நம்புவதைத் தவிர வேறு வழியில்லையென்பதை நன்றாகப் புரிந்துகொண்டபடியால், மேற்கொண்டு ஏதும் பேசாமல் முன்னே நடந்தான். அவரும் பின்னால் சென்றார். அவன் இருப்பிடத்தை விசாரித்து அவரே தகுந்த பஸ்ஸில் அவனை ஏற்றித் தானும் ஏறித் தியாகராய நகர் வந்தார். இரவு சுமார் எட்டு மணியாகியும் காலையில் சென்ற கணவன் திரும்பி வராததால் ஏக்கத்துடன் வாயிலிலேயே

உட்கார்ந்திருந்த ஜெயம், கணவனுடன் வேறொருவரும் வந்ததைக் கண்டு எழுந்து நின்றாள். வாயிலில் அநாதை போல் உட்கார்ந்திருந்த ஜெயத்தைக் கண்டதும் சங்கரின் மனம் இடிந்துவிடும் போலாகிவிட்டது. சிறுவயதில் எத்தனையோ ஆசைத் துடிப்புடன் வந்து கதவைத் திறந்ததும் தான் தரிசிக்கும் இன்முகத்துக்கும், சென்னையில் வாயிற்படியில் நின்ற அவள் துக்க முகத்துக்குமிருந்த தாரதம்மியத்தை எண்ணிய அவன் இதயம் வேதனையால் நொறுங்கிக் கொண்டிருந்தது. ஆகையால் வாயிற்படியை அணுகியதும் அவன் உள்ளேகூடச் செல்லாமல் நின்றான்.

அவளும் சிறிது நேரம் மௌனம் சாதித்த பிறகு. "ரொம்ப நேரமாகி விட்டதே," என்றாள், தான்வாயிலில் இருந்ததற்குக் காரணம் சொல்லும் முறையில்.

"ஆம்," என்றான் சங்கர். பிறகு ஒரு விநாடி நிதானித்து விட்டு, "சரி மூட்டைகளைக் கட்டு. நாம் புறப்பட வேண்டும்," என்றான்.

"எங்கே ?" என்று கேட்டாள் ஜெயம்.

இதற்குச் சங்கர் பதில் சொல்வதற்குள் பின்னால் வந்த மனிதர், "என் வீட்டுக்கு அம்மா," என்றார்.

"ஐயா !'' என்று துவங்கிய ஜெயத்தை இடைமறித்த அவர், "அம்மா ! சென்னையில் திண்டாடுபவர்களுக்கு என்று ஒரு தர்ம விடுதி கட்டியிருக்கிறோம். அதற்கு நான் உபதலைவர், அங்கு நீங்கள் பதினைந்து நாட்கள் இருக்கலாம். அதற்குள் வேலையும் தேடலாம்," என்று கூறினார். தம்மிடம் சொல்லாத தகவலை அவர் ஜெயத்திடம் சொன்னது மிக விந்தையாயிருந்தது சங்கருக்கு. அதுவரை சந்தேகப்பட்டவன் சந்தேகத்தை உதறிவிட்டு அவரையும் அழைத்துக்கொண்டு உள்ளே நுழைந்து, விடுவிடு என்று சாமான்களைக் கட்டவும் செய்தான்.

ஜெயத்திற்கு எல்லாமே பிரமிப்பாயிருந்த தென்றாலும், ஆண்டவன் மேல் பாரத்தைப் போட்டு



அவளும் கிளம்பத் தயாராகி மரகதத்திடம் விடை பெற்றுக் கொண்டாள். முதலில் மரகதம் ஆட்சேபித்தாள், ''அண்ணி ! அவர்கூட இன்னும் வரவில்லை. நாளைக்குப் போகக் கூடாதா ?'' என்று உபசாரத்துக்குக் கேட்டாள்.

"இல்லேம்மா ! இடம் கிடைக்கும்போது விட்டு விட்டால் வருமா ? திரும்பவும் நாங்கள் வந்து சொல்லிக் கொள்கிறோம்," என்று ஜெயம் கூறி விடை பெற்றாள்.

இவ்விதம் ஜெயத்தையும் மதுவையும் அழைத்துக் கொண்டு அந்த மனிதருடன் கிளம்பிய சங்கர், வந்த மனிதரின் இல்லத்தை அடையும்போது, மணி பத்தரைக்கு மேல் ஆகிவிட்டது. புறப்பட்டதிலிருந்து பஸ் பல இடங்களைச் சுற்றிக்கொண்டு வந்ததால், எங்கு வந்திருக்கிறோமென்பதை அறியாத சங்கர், அந்த வீட்டை அடைந்ததும் சுற்றுமுற்றும் பார்த்தான், எதிரும் புதிருமாக வரிசையாக இருந்த சிறு வீடுகளையும், வீடுகளுக்கு எதிரிலிருந்த சிறுவர் விளையாட்டுக் கம்பிகள் கட்டைகளையும், சற்று எட்டத் தெரிந்த பெரும் மதில்களையும் பார்த்த சங்கர், எங்கோ ஒரு பெரிய ஆலைக்குப் பக்கத்திலுள்ள தொழிலாளர் விடுதிகளுக்கு வந்திருப்பதை உணர்ந்தான். அவன் பார்த்ததை அவரும் கவனித்தார்.

"ஆமாம் தம்பி ! இது சென்னையிலுள்ள பெரிய ஆலைகளில் ஒன்று. இந்த இடம் பெரம்பூர். நாமிருப்பது மில் தொழிலாளர் வீடுகளின் வரிசை," என்று விளக்கியதன்றி, "வாருங்கள்! நாளை இதைச் சுற்றி," பார்க்கலாம் என்றும் கூறினார்.

"தர்ம விடுதி ?'' என்று வினவினான் சங்கர்.

"அதையும் நாளை பார்க்கலாம்," என்றார்.

வேதனை நிறைந்த உள்ளத்துடனும், தனது நிர்க்கதியை நினைத்துக் கலங்கிய சித்தத்துடனும், அந்த வீட்டிற்குள் தனது குடும்பத்துடன் நுழைந்த சங்கர்

அன்றிரவு ஏதும் சாப்பிடாமலே படுத்துக் கொண்டான். அவனுடன் வாயில் வராந்தாவில் படுத்துக் கொண்ட அந்த மனிதர், "தம்பி! நீங்கள் ஒன்றும் சாப்பிட வில்லையே?" என்று கேட்டார்.

"பசிக்கவில்லை," என்றான் சங்கர்.

அவர் அவனை வலுக்கட்டாயம் செய்யவில்லை. பதில் பேசாமல் படுத்துக் கொண்டார். மறுநாள் காலையில் சங்கருக்கு முன்னாடியே எழுந்திருந்த அந்த மனிதர், எங்கோ போய் ஒரு செம்பில் பாலை வாங்கிக் கொண்டு வந்து, ஜெயத்தை டீ போடச் சொன்னார். டீயை அவரும் குடித்துச் சங்கரையும் குடிக்கச் சொல்லிவிட்டு, ஜெயத்தை நோக்கி, "தங்கச்சி! குழந்தைக்குப் பாலைக் காய்ச்சிக் கொடு. நீயும் கொஞ்சம் பால் சாப்பிடு. அந்த அலமாரியில் சமையலுக்கு வேண்டிய சகலமும் இருக்கு," என்றார்.

ஜெயம் அவரை நன்றி ததும்பும் கண்களுடன் பார்த்தாள். "ஐயா! நீங்கள் எதற்காக எங்களுக்கு இதையெல்லாம் செய்கிறீர்கள்?" என்று கேட்டாள்.

இந்தக் கேள்விக்கு அவர் பதில் சொல்லவில்லை. வெளியே இரு தொழிலாளர்கள் பேசிக் கொண்டிருந்தது அவள் காதில் மட்டுமல்ல சங்கரின் காதிலும் விழுந்தது. "எப்பா! தணிகாசலத்து வீட்டிலே யாரோ விருந்தாளிங்க வந்திருக்காப்போலே இருக்கு." என்றான் ஒருவன்.

"தணிகாசலத்துக்கு எப்ப விருந்தாளியில்லை? கதியில்லாது யாராவது இருந்தா இங்கே கூட்டியாரதும் தர்ம விடுதியிலே சேர்த்து விடறதும் அவர் பழக்கமாப் போச்சு. போன வாரந்தான் ரெண்டு பேரைக் கூட்டியாந்தாரு. இந்த வாரத்துக்கு இன்னும் ரெண்டு பேரு. தர்ம விடுதியிலே ஏற்கெனவே கும்பல், இவர் போற போக்கிலே



பட்டணத்திலே இருக்கிற எல்லாரையும் அதிலே புடிச்சு அடைச்சுடுவாரு," என்றான் இன்னொருவன்.

அப்பொழுதுதான் சங்கருக்கு லேசாக விஷயம் புரிந்தது. தன்னை அழைத்து வந்தவர் பெயர் தணிகாசலம் என்பதையும், வருந்தும் யாருக்கும் அவர் புகலிடமென்பதையும் உணர்ந்த சங்கர், "இந்தக் காலத்தில் இப்படியும் சிலர் இருக்கிறார்களா?" என்று பிரமித்தான். அந்த பிரமிப்பு ஜெயத்திற்கும் ஏற்பட்டது. ஆகவே அவள் தணிகாசலத்தை நோக்கி "ஐயா! உங்களைப் போன்ற தர்மவான்களிருப்பதால் தான் உலகத்தில் மழை பெய்கிறது..." என்று ஆரம்பித்தாள்.

"தங்கச்சி! அதெல்லாம் பேசாதே," என்று அவளைத் தடுத்துவிட்ட தணிகாசலம், "நான் வேலைக்குப் போக வேண்டும். ஆலைச் சங்கு ஊதிவிடும். பகலுக்கு மட்டும் சாதம் கொஞ்சம் அனுப்பு. சாதம் கொண்டுவரும் கூடைக்காரியை இங்கு அனுப்புகிறேன்," என்று கூறிவிட்டு, வீட்டை விட்டுக் கிளம்பினார்.

சங்கரும் ஜெயமும் அன்று முழுவதையும் பிரமிப்பிலேயே கழித்தார்கள். "மிகவும் கெட்ட இந்த உலகத்தில், எங்கோ ஒரு மூலையில் ஒரு சிறந்த மனிதனை ஆண்டவன் சிருஷ்டித்து அறம் அழியாமல் பார்த்துக் கொண்டு விடுகிறாரே," என்ற எண்ணம், அவர்கள் இருவரையும் ஆட்கொண்டது. அந்த எண்ணத்தால் ஏற்பட்ட தைரியத்தாலும் சீக்கிரம் தர்மவிடுதிக்குச் சென்றுவிடலாமென்ற நினைப்பாலும், ஜெயம் அன்று சுறுசுறுப்பாக வேலை செய்தாள்.

ரம்மியமான சூழ்நிலையல்ல அது. சுத்தமான இடமுமல்ல. ஆனால், சென்னைப் பெரிய மனிதர்கள் சுத்தமாகவும் ரம்மியமாகவும் வாழ்வதற்கு ஆயிரக்கணக்கான மக்களின் உழைப்பு அங்குதானிருந்தது. முதல் இரண்டு நாட்கள் அந்தச் சூழ்நிலையைச் சங்கராலும் ரசிக்க முடிய

வில்லை, ஜெயத்தாலும் ரசிக்க முடியவில்லை. மது மட்டும் வாசலில் நின்று காணாதது கண்ட மாதிரி இவற்றையெல்லாம் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தது. இரண்டாவது நாள் லீலாவில் அதுவும் விளையாட ஆரம்பித்தது.

நாகரிகத்தின் அம்சம் மிகக் குறைவாயிருந்த அந்தத் தொழில் பேட்டையில், அன்பு மிகவும் குடி கொண்டிருந்ததையும், கட்டுப்பாடு அதிகம் இருந்ததையும், சங்கர் கண்டான். சாயந்திரம் தொழிலாளர்கள் வேலையிலிருந்து திரும்பியதும் அவர்கள் மனைவிமார்கள் கொதிக்க வெந்நீர் வைத்து, கணவன்மார்களை உட்கார வைத்துத் தலைமுழுக வைத்து, உடலையும் உருவிவிட்டதையும், இந்த நீரோட்டம் வாயிலில் பகிரங்கமாக நடந்ததையும் பார்த்தான் சங்கர். அதை ஜெயத்துக்கும் காட்டி, "ஜெயம்! இதோ பார்! நீ எனக்கு எண்ணெய் தேய்க்க இல்லாத பிகுவெல்லாம் செய்வாயே," என்றான். ஜெயம் பல நாட்களுக்குப் பிறகு அன்று நகைத்தாள். "நீங்களும் மில்லுக்குப் போய்விட்டு வாருங்கள். தலைமுழுக நீர் விடுகிறேன்," என்றாள்.

அன்று அவன் வேடிக்கையாகத்தான் இதைச் சொன்னாள். ஆனால் மூன்றாம் நாளே சங்கர் மில்லுக்குச் செல்ல வேண்டிய அவசியம் ஏற்பட்டது. அவனுக்கு ஒரு வேலையைத் தணிகாசலம் சம்பாதித்துக் கொண்டு வந்தார். "சின்ன வேலைதான் தம்பி! சற்றுக் கஷ்டப்பட்டும் உழைக்க வேண்டும். பின்னால் லாபமிருக்கும்," என்றும் கூறினார்.

சங்கர் பிரமித்தான். "இந்தப் பட்டணத்தில் இத்தனை சீக்கிரம் வேலை எப்படிக் கிடைத்தது?" என்று கேட்டும் விட்டான்.

"தொழிற்சங்கக் காரியதரிசியிடம், முதலாளிகள் சற்று உஷாராகவே இருப்பது சென்னையில் வழக்கம்," என்று விளக்கினார் தணிகாசலம்.



சங்கர் வந்த இரண்டு நாட்களுக்குப் பிறகும், தணிகாசலம் தர்ம விடுதியைப் பற்றி பிரஸ்தாபிக்கவில்லை. ஜெயம் ஒருமுறை பிரஸ்தாபித்தபோது, "இங்கு ஏதாவது அசௌகரியம் இருக்கிறதா?" என்று வினவினார்.

"ஒன்றுமில்லை அண்ணா! இருந்தாலும்..." என்று மன்றாடினாள் ஜெயம்.

"அம்மா! உலகத்தில் எனக்கு யாருமில்லை. நீயும் சங்கரும்தான் எனக்குத் துணையாயிருங்களேன். தர்ம விடுதிக்கு உங்களை அனுப்ப மனம் இடம் கொடுக்கவில்லை," என்றார் தணிகாசலம்.

பத்து நாட்கள் ஓடின. தணிகாசலத்தின் அருமையும் பெருமையும் தினம் தினம் அதிகமாகத் தெரிந்தது சங்கர் தம்பதிகளுக்கு. சென்னையிலுள்ள மிகப் பெரிய தொழிற்சங்கத்தின் காரியதரிசி அவர் என்பதையும், அவரைக் கண்டு மில் முதலாளிகள் மட்டுமின்றி சர்க்கார் கூட உஷாராய் இருந்தார்களென்பதையும் சங்கர் அறிந்து கொண்டான். மேலுக்கு மிக முரடராகத் தெரியும் அவரது இதயம் அன்புப் பழம் என்பதையும் தீர்மானித்துக் கொண்டான் சங்கர். அவரது உயர்ந்த குணங்கள் வெகு சீக்கிரம் அந்தத் தம்பதிகளை அடிமைப்படுத்திக் கொண்டதால், ஆரோக்கியக் குறைவாயுள்ள அந்தத் தொழில் காலனி அவர்களுக்குச் சொர்க்கமாயிற்று. சேற்றில் விளையும் செந்தாமரை செழித்து எழுவது போல அவர்கள் வாழ்க்கையும் அங்கு செழித்து வளரலாயிற்று. அதற்கு அடிகோலின, தணிகாசலத்தின் உலக அறிவும், அவர் கையாண்ட ஒரு தந்திரமும். அத்தனை சூட்சுமமாக வேலை செய்தார் செயலாளர் தணிகாசலம்.

# 25. பாட்டு எழுதும் வழி

சங்கர் வாழ்க்கையை வளப்படுத்துவதற்கான அந்தத் தந்திரத்தை, அவன் அங்கு வந்த மூன்று மாதங்கள் கழித்தே கையாண்டார் சங்கச் செயலாளர் தணிகாசலம். சங்கருக்கு இரண்டு மூன்று வேலைகளைச் சம்பாதித்துக் கொடுத்து, அவன் அவற்றுக்கெல்லாம் லாயக்கில்லை என்று அறிந்த பின்பு தான், அந்தத் தந்திரமே அவர் புத்தியில் உதயமாயிற்று.

முதன் முதலில் சங்கருக்குத் தமது ஆலையிலேயே ஒரு தொழிலாளி வேலையை ஏற்பாடு செய்து கொடுத்தார். சங்கரும் தன்னால் முடிந்த வரையில் அந்த வேலையைச் சிரமப்பட்டுச் செய்தும் பார்த்தான். இருப்பினும் தேகத்திண்மையுள்ள முரட்டு ஆட்கள் செய்ய வேண்டிய அந்த வேலையை அவனால் சரிவரச் செய்ய முடியவில்லை. அது மட்டுமல்ல, காலையில் பத்து மணிக்குப் பஞ்சாயத்து ஆபீசுக்குப் போய், மாலை ஆறு ஏழு மணிக்கெல்லாம் வீடு திரும்பிக் கொண்டிருந்த சங்கருக்கு காலை எட்டாவது மணியில் ஆலையில் இருப்பதும், பகல் ஒரு மணிக்குக் கூடைக்காரி கொண்டு வரும் சோற்றை உண்பதும் அடியோடு சரிப்படாததால், மாலை வேளைகளில் வீடு வந்ததும் படுத்துக் கொண்டான். அந்தக் களைப்பு அவனால் தாங்க முடியாததாயிற்று. ஆகவே முதல் மாதத்திலேயே அந்த வேலையிலிருந்து தணிகாசலமே அவனை விலக்கினார்.

பிறகு தர்ம விடுதி மேற்பார்வை வேலையைக் கொடுத்தார். அந்த விடுதிக்கு வேண்டிய சப்ளை வாங்குபவர் கல்மஷமற்ற சங்கரின் கண்களில் மண்ணைத் தூவி விடவே, அதில் பதினைந்து நாட்களிலேயே பணச் செலவு அதிகமாகி விட்டதைக் கண்டார் தணிகாசலம். ஆகவே ஒரு மாதம் கழித்து அதிலிருந்தும் நிறுத்தினார்.



இப்படி அடிக்கடி வேலையிலிருந்து நிறுத்தப்பட்டது சங்கருக்கும் வேதனையாயிருந்தது. ஜெயத்துக்கும் வேதனையாய் இருந்தது. இருப்பினும் இத்தனை வேதனையிலும் ஜெயத்தின் வாழ்க்கை அதிக சிரமமில்லாமல் கழிந்தது.

தணிகாசலம் கஷ்டம் தெரிந்தவராதலால், சங்கருக்குத் தாம் கொடுக்கும் அலுவல்கள் சரியானவையல்ல என்பதைப் புரிந்து கொண்டார். 'சங்கீத வித்வானைக் கூப்பிட்டு மூட்டை தூக்கச் சொன்னால் எப்படி சரிப்படும்?' என்று தம்மைத் தாமே கேட்டுக் கொண்டார். சங்கர் வேலைகளிலிருந்து விலக நேரிட்டதை அவர் ஒரு பொருட்டாகவே கருதவில்லை. தம்முடனிருந்த ஒரே சகோதரி இறந்துவிட்ட பிறகு, அந்த இடத்துக்கு வந்த ஜெயம், வீட்டிற்கு வந்த லக்ஷ்மிதேவியாக விளங்கியது அவருக்குப் பெரும் சந்துஷ்டியை அளித்தது. தவிர, மது அவருடன் பெரிதும் ஒட்டிக் கொண்டதால் சங்கர் குடும்பத்திடமிருந்து பிரிய அடியோடு சக்தியற்றவரானார் தணிகாசலம். ஆகவே, எது வருவதாயிருந்தாலும் அந்தக் குடும்பத்தைத் தன் வீட்டிலேயே இருத்த உறுதி செய்து கொண்டார். மதுவைத் தொழில் காலனி பள்ளிக் கூடத்திலேயே சேர்த்தார். அந்தக் காலனியிலிருந்த பஜனை மண்டபத்தில், சங்கரை ஒவ்வொரு சனிக்கிழமை இரவும் பாடும்படியும் செய்தார்.

சங்கரின் சங்கீதம் மெள்ளமெள்ளத் தொழிலாளர்களைக் கவர ஆரம்பித்தது. கவருவதற்கு வேண்டிய உபாயங்களையும் தணிகாசலம் சொல்லிக் கொடுத்தார். தொழிலாளருக்குப் பாடியதைத் தவிர சபாக்களுக்கும், ரேடியோவுக்கும் தனது கலையை அர்ப்பணித்து அதைக் காப்பாற்றவும், அந்தக் கலை மூலமே தன் வாழ்வைப் பழையபடி வளப்படுத்திக் கொள்ளவும் சங்கர் தீர்மானித்தான். அதை முன்னிட்டுத் தணிகாசலம் வேலைக்குப்

போன பிறகு, இரண்டு மூன்று சங்கீத சபைக் காரிய தரிசிகளைப் போய்ப் பார்த்தான். ரேடியோ நிலையத்துக்கும் சென்றான். பிறகுதான் விஷயத்தைப் புரிந்து கொண்டான்.

முதல் சபாக் காரியதரிசியே அவன் உணர்ச்சி அக்னியின் நீரை ஊற்றினார். காரியதரிசியின் இல்லத்து வாசல் வராந்தாவில் அரை மணி நேரம் அமர்ந்திருந்த பிறகே அவன் காரியதரிசியைத் தரிசிக்க முடிந்தது. உள்ளே வேறு வேலையில்லாதிருந்தும், சங்கரைக் காக்க வைத்துப் பிறகு உள்ளே அழைத்து நாற்காலியில் உட்காரச் செய்த காரியதரிசி கேட்டார், ''யார் நீங்கள் ?'' என்று.

"கொஞ்சம் சங்கீதம் பயின்றிருக்கிறேன்," என்று ஆரம்பித்தான் சங்கர்.

"ஓஹோ ! வித்வானா ?'' என்ற சபைக் காரியதரிசியின் குரலில் அலுப்பு இருந்தது.

"ஆமாம்."

"யாரிடம் சிட்சையோ ?"

"உரத்தூர் மணி ஐயர்."

அந்தப் பெயரையே காரியதரிசி கேட்டதில்லையென்பதை அவர் முகம் நிரூபித்தது. சங்கர் விளக்கினான். ''அவர் மகா வித்வான். அவரிடம் சுமார் இருபது வர்ணங்கள் பாடம் பண்ணியிருக்கிறேன். அதில் பத்து அபூர்வராக வர்ணங்கள்," என்று.

காரியதரிசியின் முகம் விளக்கெண்ணெய் சாப்பிட்ட மாதிரி இருந்தது. ''வர்ணமா !" என்று பெருமூச்செறிந்தார் அவர்.

"ஏன் ஸார் ? வர்ணம்தானே கர்நாடக சங்கீதத்தின் உயிர் ?" என்றான் சங்கர்.



"உயிராயிருந்தது," என்றார் காரியதரிசி.

"அப்படியானால்...?"

"இப்பொழுது வர்ணம், பல்லவி இதையெல்லாம் கேட்டால் ஜனங்கள் ஓடுகிறார்கள்."

"எனக்கு ஒரு சான்ஸ் கொடுத்துப் பாருங்கள் ஸார்."

"அப்புறம் எனக்கு இந்தக் காரியதரிசி சான்ஸ் இருக்காது. என்னைத் தூக்கிவிடுவார்கள்."

"ஏன் ஸார் ?"

"ஐயா, நான் சொல்கிறதைக் கேளும். இப்போ பெரிய பெரிய வித்வான்கள் கச்சேரிக்கே ஆள் கிடையாது. அவர்கள் கச்சேரிகளை வைத்தாலே சபைக்குக் கையைப் பிடிக்கிறது. நாட்டியத்துக்கும் நாடகத்துக்கும் தான் ஜனங்கள் வருகிறார்கள். உங்களுக்கு..." என்ற அவரை, சங்கர் பரிதாபத்துடன் இடைமறித்து, ''சங்கீத வித்வானுக்கு நாட்டியம் எப்படி ஸார் வரும் ?" என்றான்.

"நாட்டியம் வராவிட்டால் பணம் வராது. நாட்டியம் வராவிட்டால் நாடகத்தில் சேரவாம்" என்ற காரியதரிசி, "என்மேல் கோபப்பட்டுப் பிரயோசனமில்லை. ஜனங்கள் பிரியப்படுவதை வைத்தால்தான் சபை பிழைக்கும். சபையென்று ஒன்றிருந்தால்தான் காரியதரிசி என்று ஒருவர் உண்டு," என்று தீர்த்துக் கட்டினார்.

இன்னும் இரண்டு காரியதரிசிகளும் இதே பாட்டைத் தான் பாடினார்கள். அதில் ஒருவர், மற்ற இருவரையும் மிஞ்சி, 'உபந்நியாசத்துக்கு வருகிற ஆள்கூடப் பாட்டுக் கச்சேரிக்கு வருகிறதில்லை ஐயா. இந்தச் சபையில் இனிமே நாடகம்தான்," என்று திட்டவட்டமாகக் கூறினார்.

மூன்று நாட்களை இப்படி ஓட்டிய சங்கர், நான்காவது நாள் ரேடியோ ஸ்டேஷனுக்கும் போய்ப் பார்த்

தான். "முதலில் அப்ளிகேஷன் போடுங்கள், பிறகு ஆடிஷனுக்குக் (குரல் பரீட்சை) கூப்பிடுகிறோம். அது சரியாயிருந்தால் இரண்டு மூன்று மாதங்களுக்குள் சான்ஸ் கிடைக்கும்," என்று ரேடியோ அதிகாரிகள் கூறினார்கள் இடிந்த மனதுடன் தொழிற்காலனிக்குத் திரும்பினான் சங்கர். அன்றுதான் தணிகாசலத்துக்கும் ஞாபோதயம் ஏற்பட்டது. ஆகவே வெகு குதூகலத்திலிருந்தார் செயலாளர், "தம்பி. உனக்கு ஒரு திட்டம் வகுத்திருக்கிறேன். இன்னும் ஒரு வருஷத்திற்குள் நீ பெரிய மனுஷனாகலே, இந்த மீசையை எடுத்துப் போடுகிறேன்," என்றார் செயலாளர், வஞ்சனையில்லாமல் வளர்ந்திருந்த மீசைமீது கையைப் போட்டு.

"என்னைப் பெரிய மனிதனாக்க யாராலும் முடியாது தணிகாசலம். அனாவசியமாக சிரமப்படாதீர்கள்," என்ற சங்கர், ஆயாசத்துடன் அவர் பக்கத்தில் உட்கார்ந்தான்.

"அண்ணன் என்ன சொல்கிறார்னுதான் கேளுங்களேன்," என்றான் ஜெயம்.

"மற்றவர்கள் என்ன சொல்றாங்கறதைக் கேளுங்க அண்ணே," என்று, சங்கர் தனது அனுபவங்களை விவரித்தான்.

தணிகாசலம் இடியிடியென நகைத்தார். "தம்பி! சென்னையை நீ இன்னும் புரிஞ்சுக்கலே. முதல்லே நீ ஆளாகணும்; பிறகு சரக்கைக் காட்டு," என்றார் நகைப்பினூடே.

"எப்படி ஆளாகிறது? அதுதானே புரியலை," என்றான் சங்கர்.

"தம்பி, உன்னை யாராவது தூக்கிவிடணும்," என்றார். தணிகாசலம்.

"தூக்கிவிடுவார்னு ஒருவரை நம்பித்தான் இங்கே வந்தேன்," என்றான் சங்கர்.





"பெரிய மனுஷனை நம்பினே."

"வேறே யாரை நம்பச் சொல்றீங்க?"

"ஒரு சின்ன மனுஷனை."

"யாரது?"

"தணிகாசலமில்லை?" என்று செயலாளர் தன் மார்பைத் தட்டினார்.

சங்கர் அவரைக் கூர்ந்து நோக்கினான். "அவர் சின்ன மனிதரில்லை. எங்கள் தெய்வம்," என்றான் அவன் குரலில் உணர்ச்சி ஊடுருவி நின்றது. ஜெயத்தின் முகத்தில் நன்றி விரவி நின்றது. மது ஓடி, "மாமா! மாமா!" என்று ஆசையுடன் செயலாளர் கழுத்தைக் கட்டிக் கொண்டது.

செயலாளர் அந்த அன்புக் கயிறுகளால் பிணைக்கப் பட்டதால், அவர் கண்களில் நீர் திரண்டது. அதை மெள்ளத் துடைத்துக் கொண்டார் தணிகாசலம். சில விநாடிகள் பொறுத்து எழுந்து நின்று கொண்டார். "தம்பி, இத்தனை நாள் உன் இஷ்டப்படி பாடினாய். இனி என்னிஷ்டப்படி பாடவேண்டும். நான் சொல்கிறபடி பாடவேண்டும்." என்று உறுதியுடன் கூறினார்.

"எப்படிப் பாடச் சொன்னாலும் பாடுகிறேன்," என்றான் சங்கர்.

"பாட்டையும் நீயே எழுதிக் கொள்," என்றார் தணிகாசலம்.

## 26. உலகத்தோடு ஒட்ட ஒழுகல்

சங்கரைச் சங்கீதத்தின் மூலமே முன்னுக்குக் கொண்டுவரத் திட்டமிட்ட தணிகாசலம், அந்தத் திட்டத்தின் விவரத்தைத் தெளிவாக விளக்கவும் செய்தார்.

"தம்பி! காலத்தையறிந்து நடப்பவனே கவிஞன். இந்தக் காலத்தில், அதாவது மக்கள் ஆதரவால் அரசு நடக்க வேண்டிய காலத்தில், அவர்களுக்குப் புரிவதைத் தான் நாம் தரவேண்டும். ஏதோ சில வித்வான்களுக்கு மட்டும் புரியும் வர்ணம், கீர்த்தனை, பல்லவி இவற்றைப் பாடிப் பயனில்லை. மக்களுக்குத் தெரிந்த மொழியில் அவர்கள் மனத்தை ஈர்க்கும் முறையில் செய்யப்படும் உணர்ச்சிக் கூச்சலுக்குள்ள பலனை, ஆயிரம் கீர்த்தனைகளைப் பாடினாலும் அடைய முடியாது. ஆகவே, தமிழில் முடிந்த வரையில் பாட்டை எழுதிக் கொள்."

இப்படிப் போதித்ததோடு நிற்கவில்லை செயலாளர். அன்று முதல் வழிகாட்டவும் தொடங்கி வரிசையாகத் தமிழ் சினிமாப் படங்களுக்கும் அழைத்துப் போனார். பழைய சினிமாப் பாட்டுப்புத்தகங்களையும் பிளாட்பாரங்களிலிருந்து வாங்கிக் கொண்டு வந்து குவித்தார். மெள்ள மெள்ள அவன் தன் மனதைச் சரிப்படுத்திக் கொண்டு தணிகாசலம் காட்டிய வழியில் இறங்கினான். சிறிது சிறிதாகப் பாட்டுகளைச் சிருஷ்டித்தான். அதிகமாகத் தமிழ் படிக்காவிட்டாலும் இயற்கையாக அவன் உடலில் ஓடிய தமிழ் ரத்தம் பாட்டுகளுக்குச் சொற்களை உதவியது. போதாக்குறைக்கு, தான் தாமோதரம் கலையழகி இவர்களிடம் பட்ட அவமானமும் உள்ளூரப் புகைந்து கொண்டிருந்த காரணத்தால், அவனையும் மீறி வேகமாகவும் சொற்கள் விழுந்தன.

அவன் மக்களிடை புகப் பக்குவப்பட்டு விட்டதைக் கவனித்து வந்த தணிகாசலம், முதன் முதலில் சிறு தொழிலாளர் கூட்டமொன்றில் அவனைப் பாடவிட்டார்.

சங்கர் முதலில் பிரமித்தான். பிறகு மெள்ளக் கீழ் மந்தரத்தில் குரலில் நல்ல அழுத்தங்கொடுத்துப் பாட்டைத் துவங்கிய சங்கர், அதே வரிகளைத் திரும்பத் திரும்பப் பாடி, சுருதியை எழுப்பி மேல்ஸ்தாயீ வரையில் கொண்டு



போனான். இதே மாதிரி சொந்தச் சாமர்த்தியத்தைக் கொண்டு அமைக்கப்பட்ட பல்லவி அனுபல்லவி வரிகள் மேல் ஸ்தாயிகளுக்குச் சென்று சஞ்சரித்த பாட்டின் முடிவில் கரகோஷம் வானைப் பிளந்தது.

சங்கர் மனித உணர்ச்சிகளைக் கிளற ஆரம்பித்து விட்டான் என்பதை உணர்ந்து கொண்ட தணிகாசலம், கையமர்த்திக் கூட்டத்தை அடக்கித் தமது பேச்சைத் துவங்கினார். அப்பொழுது சங்கரைப் பற்றி ஏதும் பிரஸ்தாபிக்காமல், தொழிலாளர் பிரச்சனைகளை மட்டுமே பிரஸ்தாபித்து விவரித்துவிட்டு, மற்றும் சில தொழிற்சங்கத் தலைவர்களைப் பேசவிட்டார். முடிவில் நன்றி கூறும் படலத்தில், அவர் ஏற்கெனவே தயார் செய்த தொழிலாளி ஒருவர் எழுந்திருந்து சங்கரை வானளாவப் புகழ்ந்து, முடிவில், "கவி சங்கர் வாழ்க!" என்று கூவினார்.

அங்கு குழுமியிருந்த சுமார் இரண்டாயிரம் தொழிலாளர்கள், 'கவி சங்கர் வாழ்க!" என்று பெரும் கூச்சலிட்டனர்.

சங்கரின் தலை சுழன்று கொண்டிருந்தது. அந்த மயக்கத்துடனேயே வீட்டுக்கு வந்த சங்கர் பிரமை பிடித்து பல நிமிஷங்கள் பேசாமலே தரையில் உட்கார்ந்து விட்டான். அவன் நிலைகண்ட தணிகாசலம் நகைத்தார். ஜெயத்துக்கு ஏதும் புரியாததால், "ஏன் அண்ணா, இவர் ஏன் இப்படி உட்கார்ந்திருக்கிறார்?" என்று வினவினான் குழப்பத்துடன்.

"ஆரம்ப அதிர்ச்சி," என்றார் தணிகாசலம், புன்முறுவலுடன்.

"எது ஆரம்பம்? என்ன அதிர்ச்சி?" என்று வினவினான் ஜெயம்.

"புகழ் ஏணியின் முதல்படி அளித்த அதிர்ச்சி," என்றார் தணிகாசலம்.

இதைச் சொல்லி, இன்னும் பலமாக நகைத்துக் கொண்டே, தணிகாசலம் கைகால் கழுவச் சென்றார். உணவருந்தி விட்டுத் திண்ணையில் சென்று படுத்துக் கொண்டு நிம்மதியாக உறங்கவும் முற்பட்டார். ஆனால் பெரும் குழப்பத்திலிருந்த சங்கர் சுமாராகத்தான் சாப்பிட்டான். அவனுக்கு உறக்கமும் பிடிக்கவில்லை. வேலையை முடித்துக் கொண்டு வந்து அவன் பக்கத்தில் உட்கார்ந்து கொண்ட ஜெயம், "என்ன நடந்தது? ஏன் இப்படியிருக்கிறீர்கள்?" என்று வினவினாள்.

சங்கர் நடந்ததை விவரித்தான். "ஜெயம்! அண்ணன் என்னைத் திடீரென்று கவியென்று இரண்டாயிரம் பேர் கூட்டத்தில் அறிமுகப்படுத்திய போதே அதிர்ச்சியடைந்தேன். இருப்பினும், சமாளித்துக் கொண்டு பாடினேன். ஆனால் கடைசியில் நன்றியுரை சொன்னவர், 'கவி சங்கர் வாழ்க' என்று கூச்சலிட்டு இரண்டாயிரம் தொழிலாளரையும் கூச்சலிடச் செய்ததை என்னால் பொறுக்க முடியவில்லை, நான் கவியுமல்ல மண்ணாங்கட்டியும் அல்ல. எனக்கு அந்தப் பட்டமெல்லாம் தகாது. எனக்கு ஏதும் புரியவில்லை," என்றான்.

"இதற்கெல்லாம் நீங்கள் ஏன் வருத்தப்பட வேண்டும்? தகுந்தது எது தகாதது எது என்று அண்ணனுக்குத் தெரியும். அவரைப் போன்ற தர்மாத்மாவை நாம் பார்த்திருக்கிறோமா? அவர் தவறான காரியம் எதையும் செய்ய மாட்டார்," என்றாள் ஜெயம் திட்டமாக.

சங்கருக்கும் இது தெரிந்தே இருந்தது. அநாதையாக என்ன செய்வதென்று தெரியாமல் பூங்காவில் ஏங்கிக் கிடந்த தன்னை அழைத்து வந்து, தன்னையும் தன் குடும்பத்தையும் காத்த தர்மப்பிரபுவான தணிகாசலம், தவறு செய்யக்கூடியவரல்ல என்பது சங்கருக்கு நன்றாகத் தெரிந்தே இருந்தது. ஆகவே, அதைப்பற்றி அன்றிரவு ஜெயத்திடம் விவாதிக்காமல், மறுநாள் தணிகாசலத்திடம் பிரஸ்தாபித்தான், "தணிகாசலம், இல்லாததை ஒப்புக் கொள்ள என் மனம் இடம் தரவில்லை," என்று அவரிடம் கூறினான்.



"எதைச் சொல்கிறாய் தம்பி?" என்று கேட்டார் தணிகாசலம்.

"நான் கவியல்லவே," என்றான் சங்கர் மீண்டும்.

"நேற்று கூட்டத்தில் பாடினாய் அல்லவா?" என்று கேட்டார் தணிகாசலம்.

"பாடினேன்."

"அந்தப் பாட்டை யார் எழுதியது?"

"நான்தான்."

"மக்கள் அதை ரசித்தார்களா, இல்லையா?"

"ரசித்தார்கள்,"

"உணர்ச்சி வசப்பட்டார்களா இல்லையா?"

"உணர்ச்சி வசப்பட்டார்கள்."

"அப்படியானால் நீ கவிதான். உணர்ச்சியிலிருந்து எழுவது கவிதை. உன்னிடம் உணர்ச்சியில்லா விட்டால், நீ பிறருக்கு உணர்ச்சியூட்ட முடியாது. உன் சக்தி உனக்கு தெரியவில்லை. போகப் போகத் தெரியும். பாட்டு எழுதுவதை நிறுத்தாதே. அதுவும் நான் சொன்ன வழியில்," என்று கூறிவிட்டு அவன் பதிலுக்குக் காத்திராமல் ஆலைக்குச் சென்றுவிட்டார் செயலாளர்.

சங்கர் அடுத்த இரண்டு தினங்கள்தான் குழம்பினான். பிறகு குழப்பத்திற்கோ சிந்தனைக்கோ வழியில்லாமல் போயிற்று. முதல் கூட்டம் மற்றக் கூட்டங்களுக்கு வழி கோலிற்று. "கவி சங்கர் பங்கு கொள்வார்," என்ற சுவரொட்டிகள் காட்சியளிக்கலாயின. தொழிற் கவியின் பாட்டைக் கேட்கத் தொழிலாளர் மட்டுமின்றி மற்ற மக்களும் ஏராளமாகக் கூடினர். அடுத்தடுத்துக்

கூட்டங்கள் நடந்தன. சங்கர் உணர்ச்சி வசப்பட்டுப் பாடல்களை எழுதினான். செந்தமிழும் நாப்பழக்கம் என்றபடி சொற்களும் எதுகைமோனைகளுடன் விழலாயின. அவை அதிகமாகப் பாட்டைக் கெடுக்காமல் பார்த்துக் கொள்ளும்படி தணிகாசலம் அடிக்கடி எச்சரித்து வந்தார்.

வெகு சீக்கிரம் புகழ் ஏணியில் ஏறிக்கொண்டிருந்தான் சங்கர். தினம் தினம் தொழிலாளர் போட்ட மாலைகளுடன் வீட்டுக்கு வந்து கொண்டிருந்தான். அதை மறுநாள் தானும் தலையில் வைத்துக் கொண்டு, மதுவுக்கும் வைத்துப் பள்ளிக்கூடத்துக்கு அனுப்பிக் கொண்டிருந்தாள் ஜெயம். சங்கர்-ஜெயலக்ஷ்மியின் குடும்ப வாழ்க்கையில் மகிழ்ச்சி குடி கொண்டது.

ஆறு மாதங்கள் ஆயின. தணிகாசலம் அந்த ஆறுமாத உழைப்புக்குப் பெரும் வாய்ப்பு ஒன்றைச் சங்கருக்கு ஏற்பாடு செய்தார். அந்த ஏற்பாடு சங்கரைப் புகழ் ஏணியின் உச்சியில் மட்டுமல்ல, பணத்தோணியின் உச்சியையும் அடைய வைத்தது.

## 27. இன்னொரு ஆண்டு விழா

சங்கர் தொழில் காலனியில வந்து சேர்ந்த ஆறாவது மாதத்தில், அந்தப் பெரும் விழாவை மிக ரகசியமாக ஏற்பாடு செய்திருந்தார் தணிகாசலம். ஏற்பாடு முடிவடையும் வரையில் சங்கரிடம் அதைப்பற்றி அவர் ஏதும் கூறவில்லை. ஜெயலக்ஷ்மியிடம் மட்டும் ஜாடைமாடையாகச் சொல்லியிருந்தாரே தவிர அவளிடமும் முழு விவரமும் கூறவில்லை.

விழாவுக்கு நான்கு நாட்களிருக்கையில், இரண்டு ரிக்ஷாக்களில் பெரிய பெரிய காகிதக் கட்டுகள் தணிகாசலத்தின் வீட்டுவாசலில் வந்திறங்கியபோது, அவை வழக்க



மாகக் கூட்டங்களுக்கு வந்திறங்கும் சுவரொட்டிகள் என்பதை ஜெயமும் சங்கரும் அறிந்திருந்தார்களே யொழிய, அதில் அச்சடிக்கப்பட்டிருக்கும் விஷயம் என்னவென்பதை அவர்கள் உணரவில்லை. ஒரு கட்டிலிருந்து சுவரொட்டியை எடுத்து தணிகாசலம் பிரித்துக் காட்டிய பின்புதான், அந்தத் தம்பதிகளிருவரும் தணிகாசலத்தின் திட்டத்தைப் பற்றிப் புரிந்து கொண்டனர். சுவரொட்டி வழக்கமாகப் போடும் சுவரொட்டியைவிட இரண்டு மடங்கு பெரிதாயிருந்தது. அதன் தலையில் கொட்டை எழுத்துகளில் சென்னை மந்திரி ஒருவரின் பெயரும், சங்கரின் பெயரும் காணப்பட்டன. தணிகாசலத்தின் கையில் காற்றில் அசைந்த சுவரொட்டியின் வாசகத்தைக் கண்ட தம்பதிகள் வாயடைத்து நின்றனர். ஆண்டு விழாவுக்குக் கனம் மந்திரியவர்கள் தலைமை வகிக்கப்போவதாகவும், கவி சங்கர் தொழில் பாட்டுகளைப் பாடப் போவதாகவும் சுவரொட்டியில் கண்டிருந்தது.

"கனம் மந்திரி தலைமை வகிப்பார்; கவி சங்கர் தொழிற் பாட்டிசைப்பார்." என்ற வரிகளைச் சங்கர் மெய்மறந்து உரக்கவே படித்தான். "தணிகாசலம்! என் பெயரை இப்படிப் பெரிதாக மந்திரிக்குச் சமமாகப் போட்டு விட்டீர்களே!" என்று வினவவும் செய்தான்.

"வேறு எப்படிப் போடுவது?" என்று கேட்டார் தணிகாசலம் புன்முறுவலுடன்.

"மந்திரி பெயரைவிடக் கொஞ்சம் சிறியதாகப் போட்டால் நல்லதல்லவா?" என்று மீண்டும் கேட்டான் சங்கர். "தவிர..." என்று இடைமறித்துக் கேட்டார் தணிகாசலம்.

"என் பெயரை நீங்கள் போடுவதும் நான் போடுவதும் ஒன்றுதானே?"

"ஆமாம்."

"நாமே நம்மை விளம்பரப்படுத்திக் கொள்வது சரியா ?"

"வேறு யார் நம்மை விளம்பரப்படுத்துவார்கள் ? பாலசாமிப் தாமோதரம் விளம்பரப்படுத்துவாரா ? அல்லது பத்திரிகைகள் விளம்பரப்படுத்துமா ?"

"சாக்கைக் கண்டு..."

"தம்பி ! உனது சாக்கை யார் கண்டார்கள் ? யார் ஒப்புக் கொண்டார்கள் ? சபாக்காரர்கள் ஒப்புக் கொண்டார்களா? ரேடியோ ஒப்புக் கொண்டதா? பத்திரிகைகள் ஒப்புக் கொண்டனவா ? நீ முதலில் பிரபலமாக வேண்டும். பிறகு அவர்களெல்லாம் வருவார்கள். முதலில் நம்மை நாமே மரியாதைப் படுத்திக் கொள்ள வேண்டும். சுயமரியாதை முக்கியம். பிறகு பிறர் மரியாதை கிடைக்கும். காலம் அப்படியிருக்கிறது. இன்னும் பொறுத்துப் பார். இந்தச் சுவரொட்டியோடு விஷயம் நிற்காது," என்றார் தணிகாசலம் திட்டவட்டமாக.

சங்கர் ஏதோ முணுமுணுத்தான். ஜெயம் குறுக்கிட்டு "பேசாமே அண்ணன் சொல்கிறபடி கேளுங்கள். அவருக்கு எல்லாம் தெரியும்," என்று முடிவு கட்டினாள் சங்கரின் முணுமுணுப்புக்கு.

சங்கர் மேற்கொண்டு பேசவில்லை. சுயவிளம்பரம் அவனுக்கு மிகவும் அவமானமாயிருந்தது. உள்ளூர, 'இது சரியல்ல. இது சரியல்ல' என்று சொல்லிக் கொண்டான். இருப்பினும் தணிகாசலத்துக்குத் தன்னிடமிருந்த அன்பையும், அவர் உபகாரத்தையும் நினைத்து, 'அவர் என்னைக் காப்பாற்றிய தெய்வம் ! அவரை நான் எப்படி மீறி நடக்க முடியும் ?' என்று தன்னைச் சமாதானப் படுத்திக் கொண்டான்.

மறுநாள் தணிகாசலம் மற்றொரு சிறு பொட்டணத்துடன் வீட்டுக்கு வந்தார். அந்தப் பொட்டணத்தைப்



பிரித்துப் பார்த்த ஜெயம், "அண்ணா ! இப்பொழுது எதற்கு இந்தத் துப்பட்டி ? வீட்டில் தான் மூன்று துப்பட்டிகள் இருக்கின்றனவே ?" என்றாள்.

"இது வெறும் மஞ்சள் துப்பட்டியில்லை; மந்திரி கையிலே ஏறினா இதுக்குப் பொன்னாடை என்று பெயர்."

இதைக் கேட்ட ஜெயம் அசந்து போனாள். "அவருக்குப் பொன்னாடை போர்த்தப் போறீங்களா ?" என்றாள் உணர்ச்சி மேலிட்டதால் பேச்சுத் தளர்ந்து உதிர.

"ஆமாம் அம்மா. மந்திரி போர்த்தினாத்தான் பத்திரிகையிலே போட்டோ வரும். போட்டோ வந்தால் நல்ல விளம்பரம் விளம்பரம் வந்தால் புகழ். புகழ் வந்தால் பணம்" என்ற தணிகாசலம், "தங்கச்சி ! இந்த" விஷயத்தைச் சங்கரிடம் சொல்லாதே. ரகசியமாக வைச்சுக்கோ" என்றும் கூறினார்.

ஜெயம் விஷயத்தை மிக ரகசியமாக வைத்துக் கொண்டாள். தங்கள் குடும்பத்தைக் காப்பாற்றி அதன் முன்னேற்றத்துக்காகவே உழைக்கும் அந்த மனித தெய்வத்தை சதா சிந்தனையில் வாழ்த்தினாள்.

ஆலைத் தொழிற் சங்க ஆண்டுவிழா நாளும் வந்தது. அந்தக் காலனி மணக்கோலம் பூண்டது. எங்கும் தொழிற் கொடிகளும், வண்ணக் காகிதத் தோரணங்களும் காற்றி லாடின. காலையிலேயே ஐலண்டு மைதானத்திற்குச் சென்று விட்ட தணிகாசலம் திரும்பி மூன்று மணிக்கு வந்து உணவு அருந்திவிட்டு, சரியாக ஐந்து மணிக்கு ஆளனுப்புவதாகவும், அவர்களுடன் புறப்பட்டு சங்கர், மது இருவரையும் நல்ல உடை அணியச் செய்து அழைத்து வரும்படியும் ஜெயத்திடம் கூறிச் சென்று விட்டார். அவர் கூறிய வண்ணம் சங்கர் குடும்பம் தயாராயிருந்தது.

ஐந்து மணிக்கு அவர்களை அழைத்துச் செல்ல ஆள் மட்டுமல்ல, பெரிய காரும் வந்தது. காரின் அலங்காரம் பலமாயிருந்தது. காரின் மேல் மூடி திறந்தும் இருந்தது. கவி சங்கரையும் அவர் குடும்பத்தையும் அந்தத் திறந்த காரில் ஊர்வலம் போல் தொழிலாளர் அழைத்துச் சென்றனர். ஐலண்டு மைதானத்தில் வந்ததும், கார் பெரும் கூட்டத்தின் இடையே மெதுவாகச் சென்றது. "கவி சங்கர் வாழ்க" என்ற கூச்சல் வானைப் பிளந்தது. மேடைக்கு அருகே வந்ததும் காரைத் திறந்து தொண்டர்கள் சங்கர் குடும்பத்தை மேடைக்கு அழைத்துச் சென்றார்கள். மேடை மீது நாற்காலியில் ஜெயம் கூனிக்குறுகி உட்கார்ந்தாள். அவள் மடிமீது ஏறி நின்றது மது. அவள் முக வெட்கத்துக்கு திரையிட்டது. ஜெயத்தின் கண்களில் நீர் திரண்டது.

# 28. அன்புக் கண்ணீர்

**அ**த்தனை பெரிய ஜனசமுத்திரத்தை அன்றுவரை சங்கர் காணாதபடியாலும், பண்டகசாலை ஆண்டு விழாக் கூட்டமும் அவன் சிந்தனையில் எழுந்தபடியாலும், உணர்ச்சி மேலிட்டதால் அவன் குரல் ஆரம்பத்தில் சிறிது லேசாக அசைந்தது. ஆனால் அடுத்த இரண்டு விநாடிகளுக்குள் அவன் உடலில் ஊடுருவிய இசையின் வேகமும், அவன் அன்று பாடத் துவங்கிய சொற்களின் உணர்ச்சித் தொகுப்பும் அவனைப் பெரிதும் தூண்டிவிடவே, முழு வேகத்தில் அவன் குரல் எழுந்து இசைத்தது. மக்களுக்காகவே இயற்றப்பட்ட சின்னஞ்சிறு கவிதை வரிகள், இரண்டு மூன்று கனராகங்களிலும், லேசாகத் தேசியங் கலந்த அபூர்வ ராகங்களிலும் சுழன்று சுழன்று எழுந்தன. மக்கள், அவன் சாரீரத்தின் கனத்தில், குரலின் வேகத்தில், அவன் திரும்பத் திரும்ப வலியுறுத்திச் சொன்ன கவிதைச் சொற்தொகுப்பில் பரவசப்பட்டுப் பிரமித்து உட்கார்ந்திருந்தனர்.



இசையின் வேகத்தில் கட்டுப்பட்டிருந்த அந்த ஒரு லட்ச மக்கள், அன்று மந்திரியவர்கள் போலீஸ் காவலுடன் வந்து மேடை மீது அமர்ந்ததைக் கூடக் கவனிக்கவில்லை. சங்கரின் பாட்டு, பிடாரன் மகுடியைப் போல் அவர்களைக் கவர்ந்திருந்தது.

அவன் உட்கார்ந்ததும் தணிகாசலம் எழுந்திருந்து மந்திரிக்கு வரவேற்புக் கூறினார். தணிகாசலம் இத்தகைய கூட்டங்களை நிர்வகித்துப் பழக்கமுள்ளவராதலால், அவர் மந்திரியை மட்டுமின்றி சங்கரையும் விலாசித்துப் பேசினார்.

தணிகாசலம் பேசிக் கொண்டிருக்கையில் மந்திரியும் சும்மா இருக்கவில்லை. சங்கரின் பக்கத்தில் அமர்ந்திருந்த அவர், சங்கர் கடைசியில் பாடிய அபூர்வ ராகங்கள் இரண்டின் பெயரை வெகுசாமர்த்தியமாகக் கேட்டறிந்து கொண்டார். சங்கர் உட்கார்ந்ததும், "மிக அருமையாகப் பாடுகிறீர்கள்," என்றார் கிசுகிசுவென்று. சங்கர் அவருக்குக் கை கூப்பி அடக்கத்துடன் வணக்கம் செலுத்தினான். "ஆமாம், கடைசியில் இரண்டு பாட்டுகள் பாடினீர்களே, அவை என்ன ராகம்? தொண்டையில் இருக்கிறது. வரமாட்டேன் என்கிறது," என்ற மந்திரி, அந்த ராகங்கள் தமக்குத் தெரிந்தது போலும், பெயர் தான் நினைப்புக்கு வர மறுப்பது போலவும் கேட்டார்.

"ஒன்று ஜகன் மோகினி, இன்னொன்று ககன குதூகலம்" என்று பதில் கூறினான் சங்கர்.

"ஓ எஸ், ஆமாம் ஆமாம்" என்று தம் சங்கீத அறிவைக் காட்டிய கனம் மந்திரியவர்கள் அவனை நோக்கிப் புன்னகை காட்டினார்.

அவர் எதற்காகச் சிரிக்கிறாரென்பது சங்கருக்குத் தெரியவில்லையானாலும், பெரிய மனிதர்கள் சிரித்தால் தானும் சிரிக்கவேண்டிய அவசியத்தை நினைத்து.

அவனும் லேசாகப் பல்லை இளித்தான். இதற்குள் தணிகாசலம் தமது சொற்பொழிவை முடித்து விட்டதால் கனம் மந்திரி பேச எழுந்தார். அவர் எழுந்ததுடன் மைக்கை அவருக்கு எதிரில் ஒருவன் கொண்டுவந்து வைக்க மந்திரி பேச்சைத் துவங்க முற்பட்டார். அவரை உடனே பேசவிடாத தணிகாசலம், அவர் என்ன செய்ய வேண்டுமென்பதைப் பற்றி அவர் காதில் கிசுகிசுவென்று கூறினார். தணிகாசலத்தின் கையிலிருக்கும் லட்சம் ஓட்டுகளை எண்ணிப் பார்த்த மந்திரி, தணிகாசலம் சொன்னபடியெல்லாம் செய்தார். தணிகாசலம் காதில் சொன்ன அத்தனையையும் தலையை ஆட்டி, ஆட்டி ஆமோதித்து ஒப்புக்கொண்ட மந்திரியார், தொண்டையை ஒரு முறை கனைத்துக்கொண்டு பேச்சை ஆரம்பித்தார்.

மைக்கில் "அன்பர்களே!" என்று துவங்கிய மந்திரியார், "இன்று நான் பேசவேண்டுமா ?" என்று கேட்டார்.

"ஆம், ஆம்," என்று கூட்டத்திலிருந்து ஆயிரம் குரல்கள் கிளம்பின.

"உங்கள் பிரியம் அப்படியானால் அதற்குத் தலை வணங்குகிறேன். ஆனால்எனக்குப்பேச இஷ்டமில்லை. கவி சங்கரின் இசை இன்னும் என் காதில் ஒலிக்கிறது. அகல மறுக்கிறது. சித்தத்தில் அவர் இசை திரும்பத்திரும்பச் சுழல்கிறது. அந்த அமர இசை என் நாவை எழ விடவில்லை," என்று மந்திரியார் வார்த்தைகளைக் கூட்டத்தில் உறையும்படியாக உதிர்த்தார். அவ்வளவுதான், கைதட்டல் வானைப் பிளந்தது. "கவி சங்கர் வாழ்க!" என்ற கூச்சலும் திரும்பத் திரும்ப எழுந்தது.

அந்தக் கூச்சல்களுக்குச் சிறிது அவகாசம் கொடுத்த மந்திரியார், "ஆனால் இங்கு வந்த பிறகு நான் பேசாதிருப்பதும் தவறு. ஏன்? இங்கு ஒருகடமையைச்செய்ய வந்திருக்கிறேன். நீங்களும் அதை முன்னிட்டே கூடியிருக்கிறீர்கள்.



ஆண்டு விழாவல்ல இது. விழா, பிரதி ஆண்டு வருகிறது. ஆனால் மக்களுக்கு ஒரு கவி பிரதி ஆண்டும் தோன்றுவதில்லை. நூற்றாண்டுக்கு ஒரு முறைதான் அவர் தோன்றுகிறார். ஆகவே அவரைக் கௌரவிக்க, அவரைக் கௌரவிப்பதன் மூலம் நம்மையே கௌரவித்துக் கொள்ள இங்கு கூடியிருக்கிறோம். அதுதான் என் முக்கியப் பணி," என்று கூறிய அவர், சங்கர் பக்கமாகத் திரும்பித் தலை வணங்கினார்.

பிறகு அவர் பாட்டுகளின் அருமை பெருமைகளைப் பற்றி விவரித்தார். சங்கரிடம் கேட்டுத் தெரிந்து கொண்ட கடைசி இரண்டு ராகங்களின் பெயரையும் குறிப்பிட்டு, 'இந்த ராகங்களை இப்பொழுது பாடுபவர்கள் குறைவு, பாடுவதென்ன, அறிந்த இசைப்புலவர்களே சொற்பம். அத்தகைய அபூர்வ இசைப் புலவர்களில் நமது கவி சங்கர் முதல்வர்," என்று கூறி, மீண்டும் கூட்டத்திடம் கரகோஷத்தைப் பெற்றார்.

மேற்கொண்டு அவர், பொதுவாகக் கலையைப் பற்றியும் நாட்டின் பெருமையைப் பற்றியும் பேசிவிட்டுத் தமது கட்சியைப் பற்றியும் பேசலானார். இப்படி ஒரு மணி நேரம் எதை எதையோ பேசிய மந்திரியார் கடைசியாக இசைக்குத் திரும்பி தணிகாசலத்தின் சொற்படி, மக்கள் கவிக்குப் பொன்னாடை போர்த்தி மாலையணிவித்தார். அந்தச் சமயத்தில் தணிகாசலம் கண்காட்டவே, இரண்டு மூன்று பத்திரிகை போட்டோக்காரர்கள் மேடைமீது தாவி, 'ஒன்மினிட்' என்று மந்திரி பொன்னாடை போர்த்துவது போல் பல கோணங்களில் படம் எடுத்துக் கொண்டனர். தவிரச் சற்றுத் தள்ளி உட்கார்ந்திருந்த ஜெயத்தையும் மதுவையும் கூடப் போட்டோ எடுத்துக் கொண்டனர்.

ஜெயம் கடைசி வரையில் பிரமித்து உட்கார்ந்திருந்தான். அத்தனை கூட்டத்துக்கு எதிரில் அவனுக்கு உட்கா

ரமே பயமாயிருந்தது. தணிகாசலத்தின் கட்டாயத்துக் காக உட்கார்ந்திருந்தான். ஆனால், தன்னை எல்லாரும் போட்டோ எடுக்க முற்பட்டதும், பேரச்சம், வெட்கம், எல்லாமே அவனைச் சூழ்ந்து கொண்டதால், அவன் இடி இடன் உட்கார்ந்தது உட்கார்ந்தபடி இருந்தான். விழா முடிந்து பெரும் கோலாகலத்துடன் ஆயிரக்கணக்கான தொழிலாளர் தொடர்ந்து வர காரில் தொழில் காலனிக்கு வந்த பிறகும்கூட, அவன் பிரமை தீரவில்லை. மது மட்டும் பெரும் குதூகலத்திலிருந்தது. அதன் விளைவாக, அது இரவு பன்னிரண்டு மணி வரையில் தூங்காமல் ஏதேதோ கேள்விகளைக் கேட்டுக் கொண்டிருந்தது. "மது! சும்மா இருடி!" என்று ஜெயம் அடக்கியும், அது கேட்கவில்லை.

"ஏம்ப்பா! உனக்கு ஏம்ப்பா அவர் துப்பட்டியைப் போர்த்தினார் ?" என்றது மது.

"அது துப்பட்டியில்லையம்மா," என்றான் சங்கர்.

"பின்னே என்னப்பா ?"

"பொன்னாடை."

"அப்படின்னா ?"

"தங்கம் மாதிரி மஞ்சளாயிருக்கிற துணி."

"நாம் சுவாமிக்காக முடிஞ்சு வைப்போமே அந்தத் துணியா ?"

"அது மாதிரிதான்."

"பின்னே நம்ப ஊர்லே அதை நீ பொன்னாடைன்னு சொல்லலையே ?"

"சுவாமிக்குப் பொன்னாடை கிடையாதும்மா."

"அப்படின்னா நீ சுவாமியைவிட ஒசந்தியா ? உனக்கு மாத்திரம் போர்த்தினாங்களே ?"



இதற்குப் பதில் சொல்லத் தெரியாத சங்கர் விழித்தான். தணிகாசலம் நகைத்தார். மதுவைத் தூக்கி மடியில் வைத்துக் கொண்டார். "மது நீ படித்து பி. ஏ. பாஸ் பண்ணி, இந்த தணிகாசலமும் உயிரோட இருந்தா, இந்தத் தமிழ்நாட்டிலே, முதல் பெண் தொழில் மந்திரி மது அம்மா தான்'' என்றார்.

"அப்ப, இந்த மந்திரியையும் நீங்கதான் மந்திரியாக்கிவீங்களா மாமா ?" என்று கேட்டது மது.

"அதற்காக வேலை செய்தேன்," என்றார் தணிகாசலம். ஜெயம் மதுவை அவரிடமிருந்து பறித்துக்கொண்டு போய்ப் படுக்க வைத்துத் தட்டித் தூங்கச் செய்தாள். சங்கர், தணிகாசலம், ஜெயம் மூவரும் அன்று சாப்பிடவே இல்லை. மூவருக்கும் மனம் நிறைந்து விட்டதால், வயிறும் நிரம்பியிருந்தது. மூவரும் ஆளுக்கொரு குவளை பால் குடித்தார்கள்.

தணிகாசலம் அந்தத் தம்பதிகள் மீதும் கண்ணை ஓட்டி, தூரத்தில் சீட்டிப் பாவாடை கட்டிப் படுத்திருந்த மதுவையும் நோக்கினார். பிறகு ஜெயத்தை நோக்கினார். "தங்கச்சி இன்றுடன் உன் தரித்திரம் ஒழிந்தது. மது இனி மேல் பட்டுப் பாவாடை கட்டும், நீயும் பட்டுப் புடவை கட்டலாம்." என்றும் சொன்னார்.

"இப்பொழுதிருக்கிறது என்றும் நிலைத்தால் போதும் அண்ணா. பட்டு எதற்கு எனக்கு ?" என்றாள் ஜெயம்.

"இனிமேல் லக்ஷ்மி தேவியை நீ நிறுத்த முடியாது தங்கச்சி. அவள் வலுவில் உன்னை வந்தே அடைவாள்."

சங்கரோ ஜெயமோ அவர் சொன்னதை மறுத்து எதுவும் சொல்லவில்லை. அவர்கள் இதயத்தில் நன்றி நிரம்பி நின்றது. சங்கர் திடீரென்று எதையோ நினைத்துக் கொண்டு, "ஜெயம் எழுந்திரு," என்றான்.

அவன் எதற்காக எழுந்திருக்கச் சொல்கிறானென்பதை உணராத ஜெயம் குழப்பத்துடன் எழுந்தாள்.

அவள் திகைப்படங்கும் முன்பாகவே சங்கர் தணிகாசலத்தின் கால்களில் நெடுஞ்சாண் கட்டையாக விழுந்தான். அவன் குறிப்புப்படி ஜெயம் தணிகாசலத்தைக் கும்பிட்டாள்.

தணிகாசலத்தின் கண்களில் நீர் திரண்டது. "இது என்ன தம்பி! என்ன தங்கச்சி! சே! சே! எழுந்திருங்க," என்று கூறித் தமது பெரு மீசையுடன் தேம்பித் தேம்பி அழுதார் தணிகாசலம்.

எழுந்திருந்த சங்கரும் ஜெயமும் கூட அழுதார்கள். அன்பு திரண்டால், ஆனந்தம் திடீரெனக் கிடைத்தால், அவை அழுகையைத்தான் தரும் என்பதை அந்த மூவரும் புரிந்து கொண்டார்கள். அன்புக் கண்ணீர் அம்மூவரையும் இறுகப் பிணைத்தது. அங்கு அவர்கள் சாதி மறைந்தது. உயர்வு தாழ்வுகள் மறைந்தன. நின்றது ஒன்று. அது அன்பு; தெய்விகத்துக்கு அன்பு என்றும் ஒரு பொருள் உண்டல்லவா?

## 29. நிலைமாற்றம்

"இனி லக்ஷ்மி தேவியை நீ நிறுத்த முடியாது தங்கச்சி! அவள் உன்னை அடைந்தே தீருவாள்," என்ற தணிகாசலத்தின் வாக்கு வேதவாக்காகவே ஆயிற்று. அடுத்த நாலைந்து தினங்களுக்குள்ளாகவே லக்ஷ்மி தேவியின் திருவடிச் சிலம்புகளின் ஆரம்ப ஒலிகள் மெள்ள மெள்ள அந்த இல்லத்தில் கேட்கலாயின. யார் யார் சங்கரையும் அவன் சங்கீதத்தையும் பற்றி எள்ளி நகையாடினார்களோ, அவர்களெல்லாம் அந்தத் தொழிற் காலனியிலிருந்த சிறு வீட்டுக்கு விஜயம் செய்ய ஆரம்பித்தார்கள். கவி சங்கரை மாபெரும் கூட்டத்துக்கு அழைத்துச் சென்றது இலவசக்கார்தான். ஆனால், அதற்குப் பிறகு அடிக்கடி பல பெரிய மனிதர்களின் சொந்தக் கார்கள் அங்கு வந்து நிற்கலாயின. இதற்



கெல்லாம் மூல காரணம் தணிகாசலத்துக்கென்ன, சங்கருக்கும் நன்றாகவே தெரிந்திருந்தது. அந்த மூல காரணத்தை பொதுக் கூட்டத்திற்கு மறுநாளே தணிகாசலம் வாங்கி வந்து, சங்கரிடம் காட்டி விட்டுப் பத்திரப்படுத்தி வைத்தார். மூலகாரணம் பத்திரிகைகள்!

பொதுக் கூட்டத்திற்கு மறுநாள் காலையிலேயே வெகு சீக்கிரம் எழுந்திருந்து, காலனியிலிருந்து சிறிது தூரத்திலிருந்த கடைக்கு ஓடிய தணிகாசலம், இரண்டு காலைப் பதிப்புகளை வாங்கி வந்து, வாயிலின் சிறு திண்ணையில் உட்கார்ந்து படித்துக் கொண்டிருந்தார். இரவு அதிக நேரம் கழித்து உறங்கிய சங்கர், காலையில் நன்றாகப் பொழுதுவிடிந்து கதிரவனும் ஒளிவீசத் தொடங்கிய பின்பே எழுந்து கண்ணைக் கசக்கிக் கொண்டு வெளியே வந்தவன், தணிகாசலம் பிரித்துக் கையில் வைத்துக்கொண்டிருந்த பத்திரிகையைப் பார்த்துப் பிரமித்து நின்றான். அதன் முதல் பக்கத்தில், "கவிசங்கருக்கு மந்திரி பாராட்டு. உணர்ச்சி ஊடுருவும் உயர்ந்த பாட்டு!" என்ற இரண்டு தலைப்புகள் பெரும் அச்சில் போடப்பட்டிருந்ததையும், தனக்கு மந்திரி பொன்னாடை போர்த்துவது போல் போட்டோவும் பெரிதாகப் போடப்பட்டிருந்ததையும் பார்த்தான் சங்கர். அவன் பத்திரிகையைப் பிரமித்துப் பார்த்ததைக் கண்ட தணிகாசலம், அவனை ஓரக்கண்ணால் பார்த்துப் புன்முறுவல் செய்து, "இந்தா தம்பி," என்று அவனிடம் இரண்டு காலைப் பதிப்புகளையும் கொடுத்துவிட்டுப் பின்புறம் முகம் கழுவச் சென்றார்.

சங்கர் இரண்டு பத்திரிகைகளிலும் வந்த செய்திகளைத் திரும்பத் திரும்பப் பார்த்தான். பத்திரிகைகளின் கெட்டிக்காரத்தனத்தைவிடத் தணிகாசலத்தின் சாமர்த்தியத்தைப் பெரிதும் வியந்தான். அன்று முழுவதும் வீடு அமர்க்களப்பட்டுக் கொண்டிருந்தது. காலனியிலுள்ள தொழிலாளர்கள் பலர் அவனை வந்து பார்த்துப் பார்த்துச் சென்றார்கள். தொழிலாளர்கள் மனைவிமாரும்

வந்து ஜெயத்தைக் கண்டு பாராட்டிப் பேசிவிட்டுப் போனார்கள். மது இரண்டு பத்திரிகைகளையும் விடாமல் வைத்துக்கொண்டு, வருகிறவர்கள் போகிறவர்களிடமெல்லாம், "இதோ எங்கப்பா! இதோ எங்கப்பா!" என்று போட்டோவைக் காட்டிக் கொண்டிருந்தது. அன்று மாலை மதுவின் கை நிறையப் பத்திரிகைகள் குவிந்தன. தணிகாசலம் மாலையில் மீதிப் பல பத்திரிகைகளையும் வாங்கி வந்தார். அன்று இரவு பத்திரிகைகளைச் சங்கரின் கண்முன்னால் திணித்த தணிகாசலம், "தம்பி! இவை தான் உன் வாழ்வின் வளர்ச்சியின் மூல காரணம். இன்னும் சில நாட்களில் பார் இவற்றின் விளைவை," என்று மீண்டும் சொன்னார். அடுத்த நாலைந்து நாட்களில், சங்கர் சற்றும் எதிர்பாராதவர்கள் அந்த வீட்டுக்கு விஜயம் செய்தார்கள்.

முதலில் வந்தவர் அவனை நாட்டியம் தெரியுமா என்று கேட்ட சபைக் காரியதரிசி. அன்று அவர் குழைந்தும் குறுகியும் இன்னும் இரண்டு பேருடனும் வந்தார். உள்ளே வந்ததும் வராததுமாக, சங்கரை நன்றாகத் தெரிந்தவர்போல அவனது இரண்டு கைகளையும் தன் கைகளால் இறுகப் பிடித்து, வலிக்கும்படியாகக் குலுக்கி, "இவர்தான் கவி சங்கர்," என்று தன்னுடன் வந்தவர்களுக்கு அறிமுகப் படுத்தி, "இவர்தான் சுப்பிரமணியம், அட்வகேட், எங்கள் சபைத் தலைவர், இவர்தான் ஆடிட்டர் ஆதிகேசவன் பி.ஏ. உப தலைவர்," என்று மற்றவர்களையும் சுட்டிக்காட்டி அறிமுகப்படுத்தி வைத்தார். பரஸ்பரம் எல்லாரும் கை கூப்பி வணங்கி அசட்டுச் சிரிப்பு சிரித்துக் கொண்ட பிறகு, சபைக் காரிய தரிசி விஷயத்தை துவக்கினார். "கவிஞர் பழைய விஷயங்களை நினைவில் வைத்துக் கொள்ளக் கூடாது. எதுவும் நம்மால் இல்லை. எதுக்கும் காலம் வரணும்," என்றார்.

சங்கருக்கும் ஓரளவு அவர் எதைக் குறிப்பிடுகிறார் என்று புரிந்து இருந்தாலும், அதைத் தெரிந்து கொள்ளாதது போல், "எதைப் பற்றிச் சொல்லுகிறீர்கள்?" என்று கேட்டான்.

"முதலில் நாம் பார்த்ததை. எனக்கென்ன ஜோஸ்யமா தெரியும். நீங்கள் நீறு பூத்த நெருப்பென்று?" என்று சங்கரின் உண்மை சொரூபத்தை அப்பொழுதுதான் தெரிந்தவர் போல் கூறினார் சபைக் காரியதரிசி.

அட்வகேட் சுப்ரமணியம், அனாவசியமாகப் பேச்சை வளர்த்த இஷ்டப்படவில்லை. "நாங்கள் வந்த காரியத்தைச் சொல்லி விடுகிறேன். நம்ம சபையில் உங்கள் முதல் கச்சேரி நடக்கவேண்டும்," என்றார்.

மீண்டும் காரியதரிசி இடைபுகுந்து, "சபை பெயருக்குப் பெரியதே தவிர, வருமானம் அப்படியொன்றும் பிரமாதமில்லை..." என்று இழுத்தார்.

அட்வகேட் சுப்ரமண்யம், காரியதரிசியை ஒரு முறை முறைத்து அடக்கிவிட்டு, "கவிஞர்வாள்! நீங்கள் எதைச் சொன்னாலும் சரி, 'ரேட்' டைப் பற்றிக் கவலை வேண்டாம்" என்றார்.

"நான் வந்து பாடி விடுகிறேன். நீங்கள் கொடுப்பதைக் கொடுங்கள்," என்றான் சங்கர்.

இந்தச் சமயத்தில் ஆடிட்டர் குறுக்கிட்டு, "கவிஞரென்றால் இப்படித் தானிருக்க வேண்டும். ஆனால் அதற்காக குறைத்துவிட மாட்டோம்" என்று கூறி, ரேட் அதிகமாக ஓடி விடாமல் முட்டுக்கட்டை போட்டார்.

சங்கர் 'ரேட்'டைப் பற்றி அக்கறைப்படவில்லை அன்று. அத்தகைய பெரிய ரசிகர் சபையில் பாட வசதி கிடைத்ததே பெரும் பேறு என்று எண்ணினான். அடுத்த வாரம் நடக்கவிருந்த அந்தக் கச்சேரியைப் பற்றிய குதூகலத்திலும் ஏற்பாட்டிலும் அந்த வாரத்தைக் கடத்தினான். தினம் தம்பூரா வைத்துக்கொண்டு சாதகம் செய்

தான். தான் சற்று மறந்திருந்த உருப்படிகளை மீண்டும் பாடிப் பாடி நினைவுபடுத்தி, அவற்றுக்கு மெருகு கொடுத்துக் கொண்டான். சங்கீத முஸ்திப்பைப் பலமாகச் சங்கர் செய்து கொண்டுதான் கச்சேரிக்குப் போனான். சபைக்காரர்களும் பெரிய பக்க வாத்தியங்களாக அவனுக்கு ஏற்பாடு செய்திருந்தார்கள். தம்பூரா மீட்டுவ தற்கு ஆளில்லாததால், தானே மீட்டிக் கொண்டு பாடினான் சங்கர். இத்தனையிலும் ஓர் உண்மையைப் புரிந்து கொண்டான். அங்கு வந்திருந்த பெரிய சரிகை அங்க வஸ்திரங்கள், சரிகை முண்டாசுகள், ஹாட் பூட்டுகள் எல்லாமே தொழிற் கூட்டத்தைவிட எந்தவிதத்திலும் உயர்ந்ததல்ல என்ற உண்மைதான். பெரும் உருப்படிகள், நிரவல்கள், ஸ்வரங்கள், இவற்றை ரசிப்பதுபோல் தலையை அவர்கள் ஆட்டத்தான் செய்தார்கள். இருப் பினும் கடைசியில் தான் பொதுக்கூட்டத்தில் பாடிய தொழில் பாட்டுக்குச் சீட்டு வந்தது. அதைப் பாடிய போது பெரும் கரகோஷம் வானைப் பிளந்தது. அந்தப் பாட்டு அங்கு வந்திருந்தவர்களுக்கு விரோதமான பாட்டு தான். ஆனால் அதைப்பற்றி யாரும் கவலைப்படவில்லை. மற்றவர்கள் கொண்டாடுவதைத் தாங்களும் கொண்டாட வேண்டுமென்று எண்ணினார்கள் பெரிய மனிதர்கள். கச்சேரிக்குப் பிறகு, கவி சங்கருக்கு நன்றி கூறிய அறிஞர், 'லைட்லாங்வி'லும் கவிஞர் சங்கீதக் கலையைப் பரிமளிக்கச் செய்ததைப் பற்றிக் குறிப்பிட்டார்.

கச்சேரி அன்று அமர்க்களமாக முடிந்தது. சம்பாவனை யும் சுளையாக முந்நூறு ரூபாய் கிடைத்தது. அதை வாங்கித் தன்னுடன் வந்திருந்த தணிகாசலத்திடம் கொடுத்தான் சங்கர். தணிகாசலம் அதைப் பத்திரமாக இடுப்பில் கட்டிக்கொண்டு, சங்கருடன் வீடு வந்ததும், அதை அப்படியே ஜெயத்திடம் கொடுத்து, "தங்கச்சி! இந்தா லக்ஷ்மிதேவி," என்றார். ஜெயம் அவரை நமஸ்கரித்து அதை வாங்கிக் கொண்டாள். அன்றிலிருந்து சங்கர் தம்பதிகளின் சுபிட்ச வாழ்வு துவங்கியது.



தணிகாசலம் சொன்னபடி லக்ஷ்மி தேவி துரிதமாக அடி எடுத்து வைத்தாள்.

அந்தப்பெரிய சபையில் நடந்த கச்சேரி, வேறு பல சபைகளின் கச்சேரிக்கு அடிகோலியது. சபைகளில் நடந்த கச்சேரிகள், கிராமபோன் கம்பெனியை வரவழைத்தன. அடுத்தபடி ஆடிஷன் கேட்க ரேடியோக்காரரும் வந்து சேர்ந்தார். "நீங்கள் ஒருமுறை ஆகாஷ்வாணியிலே ஏற வேண்டும்," என்றார்.

"ஆடிஷனுக்கெல்லாம் எனக்கு இப்ப அவகாசமே இல்லையே?" என்றான் சங்கர்.

"ஆடிஷனா! உங்களுக்கா! எதற்கு ஆடிஷன்?" என்று விசாரித்தார் ரேடியோக்காரர், சங்கர் ஆடிஷன் கொடுக்க இம்சை செய்வது போல.

அத்துடன் வானத்திலும் ஒலித்தது சங்கரின் இசை. இப்படிப் பலதுறைகளிலும் வெற்றி ஒன்றன் மேல் ஒன்றாக வரவே, தணிகாசலத்தின் சிறு வீட்டில் லக்ஷ்மி தாண்டவமாடினாள். தணிகாசலம் சொற்படி மதுவின் சீட்டிப் பாவாடை பட்டுப் பாவாடையாயிற்று. பட்டுப் பாவாடையின் சரிகையும் அதிகமாயிற்று. ஜெயத்தின் புடவையும் பட்டுப் புடவையாயிற்று. ஆனால் இஷ்ட விரோதமாகத்தான் அவள் பட்டுப்புடவையை வாங்கிக் கொண்டாள் அதுவும் தணிகாசலத்தின் கட்டாயத்தின் மேல். வீட்டில் இரும்பு பீரோ ஒன்று வந்து மர பீரோவை மறைத்தது. பித்தளை டம்ளர்கள் வெள்ளி டம்ளர்களுக்கு இடமளித்தன. அந்தச் செல்வத்தின் தாண்டவத்தைக் கண்டு ஜெயம் பயந்தாள். அதற்கு மட்டுமல்ல அவள் பயந்தது; சங்கருக்கு ஏற்பட்ட பெரிய சிநேகிதங்களும் அவளுக்குப் பயத்தை அளித்தன.

சங்கருக்கு அடிக்கடி டின்னர்கள் நடந்தன. பெரிய மனிதர்களின் இல்லங்களில், முன்னேற்றக் காரிகைகள்

பலர் தாங்களே கார் ஓட்டிக் கொண்டு நள்ளிரவில் சங்கரை வீட்டில் இறக்கி விட்டுப் போனார்கள். அதைப் பற்றி ஓரிரு முறை ஆட்சேபிக்கவும் செய்தாள் ஜெயம். "ஏன் பாதி நாள் வெளியில் சாப்பிட்டு விடுகிறீர்கள்?" என்று கோபத்துடன், ஒரு நாள் கேட்கவும் செய்தாள்.

"என்ன செய்வது? பெரிய மனிதர்கள் வலுக்கட்டாயம் செய்கிறார்கள். போகாவிட்டால் தவறாக நினைப்பார்கள், உண்மையில் அவர்களுக்கு உன் மேல்கூட வருத்தம்," என்றான் சங்கர்.

"என் மேலா?" என்று கேட்டாள், வியப்பும் கோபமும் கலந்த குரலில் ஜெயம்.

"ஆமாம் ஜெயம்! உன்னையும் விருந்துக்கு அழைத்து வரச் சொல்கிறார்கள். உன்னிடம் சொல்லவே பயமாயிருக்கிறது எனக்கு." என்றான் சங்கர்.

"என்னை எதற்காக அவர்கள் விருந்துக்கு அழைக்க வேண்டும்? அவர்கள் வீட்டில் ஏதாவது கல்யாணமா? கல்யாணமாயிருந்தால் அவர்கள் வீட்டுப் பெண்கள் வந்து கூப்பிடட்டும், உங்களை விட்டு என்னைக் கூப்பிடுவதா அவர்கள்?" என்று சீறினாள் ஜெயம்.

"உனக்குப் புரியாது ஜெயம்," என்று அலுத்துக் கொண்டான் சங்கர்.

"என்ன புரியவில்லை எனக்கு?"

"இதெல்லாம் கல்யாண விருந்தல்ல,"

"வேறு என்ன விருந்து?"

"சோஷல் டின்னர்."

"அப்படியென்றால்,"

"பெரிய மனிதர்கள் பரஸ்பரம் கலந்து உறவாட ஏற்பாடு செய்யப்படும் விருந்து."



"கலந்து உறவாட விருந்து எதற்கு? அதுவும் ஏழைகள் ரேஷன் அரிசி கிடைக்காமல் பட்டினி கிடக்கும் இந்த நாளில்?"

சங்கருக்கு என்ன பதில் சொல்வதென்று தெரியாததால் கோபம் வந்தது. பதிலேதும் சொல்லாமல் சில்க் ஷர்ட்டைக் கழற்றி ஆணியில் மாட்டிவிட்டுப் படுத்துக் கொண்டான். பணம் சங்கரை மாற்றுவதை ஜெயம் மெள்ள உணர்ந்தாள். இதைப் பற்றித் தணிகாசலத்திடமும் பிரஸ்தாபித்தாள் ஒரு நாள். "ஆமாம் தங்கச்சி. தம்பி கொஞ்சம் மாறித்தான் இருக்கு. பரவாயில்லை. சமயத்திலே நாம் சரிப்படுத்திக் கொள்ளலாம்" என்று சமாதானம் சொன்னார் தணிகாசலம்.

அங்குதான் அவர் தவறு செய்தார். உலகத்தை நன்றாக அறிந்த தணிகாசலமே, தும்பைவிட்டு வாலைப் பிடிக்க இஷ்டப்பட்டது, பெரும் விபரீதத்தில் முடிந்தது. முதல் நான்கு வருஷங்கள் சாதாரணமாகக் கழிந்தன. சங்கரின் அடிப்படை நற்குணங்களின் காரணமாக, அவன் சிறிது சிறிதாகவே மாறி வந்ததால், அந்த மாற்றம் நுண்ணிய அறிவுள்ள தணிகாசலத்துக்குக் கூடத் தெரியவில்லை. நான்கு வருஷங்கள் ஓடியதும், மதுவுக்கு ஒன்பது வயது பூர்த்தியாகிப் பத்தாவது துவங்கியதும், வீட்டு வாசலில் சங்கரின் சொந்தக் கார் வந்து நின்றதும், மது கான்வெண்டில் சேர்க்கப்பட்டதும், தணிகாசலத்தின் கண்களைத் திறந்தன! தணிகாசலம் தமது அறிவீனத்தை நினைத்து நினைத்துத் தம்மை நொந்து கொண்டார்,

ஜெயத்தின் மனம் அவரைவிட அதிகமாக நொந்து கிடந்தது. அதற்கான நிகழ்ச்சி திக்பிரமையூட்டும் முறையில் திடீரென நடந்தது. ஒரு நாள் இரவு பதினொரு மணிக்கு ஒரு காரில் சங்கர் வந்திறங்கினான். ஜன்னல் மூலம் வெளியே எட்டிப் பார்த்த ஜெயம், சிலையென நின்றுவிட்டாள். அந்தக் காரை ஓட்டி வந்தவள் கலையழகி!

# 30. மீண்டும் ராவ்சாகிப்

பணத்தின் புழக்கமும், பெரிய மனிதர்களின் பழக்கமும் சங்கரைச் சிறிது சிறிதாக மாற்றி வருவதைக் கடந்த நான்கு வருஷங்களில் ஜெயம் உணர்ந்தாளானாலும், கலையழகியுடன் காரில் தனித்துவரும் அளவுக்கு அவனுக்குத் துணிவு வருமென்பதை அவள் கனவில்கூடக் கருதவில்லையாகையால், அந்தக் காட்சியைக் கண்டதும் பிரமித்துப் பல நிமிடங்கள் நின்றுவிட்டாள். அந்தப் பிரமிப்பில், சங்கர் உள்ளே வந்து 'ஜெயம்! ஜெயம்! என்று கூப்பிட்டதுகூட அவள் காதில் விழவில்லை. மூன்றாம் முறையாக ஜெயம்!, என்று சீறிய பிறகே அவள் திரும்பிப் பார்த்தாள். திரும்பிய அவள் முகத்தைப் பார்த்த சங்கரின் பிரமிப்பு எல்லை மீறியது. அத்தகைய ஒரு முகத்தை அவன் அன்றுவரை கண்டதேயில்லை,

"ஏன்?" என்று கேட்ட கேள்வியில் கடுமை பலமாகத் தொனித்தது.

ஜெயத்தின் குரலில் கடுமையை என்றுமே கேட்டிராத சங்கரின் விழிகள் ஆச்சரியத்தால் மலர்ந்தன "ஏன் ஜெயமா இந்தக் குரலில் பேசுகிறாள்?" என்ற கேள்வியும் உள்ளூர எழுந்தது. ஆகவே மெள்ள அவளை அணுகிய சங்கர், 'ஜெயம்! இன்றைக்கு என்ன. துர்க்கை இங்கு அவதாரம் செய்திருக்கிறாள்" என்று அன்புடன் வினவி, அவள் தோளிலும் ஒரு கையை வைத்தான்.

"வீட்டில் துர்க்கைதான் இருப்பாள். வீடு புனிதமான இடமல்லவா? மோகினி வேண்டுமானால் பழையபடி காரிலேயே போகலாம்," என்றாள் ஜெயம். சீற்றம் சிறிதும் தணியாத குரலில்.

சங்கர் முகத்தில் அசடு தட்டியது. கார் நின்றதும் தான் சட்டென்று இறங்கி, கலையழகியிடம் விடைகூடப் பெறாமல் விநாடி நேரத்தில் உள்ளே வந்திருந்தும், அதற்



குள் எப்படியோ ஜெயம் அவளைக் கண்டுவிட்டாள் என்பதைப் புரிந்துகொண்டான். அதை வாய்விட்டும் கேட்டான், அசடு தட்டிய குரலில், "கலையழகி கார் ஓட்டி வந்ததைப் பார்த்தாயா?" என்று.

" ஆம், பார்த்தேன். ஏன்? பார்த்துவிட்டாளே, மறைக்க முடியவில்லையே என்று நினைக்கிறீர்களா ?" என்று கேட்டாள் ஜெயம் வெறுப்பு மண்டிய குரலில்.

"அப்படியொன்றுமில்லை" சங்கரின் குரலில் சங்கடம் இருந்தது.

"வேறு எப்படியாம் ?"

"ஜெயம் !"

"சொல்லுங்கள்."

"உனக்குச் சில விஷயங்கள் புரிவதில்லை..."

"சில விஷயங்கள் அல்ல ! பல விஷயங்கள் புரியவில்லை."

"நான் சொல்வதை நிதானமாகக் கேள்."

"சொல்லுங்கள். இங்கேயேதானிருக்கிறேன். நான் எங்கும் ஓடிவிடப் போவதில்லை."

"கலையழகி ஏன் கார் ஓட்டிக்கொண்டு வந்தாள் தெரியுமா ?"

"உங்கள் பாட்டில் மயங்கி இருப்பாள்."

இதற்கு என்ன பதில் சொல்வதென்று சங்கருக்குப் புரியாததால், சில விநாடிகள் மௌனம் சாதித்தான். "நான் கலையழகியை இன்று சந்திக்கவில்லை," என்றான் முடிவில்.

"பல நாட்களாகச் சந்திப்பு நடக்கிறதாக்கும் ?"

"இல்லை, சில நாட்களுக்கு முன்புதான் சந்தித்தேன், மயிலைக் கச்சேரியில். ராவ்சாகிப் தாமோதரம்தான் மீண்டும் அறிமுகப்படுத்தினார்."

"உங்களை நடுத்தெருவில் விட்ட பெரிய மனிதனா ?"

இந்தக் கேள்விக்குப் பிறகு சிறிது நிதானித்து விட்டு சொன்னான் சங்கர், "ஜெயம், நானாக அந்த ராவ்சாகிப்பையோ கலையழகியையோ நாடிப் போகவில்லை. போன மாதம் மயிலைக் கச்சேரிக்கு இருவரும் வந்திருந்தார்கள். முதலில் நான் ராவ்சாகிப்பைக் கவனிக்கவில்லை. கச்சேரி முடிந்ததும் அவரே வந்து என் கைகளைப் பிடித்துக் கொண்டார். 'சங்கர் அன்று என்ன சொன்னேன் அந்தப் பட்டிக்காட்டில், நினைவிருக்கிறதா ? சென்னை வந்தால் உன் கலை உன் வாழ்வை ஆயிரம் மடங்கு உயர்த்தும் என்று சொன்னேனே. என்ன ஆயிற்று பார்த்தாயா ? அன்று உன்னைத் தூண்டியிராவிட்டால் இந்த அந்தஸ்து கிடைக்குமா ? என்றார். எனக்கு என்ன சொல்வதென்றே புரியவில்லை ஜெயம் ! நான் பிரமித்து நின்றேன். என்னை, 'கெட்அவுட்' என்று சொன்ன பெரிய மனிதன், கூட்டத்தில் பகிங்கரமாக என் கைகளைப் பிடித்துக் கொண்டு இப்படி பேசியது எனக்குப் பிரமை அளித்தது. நான் பேசச் சக்தியற்று இருந்தேன் அத்துடன் அவர் விடவில்லை. 'சங்கர் ! உன் விசிறி கலையழகியும் வந்திருக்கிறாள் வா !' என்று கையைப்பிடித்து இழுத்துக் கொண்டு தூரத்தில் பெண்கள் பகுதியில் நின்று கொண்டிருந்த அவளிடம் அழைத்துச் சென்றார். அவள் வணக்கம் தெரிவித்தாள். நானும் வணக்கம் தெரிவித்தேன். தன் வீட்டுக்கு வர வேண்டும் என்றாள். எனக்கு இஷ்டமில்லாததால் பின்னால் ஒரு சமயம் வருவதாகக் கூறினேன். இன்று வரை அவள் வீட்டில் நான் காலடி எடுத்து வைக்கவில்லை. ராவ்சாகிப் வீட்டுக்கும் நான் போகவில்லை. இன்று என் போதாத வேளை இவளிடம் அகப்பட்டுக் கொண்டேன்."



இந்த வார்த்தைகளை மடமடவென்று வெறுப்பு உணர்ச்சி மண்டிக்கொந்தளித்த குரலில் கூறினான் சங்கர். தான் தப்புக் கணக்குப் போட்டுவிட்டதை ஜெயம் உணர்ந்தாள். சங்கர் எத்தனை மாறியும் கலையழகியிடம் உறவாடும் அளவுக்கு அவன் மாறவில்லை என்பதை உணர்ந்தாள். அவனையும் மீறிய சமூக அலைகள் அவனைப் புரட்டிப் புரட்டி அடிப்பதை அவள் சந்தேகமறப் புரிந்து கொண்டாள். ஆகவே அடுத்த கேள்வி அவள் வாயிலிருந்து கனிவுடன் உதிர்ந்தது. "இன்று என்ன நடந்துவிட்டது இவள் வர ?" என்று கேட்டாள் ஜெயம்.

"கச்சேரி முடிந்து வெளியில் வந்ததும், நமது கார் கிளம்பவில்லை. டிரைவர் ஏதேதோ செய்து பார்த்தான் பலிக்கவில்லை. அந்தச் சமயத்தில் ராவ்சாகிப்பும்கலையழகியும் வெளியில் வந்தார்கள். 'அடடா ! என்ன காருக்கு ?' என்று வினவினார் ராவ்சாகிப் டிரைவரை நோக்கி. 'ஸ்டார்ட்டர் வேலை செய்யலிங்க !' என்று கூறினான் டிரைவர். உடனே ராவ்சாகிப் என்னைக் காரிலிருந்து இறங்கச் சொல்லி, கலையழகியை விளித்து, இவரை உன் காரில் கொண்டு வீட்டில் விட்டுவிட்டு வந்துவிடு,' என்றார். கலையழகியும், 'சரிங்க,' என்றாள். நான் எத்தனையோ தடுத்தும் இருவரும் கேட்கவில்லை, அது தான் நடந்தது இன்று.'' என்றான் சங்கர்.

அதற்குமேல் ஏதும் கேட்காத ஜெயம் அவனைக் கை கால் கழுவச் சொல்லி உணவு படைத்தாள். அவன் உண்ட பிறகு நேரம் அதிகமாகிவிட்டபடியாலும், பசியும் இல்லாததாலும் ஒரு குவளை நீரை மட்டும் பருகிவிட்டுப் படுக்கையைப் போட்டாள் ஜெயம். அவர்கள் படுக்கையைச் சற்றுத் தள்ளி மது தூங்கிக் கொண்டிருந்தாள். தொழிற்காலனி வாழ்க்கையின் காரணமாக, பத்து வயதிலேயே பன்னிரண்டு வயதுப் பெண் போல் தூங்கிக் கொண்டிருந்த மதுவைப் பார்த்துப் பெருமூச்செறிந்த

யில் சாய்ந்து கொண்டு, தீவிர யோசனையில் இருப்பதைப் புரிந்து கொண்டாள் ஜெயம். அதைப்பற்றி மெள்ளக் கேட்கவும் செய்தாள். "எந்தக் கோட்டையை பிடிக்க யோசனை செய்கிறீர்கள் ?" என்று.

"எந்தக் கோட்டையும் பிடிக்க வேண்டியதில்லை ஜெயம். பிடிக்கவேண்டிய கோட்டைகளைப் பிடித்தாயிற்று. கடைசிக் கோட்டை ஒன்றிருந்தது. அதுவும் இன்று என் காலில் வந்து விழுந்தது," என்றான் சங்கர் சிறிதும் சிரத்தையில்லாக் குரலில்.

"எது அது ?" என்று வினவினாள் ஜெயம்.

"சினிமா," என்றான் சங்கர்.

"சினிமாவா !" என்று அதிர்ச்சியுடன் வினவினாள் ஜெயம்.

"ஆம்."

"என்ன கேட்கிறார்கள், சினிமாவில் ?"

"பின்னணி பாடக் கேட்கிறார்கள். ஓரிருவர் நடிக்கவும் அழைக்கிறார்கள்."

"நடிப்பதற்குப் போவதே நல்லதாயிற்றே !"

"ஏன் ?"

"கலையழகி உங்களுக்கு ஜோடியாக நடிப்பாள்."

ஜெயம் தன்னைப் பார்த்து நகைக்கிறாள் என்பதைப் புரிந்து கொண்டாலும், சங்கர் அதைப் பொருட்படுத்தாமல், "எனக்கு நடிப்பில் இஷ்டமில்லை ஜெயம். சங்கீத வித்வான் நடிப்பில் இறங்கினால் நடிப்பிலும் தோல்வி, சங்கீதமும் போய்விடும்" என்றான்.

"நல்ல வேளை பிழைத்தேன்," என்றாள் ஜெயம்.

"ஆனால் ஜெயம்," என்று இழுத்தான் சங்கர்.



"என்ன ஆனால் ?" என்று கேட்டாள் ஜெயம்.

"பின்னணி பாடினால் என்ன ?" என்று கேட்டான்.

"எதற்காகப் பாட வேண்டும் ?" என்று ஜெயம் வினவினாள்.

சங்கர் எழுந்திருந்து படுக்கையில் உட்கார்ந்தான். மதுவைச் சில விநாடிகள் உற்று நோக்கினான். "இதற்காகப் பாட வேண்டும்," என்று சுட்டிக் காட்டினான் மதுவை.

"இவளுக்காகவா ?" என்ற ஜெயத்தின் கேள்வியில் வியப்பின் ஒலி தெரிந்தது.

"ஆமாம். இன்னும் ஐந்து வருஷங்கள் போனால் இவளுக்குக் கல்யாணம் செய்ய வேண்டுமே, அதற்குப் பணம் வேண்டாமா ?" என்றான் சங்கர்.

ஜெயம் புன்முறுவல் காட்டினாள். "இதற்குள் அந்தக் கவலை வந்துவிட்டதா உங்களுக்கு ?"

"ஆம். இவள் வளர்த்தியைப் பாரேன். பத்து வயதுக் குழந்தையாகவா இருக்கிறாள் ?" என்றான் சங்கர்.

சங்கர் சொல்வதில் உண்மை இருக்கிறதென்பதை ஜெயம் புரிந்து கொண்டாள். அவனுக்குப் பெண் விஷயத்தில் கவலை இருப்பது பெரிதும் ஆறுதலாகவும் இருந்தது அவளுக்கு. அந்தப் பாசம் இருக்கும் வரையில் கலையழகி கூடத் தன் கணவனை அசைக்க முடியாதென்பதை உணர்ந்து கொண்டாள். ஆகவே பெரும் மகிழ்ச்சியுடனேயே சொன்னாள். "அவள் கல்யாணத்தைப் பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டாம் !" என்று.

சங்கரின் முகத்தில் ஆச்சரிய ரேகை படர்ந்தது. "ஏன் நீ ஏற்கெனவே" மாப்பிள்ளை பார்த்து விட்டாயா ? என்று கேட்டான் வியப்புடன்.

"நாம் யாரும் பார்க்க வேண்டாம்."

"ஏன் ?"

"அவனுக்கென்று ஒருவன் பிறந்திருப்பான்."

"அது சரி. அவன் இருப்பிடம் எங்கே ?"

"சமயத்தில் முருகன் அதைக் காட்டுவார்," என் ஜெயத்தின் குரலில் சாந்தி இருந்தது.

சங்கரின் முகத்தில் சிந்தனை ரேகை படர்ந்தது "தெய்வம் காட்டும், ஊட்டுமா ?" என்று தமிழ்ப் ப மொழியை இரைந்தே சொன்னான் அவன்.

"ஏன் ஊட்டாது ? அது ஊட்டாமலா நமக் அண்ணன் கிடைத்தார் ? அது ஊட்டாமலா நாம் இன் சாப்பிடுகிறோம் ?" என்றான் ஜெயம்.

"சாப்பிட்டால் மட்டும் போதாது ஜெயம். மனி னாகப் பிறந்தவனுக்குச் சுயமுயற்சி அவசியம். கடமை யைச் செய்பவனுக்குத் தான் தெய்வமும் உதவும். ஆகவே மதுவை நல்ல இடத்தில் கொடுக்க நான் உழைக் வேண்டும்," என்றான்.

"நல்ல இடமென்றால் பணக்கார இடமா ?" என் கேட்டான் ஜெயம்.

"பணம் குணம் இரண்டும்தான்." என்றான் சங்கர்.

ஜெயம் மேற்கொண்டு பதில் சொல்லவில்லை தங்களுக்கு அப்பொழுதுள்ள பணமும், இடமும் என்று நிலைத்தால் போதும் என்றும் நினைத்தான். அ நினைப்பில் ஒரு பெரும் கல்லைத் தூக்கிப் போட்டா சங்கர். அதற்குப் பூர்வாங்கமாக ஜெயத்திடம் பெரிது குழைந்தான். "ஜெயம் ! ஒன்று சொல்வதற்குப் பயம யிருக்கிறது. இருப்பினும் சொல்லித்தான் ஆக வேண் யிருக்கிறது." என்று துவங்கினான்.



"என்ன ?"

"நாம் இந்த இடத்தில் இருப்பதில் சில சங்கடங்கள் இருக்கின்றன..." என்று மென்று விழுங்கினான்.

"என்ன சங்கடம் ?" என்று வினவிய ஜெயத்தின் குரலில், லேசாகப் பயம் துளிர்த்தது.

"பெரிய மனிதர்கள் இங்கு வர முடியவில்லை. அவர்கள் எனக்கு விருந்தளிக்கிறார்கள். நான் பதில் விருந்து அளிக்க முடியவில்லை."

"ஏன் ?"

"இந்த வீடு எத்தனை பேர் பிடிக்கும் ? நாலைந்து பேர் உட்காரலாம். டின்னர் என்றால் குறைந்த பட்சம் இருநூறு பேராவது வருவார்கள்."

"எதற்காக ஒரே நாளில் அத்தனை பேரைக் கூப்பிட வேண்டும். நாலு நாலு பேராகக் கூப்பிடுவதுதானே ?"

சங்கர் விழித்தான். பிறகு சொன்னான் : உனக்குப் புரியாது. நீ ஒரு பட்டிக்காடு." என்று.

"நீங்கள் பட்டணத்திலேயே பிறந்து பட்டணத்திலேயே வளர்ந்தவர்கள் !"

"எதில் வளர்ந்தேனோ ? இப்பொழுது நமது நிலைமை வளர்ந்துவிட்டது. இந்தச் சிறு வீட்டில் நாம் இருக்க முடியாது. ஆகையால் ஒரு வீட்டைத் தியாகராய நகரில் வாங்கி விட்டேன். இதை அண்ணனிடம் மெள்ளச் சொல்லி விடு," என்று கூறிவிட்டு, அவன் பதிலுக்குக் காத்திராமல் படுத்துக் கொண்டு கண்களை மூடிக்கொண்டான்.

ஜெயம் பிரமித்து உட்கார்ந்து விட்டான். தனக்கு வாழ்வளித்த அந்தச் சிறு இல்லத்தின் சுவர்களையும் கூரையையும் பார்த்தான். 'இதை எப்படி அண்ணனிடம்

சொல்லுவேன்?' என்று ஏங்கினான் அவன். அண்ணனிடம் எதுவும் சொல்லத் தேவையில்லாதிருந்தது. வாசலில் படுத்துக் கொண்டிருந்த தணிகாசலம் அவர்கள் நினைத்ததுபோல உறங்கவில்லை. அத்தனையும் கேட்டுக் கொண்டிருந்தார். சங்கரின் வாழ்க்கையை இன்னொர் அலை புரட்டி வேறு திசையில் திருப்பி உருட்டிக் கொண்டு செல்வதை உணர்ந்தார். அதைத் தம்மால் தடுக்க முடியாதென்பதும் தெரிந்திருந்தது அவருக்கு.

ஆனால் சங்கரின் வாழ்வைத் திசைதிருப்பிய ராவ்சாகிப் மட்டும் அன்றிரவு வாய்விட்டுச் சிரித்தார். ஒரு பத்து ரூபாய் நோட்டை எடுத்து, சங்கருடைய டிரைவரிடம் நீட்டவும் செய்தார்.

## 31. பணத்தின் வழி

**ப**ணம் பத்தும் செய்யும் என்பதுதான் தமிழ் பழமொழி. ஆனால் அந்தப் பத்தில் ஒன்பதாவது கெடுதலா இருக்கும் என்பதை மட்டும் மனிதர்கள் உணர்ந்தால், அதில் அதிக ஆசை வைக்க மாட்டார்கள். ஆனால் அதில் ஆசை மட்டுமல்ல, வெறியும் உடையவர்கள்தான் உலகத்தில் அதிகம். இல்லாவிட்டால் உலகத்தில் களவு, கயமை, கவறாடல், கள்ளக் காமம் ஆகிய விபரீதங்கள் அளவு கடந்து தென்படுமா என்ன ?

'எவனிடம் பணம் இருக்கிறதோ அவன் மனிதர்களில் பெரியவன். அவன்தான் பண்டிதன், அவன்தான் அறிஞன், அவன்தான் பேசத் தெரிந்தவன், அவன்தான் தரிசிக்கத் தகுந்தவன், எல்லாக் குணங்களும் பணத்தையே சென்று அடைகின்றன' என்றொரு வடமொழி சுலோகமும் இருக்கிறது.

இந்த இரண்டையும், அதாவது தமிழ்ப் பழமொழி வடமொழி சுலோகம் இரண்டையும் இணைத்துப்



பார்த்தால், அடுத்த ஐந்து வருடங்களில் சங்கரின் வாழ்க்கை எப்படித் திரும்பியது என்பது தெரியவரும். அவனிடம் பணம் வந்ததும் உலகம் அவனைச் சுற்றி வட்டமிட்டது. அவனைத் தோத்திரம் செய்தது. இல்லாத பட்டங்களையெல்லாம் அவனுக்களித்தது ஆனால், இருந்த நற்குணங்கள் போயின. அவன் மனதில் தவறான அபிப்பிராயங்கள் பல புகுந்து கொண்டன.

தியாகராய நகரில் வீடு வாங்கியதாக அவன் சொன்னதைச் சர்வ சாதாரணமாகச் சொன்னாலும், அது உண்மையில் பெரிய பங்களாவாகத் தானிருந்தது. அதை வாங்கிக் கொடுத்தவரும் ராவ்சாகிப் தாமோதரம்தான். ராவ்சாகிப் தாமோதரம் ஒரு காரியத்தைச் செய்வதென்று எண்ணிவிட்டால் அதை மிகத் தந்திரமாகச் செய்து முடிப்பது வழக்கமாகையால், எத்தனையோ சாமர்த்தியமாகச் சங்கர் அவரிடமிருந்து விலக முயன்றும் முடியாமல் சிக்கிக் கொண்டான். 'கவி சங்கரை'ப் பற்றி முதன் முதலில் பத்திரிகையில் படித்தபோதே, அவன் பெரிய புள்ளியென்பதைப் புரிந்துக் கொண்ட ராவ்சாகிப், அவன் யாரென்பதை விசாரித்தறிந்ததும் பிரமித்தார். தான் விரட்டியடித்த அந்தப் பஞ்சாயத்துக் குமாஸ்தா இத்தனை பெரிய மனிதனாவான் என்பதை அவர் சொப்பனத்தில்கூட நினைக்காததால் முதலில் பிரமித்தாலும் பிறகு அவனை எப்படியாவது தமது வட்டத்திற்குள்கொண்டு வரத் தீர்மானித்தார். அதற்காக அவன் செய்த கச்சேரிகளுக்கெல்லாம் கலையழகியுடன் போனார். முதல் சீட்டில் உட்கார்ந்தார். சமயா சந்தர்ப்பம் பார்க்காமல் கை தட்டினார். இத்தனைக்கும் அவரைக் கவனிக்காமலே சங்கர் சென்று விட்டதால், அவனை வளைத்துப்போடக் கடைசியாக அந்த முக்கிய வழியை வகுத்தார்.

சங்கருக்குத் தெரியாமலே, அட்வகேட் சுப்ரமண்யத்திடம் "இத்தனை பெரிய வித்வான் கேவலம் தொழித்

காலனியில் வசிப்பது எத்தனை அகௌரவம்?" என்று சுட்டிக் காட்டினார். "ஆமாம் சுப்ரமணியம், நம்மைப் போன்றவர்கள் எல்லாம் அங்கு போவதென்றால் எப்படி?" என்றும் நாசுக்காகக் குறிப்பிட்டார்.

அட்வகேட்டும் அதை ஆமோதித்து, "ஆமாம் ஆமாம்! அந்த 'டர்ட்டி பிளேஸ்'ஸை விட்டுக் கவியை இழுத்துவிட வேண்டியதுதான். கவியின் கணக்கிலும் இருபதினாயிரம் இருக்கிறது." என்றார்.

கவிக்கு வீடு வாங்க வேண்டிய அவசியத்தைப் பற்றி விதை விதைத்த ராவ்சாகிப், அடுத்தபடி அதற்காக புரோக்கர் பூங்காவனத்தையும் அட்வகேட்டிடம் அனுப்பி வைத்தார். புரோக்கர் பூங்காவனம் பிடித்தபிடி விடமாட்டான் என்பது ராவ்சாகிபுக்குத் தெரியும். சென்னையிலுள்ள திரிசமக்காரர்களுக்கு ஒரு சங்கம் வைத்தால், அதற்குத் தலைவராயிருக்கக்கூடிய தகுதியுள்ள ஒரே மனிதர் புரோக்கர் பூங்காவனம் என்பதை உணர்ந்த ராவ்சாகிப், அத்துடன் தமது வேலை முடிந்து விட்டதை உணர்ந்தார். புரோக்கர் பூங்காவனம் அட்வகேட்டை வளைத்த வளைப்பில், சங்கரிடம் வீட்டுப் பத்திரமும் வந்து சேர்ந்தது.

வீட்டை வாங்கிக் கொடுத்த பின்பு ராவ்சாகிப் தமது கடைசி அஸ்திரத்தைப் பிரயோகித்தார். சங்கரின் கச்சேரிக்குக் கலையழகியையும் அழைத்துக் கொண்டு சிறிது தாமதமாகவே சென்று சபைவாசலில் இருந்த டிரைவரிடம் ஏதோ நாலு வார்த்தைகள் சொன்னார். முதலில் டிரைவர் விழித்தான். "உனக்கென்னப்பா இதில் கஷ்டம்? ஐயா இவங்களோட போக ஆசைப்படுகிறார். ஆனால் நேராக தமது கார் வேண்டாம் என்று சொல்வாரா?" என்று குறிப்பாகக் கூறிவிட்டு, உள்ளே சென்று விட்டார்.

ஆகையால் சங்கரின் கார் 'ஸெல்ப்' அன்று வேலை செய்யவில்லை. விதிதான் வேலை செய்தது.



இப்படித் தனது வாழ்வின் திருப்பம் ஒவ்வொன்றிலும் ராவ்சாகிபின் கரம் வேலை செய்வதை அறியாமலே, தியாகராய நகர் பங்களாவில் புது வாழ்க்கைத் துவங்கிய சங்கர், வெகு சீக்கிரம் பழைய வாழ்வை மறந்தான். பழைய மனிதர்களைக்கூட மறந்தான்.

ஆனால் ஜெயம் மட்டும் மிகத் திடமாயிருந்தாள். எத்தனை அலையடித்தாலும் அசங்காத நங்கூரம் போல அவள் வாழ்க்கையை இறுகப் பிடித்து வீட்டில் நிறுத்தி இருந்தாள் அவள். அடுத்த ஐந்து வருடங்களில் தனிமையில் எத்தனையோ முறை அவள் சிறுவயலையும் தொழிற் காலனி வீட்டையும் நினைத்துப் பார்த்திருக்கிறாள். சங்கர் எப்படிக் கிராமத்தின் அமைதியான வாழ்க்கையைக் கத்தரித்துக் கொண்டு சப்தம் நிரம்பிய பட்டணத்துக்கு வந்தான், பட்டணத்திலும் அமைதியளித்த அந்த இரண்டாம் பகுதி தொழிற் காலனி வாழ்க்கையையும் அறுத்துக் கொண்டு, தியாகராய நகர் பெரிய மனிதர்கள் வாழ்க்கையில் சிக்கிக் கொண்டான் என்பதையும் நினைத்து நினைத்துப் பார்த்திருக்கிறாள். கடைசி வாழ்க்கையில் அதிக பணம் இருந்தது, படாடோபம் இருந்தது, ஆனால் அமைதி இல்லை, இன்பமில்லை என்பதை நினைத்துப் பல நாட்கள் தனிமையில் ஏங்கி இருக்கிறாள்.

கணவனுக்கு முதலில் புகழும் பட்டமும் பொன்னாடையும் கிடைத்தபோது பெரு மகிழ்ச்சியடைந்த அவள் மனம், அடுத்த வருடங்களில் வந்து குவிந்த பரிசுக் கோப்பைகள், பாராட்டுப் பத்திரங்கள், சால்வைகள் இவற்றைக் கண்டு வெறுப்பே அடைந்தது. அந்த வருடங்களில் இரண்டொரு முறை பங்களாவுக்கு வந்து போன சிவக்கொழுந்துவிடமும் அவர் மனைவியிடமும் பேசக்கூட சங்கருக்கு அவகாசமில்லாதிருந்ததையும், அவர்கள் அப்புறம் அந்தப் பக்கம் நாடாததையும் நினைத்து ஏங்கினாள்.

தங்கள் வாழ்வின் வளத்துக்கே அஸ்திவாரமான அண்ணன் தணிகாசலம் மட்டும் பங்களா வாங்கின பிறகு ஒரு முறை வந்தவர் பிறகு, எட்டிப் பார்க்கவில்லை என்பதையும் எண்ணி மனம் நொந்தாள். 'அண்ணன் எப்படி வருவார்? கிருகப்பிரவேசத்தன்று இவர் அவரிடம் முகம் கொடுத்துக்கூடப் பேசவில்லையே!' என்று சொல்லிக் கொண்டாள் அவள். நல்ல மனிதர்கள் எல்லாம் அவளை விட்டு அகன்று விட்ட நிலையில், அவளுக்கு ஒரே ஒரு துணைதான் அந்த வீட்டில் இருந்தது. அதுதான் முதன் முதலில் சங்கர் வாங்கிய பழைய தம்பூரா.

அந்தத் தம்பூராவுக்கும் ஜெயத்துக்கும் எந்த வித்தியாசமுமில்லை. இரண்டு பேருமே அவன் கைஸ்பரிசத்துக்கு ஏங்கி நின்றார்கள். அதுவும் அவளைப்போலவே பழையதாயிருந்தது. அதை இப்பொழுதெல்லாம் சங்கர் கச்சேரிக்கு எடுத்துக் கொண்டு போவதில்லை. அதற்குப் பதில் இரண்டு கறுப்புக் கொட்டாப்புளிகள் போல மீரட் தம்பூராக்கள் இருந்தன. அவற்றைக் கச்சேரிக்கும் பின்னணி பாடும் இடங்களுக்கும் தூக்கிச் செல்ல இரண்டு நல்ல தடியன்கள் (சிஷ்யர்கள்) இருந்தார்கள். பழைய தஞ்சாவூர் தம்பூரா புழுதி அடைந்து கிடந்தது. பிரடைகள் கழன்று தந்திகள் தளர்ந்து கிடந்தன. இத்தனைக்கும் ஜெயத்தின் முகம் போலவே அதன் குடத்திலும் ஒரு தனிச் சோபை, தனியான புனிதத் தன்மை இருந்தது. அதை ஜெயம் வெள்ளிக்கிழமைகளில் துடைத்து, அதன் முன்பு குத்துவிளக்கு ஏற்றி வைத்து நமஸ்காரம் செய்து வந்தாள்.

அவள் அந்தத் தம்பூராவைப் போலிருந்தாலும், சங்கர் புதுத் தம்பூராக்களைப்போல் சற்று கனத்து இருந்தான். அவன் வயிறு மெள்ள உப்பி தொந்தியாயிருந்தது. இருந்தாலும் அதில் ஜீரணமில்லாததால் பல மருந்து குப்பிகள் அவன் சோபாவுக்கருகில் காட்சியளித்தன. அந்தப்



பணக்கார வீட்டில் இல்லாத ஒரே ஓர் அம்சம் சமையல்காரன்தான்.

சங்கர், "ஜெயம் உனக்கெதற்குத் தொல்லை? ஏன் வீணாகச் சிரமப்படுகிறாய்? நம்மிடம் பணமில்லையா? ஒரு சமையற்காரனைப் போட்டுக் கொள்ளேன்," என்று பலமுறை சொல்லிப் பார்த்தான். ஜெயம் அந்த விஷயத்தில் மிகவும் பிடிவாதமாயிருந்தாள். "இங்கு அப்புறம் எனக்கென்ன வேலை?" என்று சீறினாள்.

ஆகவே, ஒரு சமையற்கார நாயகர் மட்டும் அந்த வீட்டுக்குள் புகமுடியவில்லை. அது மட்டுமல்ல, மற்றும் பல விஷயங்களிலும் ஜெயம் பிடிவாதமாயிருந்தாள். எந்தப் பெரிய மனிதர் வீட்டு விருந்துக்கும் அவனுடன் செல்ல மறுத்தாள். படாடோபமான சேலை கட்டக்கூட மறுத்தாள். சங்கர் வாங்கி வந்த வைர நெக்லேஸைக்கூட, அவள் மகளின் கல்யாணத்துக்கு இருக்கட்டுமென்று அந்தப் பழைய ஒற்றை வடச்சங்கிலியையே போட்டுக் கொண்டிருந்தாள். "நீ இப்படி இருந்தால் வருகிறவர்கள் போகிறவர்கள் உன்னை இந்த வீட்டு வேலைக்காரியென்று நினைப்பார்கள்," என்றான் சங்கர் கோபத்துடன்.

"சந்தேகமென்ன! நான் இந்த வீட்டு வேலைக்காரிதான். அப்படி இருப்பதுதான் எனக்குச் சந்தோஷம்." என்றாள் ஜெயம்.

சங்கர் கோபத்தில் முணுமுணுத்தான். ஆனால் வேறெதுவும் செய்ய அவனால் முடியவில்லை. ஜெயத்தின் பிடிவாதம் அத்தனை பலமாயிருந்தது.

அந்தப் பங்களாவில் அவள் வேலைக்காரி போலத்தானிருந்தாள். ஆனால் அந்த வேலைக்காரியைக் கண்டு எல்லாரும் பயந்தார்கள். புரோக்கர் பூங்காவனமே பயந்தாரென்றால் மற்றவர்களைப் பற்றிக் கேட்பானேன்

அங்கு வந்த பெரிய மனிதர்கள், அரசியல்வாதிகள் எல்லாருமே கதவு மறைவில் நின்று வேலையாளிடம் காப்பி கொடுத்துக் கொண்டிருந்த உருவத்தின் முகத்தை ஓரிருமுறை பார்த்திருக்கிறார்கள். அதன் ஒற்றைக் குங்குமப் பொட்டு, கண்களின் சீரிய பார்வை இவை, அந்த பெரிய வட்டாரங்களில் கூட சங்கர் சம்சாரத்தைப் பற்றி பேச்சு வந்தபோதெல்லாம் "அந்தம்மா முகத்தைக் காட்டறதுமில்லை, பேசுகிறதுல்லை. ஆனால் அந்தக் கனி அவள் காலடி ஓசையைக் கேட்டாலே நடுங்குகிறார்," என்று வார்த்தை அடிப்பட்டது.

தன் உறுதியாலும் தூய்மையாலும் குடும்பத்தை அத்தனை திடமாக வைத்திருந்த ஜெயத்துக்குத் தன் மகள் பருவ வயதை எய்தியதும் சற்றுப் பயம் ஏற்பட்டது. சங்கரின் புது வாழ்வின் விளைவாக கான்வெண்டில் நான்காவது வருடத்தில் சேர்ந்துவிட்ட மதுவின் சௌந்தர்யம் அபரிமிதமாயிருந்ததன்றி, அவள் நடையுடை பாவனைகளும் பெரிதும் மாறுபட்டன. அவள் படிக்க மட்டும் பழகவில்லை. கார் ஓட்டப் பழகினாள், டென்னிஸ் ஆடப் பழகினாள், நீந்தவும் பழகினாள். அதற்கான உடைகளையும் வாங்கியிருந்தாள். இத்தனையும் வேப்பங்காயாக இருந்தது ஜெயத்துக்கு. மதுவை இரண்டொரு முறை தீவிரமாகக் கண்டித்தாள்.

அந்தச் சமயத்தில் சங்கர் குறுக்கே புகுந்து, "அவளை ஏன் திட்டுகிறாய்? நீ வளர்ந்த இடம் குப்பைக்காடு. அவள் வளர்ந்த இடம் பட்டணம்," என்றான்.

ஜெயம் அவனைச் சுடசுடப் பார்த்தாள் "பட்டணமென்றால், பெண் ஆண்பிள்ளையாகி விடவேண்டுமா என்ன?" என்று சீறினாள்.

சங்கர் அவளை விழித்துப் பார்த்துவிட்டுப் போய்விட்டான். ஆனால் ஜெயம் அசையவில்லை. கடைசியாக ஒரு நாள் காலையில் மதுவை நோக்கி, "இனிமேல் நீ காலேஜை



விட்டதும் நேராக இங்கே வரவேண்டும். இல்லாவிட்டால் உன் காலை முறித்து விடுவேன்," என்று வெகு சீற்றத்துடன் கூறினாள் ஜெயம்.

ஆனால் அன்று மாலையே நடந்த ஒரு நிகழ்ச்சி; அதன் விளைவு? மதுவின் கன்னத்தில் பளபளவென்று நான்கு அறைகள்!

## 32. கன்னத்தில் ஒரு கிள்ளல்

**காலை**யில் கடுங்கோபத்துடன் தாய் செய்த எச்சரிக்கையின் விளைவாக மது காலேஜ் விட்டதும் நேராக வீட்டுக்கு வரத்தான் எண்ணினாள். தன்னை அழைத்துச் செல்ல வந்த டிரைவரிடமும் வீட்டை நோக்கிக் காரைவிடும்படி தான் கூறினாள். டிரைவர் சற்று விழித்து அவளைச் சந்தேகத்துடன் நோக்கினான், "என்ன பார்க்கிறாய் சாமி வீட்டுக்குப் போ," என்றாள் எரிச்சலுடன் காரில் அமர்ந்ததும் டிரைவர் சாமியை நோக்கி.

டிரைவர் சாமி காரை ஸ்டார்ட் செய்த பின்பும் சிறிது தயங்கினான். இரண்டு மூன்று சினிமாக் கம்பெனிகளில் வேலை செய்து விட்டு, சங்கர் சினிமாப் பின்னணிப் பாடகனான பின்பு அவனிடம் வேலைக்கு வந்தவன். நாகரிகத்தை நன்றாக அறிந்தவன். சென்னையில் வருமானக் குறைவு, உணவுக் குறைவு, உடைக்குறைவு ஆகிய எல்லாம் குறைந்திருக்கும் போது, தனது தகப்பனார் வைத்த டி. கிருஷ்ணசாமி என்ற பெயர் அனாவசியமாக நீண்டு கிடப்பது அநாகரிகமென்பதை உணர்ந்து அதை டி. கே. சாமி என்று குறுக்கிக் கொண்டிருந்தான். இவன் குறுக்கியது போதாதென்று மற்றவர்கள் டி. கே.யை உச்சரிக்காமல் விட்டதால் சாமி என்ற இரண்டு எழுத்தில் அவன் பெயர் அடங்கி விட்டது. பெரிய புள்ளிகள் பலரிடத்தில் பழகியவனாதலால் சாமி பல விஷயங்களில் பக்குவம் பெற்றிருந்தான். எதெதைக்

காதில் வாங்கலாம், எதெதைக் காதில் வாங்கக் கூடாது, எதெதைக் கண்ணால் பார்க்கலாம் எதெதைக் கண்ணால் பார்க்கக் கூடாது என்பதையெல்லாம் புரிந்து கொண்டதன்றி, யார் யார் மனப்பக்குவப்படி எப்படி எப்படி நடந்து கொள்ள வேண்டுமென்ற மனோதத்துவ ஞானத்தையும் பெற்றிருந்தான். அந்த அறிவின் விளைவாக எசமானர்களுக்குத் தேவை எது என்பதை உணர்ந்து நடக்கும் ஆற்றலையும் பெற்றிருந்தான். ஆகவே மதுவின் கட்டளைப்படி காரை ஸ்டார்ட் செய்த பின்பும் வீட்டுக்குப் போக மலைக்கவே செய்தான்.

கார் ஸ்டார்ட் ஆகியும் 'நியூட்ரல் கியரில்' ஆடிக் கொண்டே நின்றதையும், முதல் கியரைப் போடவே டிரைவர் முயலாததையும் கண்ட மதுவுக்கும் அவன் குழப்பத்துக்குக் காரணம் புரிந்தேயிருந்தது. இருப்பினும் அதை அறியாதது போல் கேட்டான், "என் சாமி? என்ன யோசிக்கிறாய்?" என்று.

"நேராக வீட்டுக்குங்களா?" என்று கேட்டான் சாமி சந்தேகத்தை நிவர்த்திக் கொள்ள இஷ்டப்படுபவன் போல்.

"ஆமாம்" எரிச்சலுடன் வந்தது மதுவின் பதில்.

"இன்னிக்கு டென்னிஸுக்கு?" என்று இழுத்தான் சாமி.

"போகவில்லை." மதுவின் பதிலில் திடமிருந்தது. வருத்தமும் இருந்தது.

"ஸார் வந்திருப்பாங்களே..." என்று இழுத்தான் சாமி மறுபடியும் பிடிவாதத்துடன்.

டிரைவரின் சொற்கள் மதுவின் அழகிய பெரு விழிகளை கலங்கச் செய்தன. அவன் 'ஸார்' என்று குறிப்பிடுவது யாரென்பதை அவள் உணர்ந்திருந்தாள். உணருவதும் அவளுக்கு என்ன கஷ்டம்? தினம் அந்த 'ஸாரு'டன் தானே அவள் டென்னிஸ் ஆடி வந்தாள். இருப்பினும், அந்த 'ஸாரை'ப் பற்றி டிரைவர் அன்று குறிப்பிட்டபோது அவளுக்கு அழுகையே வந்துவிடும் போலிருந்தது. அழுகைக்குப் பூர்வாங்கமாக அவள் கண்களில் அந்த 'ஸார்' தோன்றினார். 'ஸார்' நன்றாக ஆறடி உயரத்துடனும் உயரத்துக்குத் தக்க பருமனுடனும் இருந்தார். சதா டென்னிஸ் விளையாடியதன் காரணமாகவும் உயரத்தின் காரணமாகவும் ஸாரின் பருமன் அடியோடு தெரியாமல் உருவம் வெகு வாளிப்பாக இருந்தது. ஸாரின் சற்றே நீண்ட முகமும், கூரிய நாசியும், நன்றாக எடுத்து எகிப்து தேசத்து 'பிரமிட்' போல் முக்கோணக் கூச்சாக முன்பக்கத்தில் வாரி விடப்பட்ட கிராப்பும் மிக அழகாயிருந்தன. தவிர ஸாரின் கண்களில் சதா இருந்த தீட்சண்யமும் அவரது அறிவுக்குச் சான்று கூறியது. ஸார் எப்பொழுதும் டீக்காக உடை அணிந்து அமெரிக்க நாட்டு மாட்டுக் காவலன் போல் உடையணிந்து வந்ததால் எந்தக் கும்பலிலிருந்தாலும் ஒரு தனித் தன்மை பெற்றிருந்தார். ஸார் பி.எல். கூடப் பாஸ் செய்திருந்தும், அதில் அத்தனை வரும்படியில்லாததால் டென்னிஸ் விளையாட்டையே வருமானத் துறையாக ஆக்கிக் கொண்டார். டென்னிஸ் பாட்டுடன் ஆஜானுபாகுவாய் நின்ற அந்த இருபத்தாறு வயது ஸாரின் உருவம் கண்முன் எழுந்ததும் மதுவின் மனமும் ஒரு விநாடி சபலப்பட்டது. ஆனால் அடுத்த விநாடி வீட்டிலுள்ள தாயின் சிறிய விழிகள் அவள் உள்ளத்தை ஊடுருவிப் பார்த்தன. அவை 'ஸாரைக்' கூடப் பார்த்து விட்டதாகப் பட்டது மதுவுக்கு. அந்த கிலியில் "உம் சாமி! விடு காரை," என்றாள் உணர்ச்சி மிக்க குரலில்.



"எங்கு?" டிரைவர் மீண்டும் கேட்டான்.

"வீட்டுக்குத்தான். எத்தனை தடவை சொல்வது உனக்கு?" என்று எரிந்து விழுந்தாள் மது.

அடுத்த விநாடி காரைக் கனவேகத்துடன் கிளப்பினான் டிரைவர் சாமி. டிரைவர் கியரைப் போட்ட முறையிலிருந்தும் ஸ்டியரிங்கைத் திருப்பின திருப்பலில் இருந்தும் அவனுக்கு வீட்டுக்குப் போக அடியோடு இஷ்டமில்லை என்பதை மது புரிந்து கொண்டாள். அவள் மட்டுமல்ல காரும் புரிந்துக் கொண்டிருக்க வேண்டும். டிரைவர் கியர் போட்ட போதும், ஸ்டியரிங்கைத் திருப்பிய போதும், கார் தனது பற்களைக் கரகரவென்று கடித்தும் தொண்டையைக் கிரீச் சென்று கத்தச் செய்தும் ஆட்சேபணையைத் தெரிவித்தது. இப்படி அரை மைல் ஓடிய காரை மேற்கொண்டு சாமி இம்சைப்படுத்தியிருந்தால் அது ஸ்ட்ரைக் கூட செய்திருக்கும். ஆனால் அதற்கு அவசியமில்லாமல் செய்ய எங்கிருந்தோ 'ஸார்' குறுக்கே வந்தார். மதுவின் கார் ஆழ்வார் பேட்டைத் திருப்பத்துக்கு வந்த சமயத்தில், சாமி திடீரென்று பிரேக் போட்டு நிறுத்தினான்.

"ஏன் நிறுத்தி விட்டாய்?" என்று சீறிய மது, மேலும் பேசுவதற்குள், அந்தக் காரை மறித்த காரிலிருந்த ஸார் இறங்கி வேகமாக வந்து, "சாமி! காரைப் பின்னுக்கு எடு," என்று உத்தரவிட்டுப் பிறகு தன் காருக்குச் சென்று அதையும் ஒரு ஓரத்தில் நிறுத்தி விட்டு வந்தார். வந்தவர் உள்ளேயிருந்த மதுவை நோக்கி "மது?" என்று மெள்ள அழைத்தார்.

மது பதில் சொல்லவில்லை. அடுத்தபடி "மிஸ்!" என்று அழைத்தார். அதற்கும் பதிலில்லை. "மேடம்!" என்று மூன்றாம் முறை கூப்பிட்டார். அதற்குப் பதில் பளிச்சென்று வந்தது. "அதற்கு இன்னும் வயதாகவில்லை எனக்கு," என்றாள் மது கோபத்துடன்.

பெண்களின் இந்தப் பலவீனத்தை நினைத்த அந்த ஸார் அவன்தான் மோகன், புன்முறுவல் கொண்டான். "அப்பா! என்ன கோபத்தில் இருந்தாலும் வயதைக்



காட்டும் ஒரு சொல் மட்டும் பொறுப்பதில்லை பெண்களுக்கு," என்றான் அந்த வாலிபன். அத்துடன் மதுவை விழுங்கி விடுவது போலப் பார்க்கவும் செய்தான், கார் கதவில் சாய்ந்து உள்ளே தலையை நீட்டிய வண்ணம்.

மதுவின் உருவம் மனோகரமாயிருந்தது. அவளுக்கு அப்பொழுது வயது பதினாறு தானென்றாலும் இருபது வயது பெண்ணுக்கு இருக்க வேண்டிய வளர்த்தியிருந்தது. குழந்தைப் பருவத்திலிருந்த குறுகுறுத்த விழிகள் யௌவனத்தை அள்ளிக் கொட்டும் மோகன விழிகளாயிருந்தன. ஐந்து வயதில் சங்கர் முத்தமிட்டு முத்தமிட்டு மனம் குளிர்ந்த அந்தக் கன்னங்கள் மிகவும் செழுமையும் வேறொரு வித மெருகும் பெற்று எழுச்சி பெற்றிருந்தன. அந்தச் சிறு மொட்டு உதடுகள்தான் எத்தனை பெரிதாகி என்ன சிவப்பைப் பெற்று விட்டன! பதினொரு ஆண்டுகளில் தலையில் இருந்த அந்தப் பழைய நாரதர் கொண்டையில்லை. அப்படிக் கட்டி விடுவாரும் இல்லை. பதிலுக்குப் பின்புறத்தில் நாடா கட்டாத இரட்டைப் பின்னல்கள் இருந்தன. அவற்றில் ஒன்று மட்டும் மார்பின் மீது எடுத்துப் போடப்பட்டிருந்ததால், அது மட்டுமே மோகன் கண்களுக்கு அன்று தெரிந்தது. அவள் மார்பின் மீது தூக்கலாகப் புரண்ட அந்த ஒற்றைப் பின்னலைக் கண்ட மோகன் அதனிடம் பொறாமையே கொண்டான். மதுவின் பருமன் அளவோடு இருந்தது. அளவு அப்படிச் சரிப்பட்டதற்குப் மோகன் ஓரளவு காரணமென்றே சொல்லலாம். முதன் முதலாகச் சற்றே பருமனாயிருந்த மதுவை சங்கர் அழைத்துக் கொண்டு அட்வகேட் சுப்ரமண்யத்தின் வீட்டுக்குச் சென்றபோது, சுப்ரமண்யம் அவள் மீது தம் கண்களை ஓட்டி "கவிஞர் பெண்ணைக் கொஞ்சம் கவனிக்க வேண்டும்," என்றார்.

"என்ன கவனிக்க வேண்டும்?" என்று வினவினான் சங்கர்.

"பெண் இந்தக் காலத்தில் பருமனாயிருக்கக் கூடாது. 'சிக்கா'யிருக்க வேண்டும்," என்றார் அட்வகேட்.

"சிக்காயிருக்கணுமா ?" வியப்புடன் கேட்டான் சங்கர்.

"சிக் இல்லையப்பா ; சிக். அதாவது உயரம் பருமன் கரெக்டா," என்று தமிழில் விஷயங்களைச் சொல்ல முடியாமல் தவித்தார்.

இருப்பினும் விஷயத்தைப் புரிந்து கொண்ட சங்கர், "ஆமாம் அதற்கு என்ன செய்ய வேண்டும் ?" என்று வினவினான்.

பதிலுக்கு அட்வகேட், "யார்ரா அங்கே ? மோகனைக் கூப்பிடு," என்றார்.

மோஹன் வந்ததும், "டேய் மோஹன், இந்தப் பெண்ணையும் டென்னிஸிலே சேர்த்துக் கொள். பாரம் சரியாயில்லை பார்," என்றார்.

மோஹன் விழிகள் அன்றுதான் மதுவின் விழிகளுடன் கலந்தன. சற்றுப் பருமன் அதிகமாயிருந்தாலும் மதுவின் இணையற்ற அழகு அவனைக் கவர்ந்தது.

"ஆகட்டும் அப்பா !" என்றான் மோஹன்.

சங்கர் முதலில் ஆட்சேபித்தான். "எதற்கு இதெல்லாம் இவளுக்கு ? வீட்டில் சிறிது வேலை செய்தால் சரியாகப் போகிறது," என்றான். ஆனால் அட்வகேட் சிரித்தார். "கவிஞர் இன்னும் அந்தப் பழைய நாளில் இருக்கிறார்" என்று சிரித்துக் கொண்டே, "ஓய் கவிஞரே ! இது காலம் வேறய்யா ! அமெரிக்காவில் ஆண் பெண்களுக்கு 'செக்ஸ் எஜுகேஷனே' சொல்லித் தரான், நீர் இந்தக் காலத்திலே ஒரு காலேஜ் பையனோட பெண் விளையாடலாமான்னு யோசனை செய்கிறீர்," என்றும் உயரிய கருத்துகளை வெளியிட்டார்.



சில சூழ்களில் இருந்து மனிதன் மீள்வதில்லை, பெண்களோடு ஆண்களும் சரிநிகர் சமானமாகப் பழகி, டென்னிஸ் ஆடி, நீராடி, பீச் மணலில், அவன் நீரில் ஒட்டிய அரை டிராயருடனும், அவள் மார்பையும் இடையிலிருந்து தொடை வரையிலும் மறைக்கும் ஆடையுடனும் இருக்க வேண்டிய உயர்ந்த நாகரீகச் சூழலிலிருந்து மீள, பெரிய மனிதர் சமூகத்தால் முடியாதிருக்க, அந்தப் பெரிய மனிதர் சமூகத்தில் புகுந்து விட்ட சங்கர் மட்டும் எப்படி மீள முடியும் ? ஆகவே சரியாக நீந்தத் தெரியாதவன் காவேரியின் வேகத்தில் சிக்கியது போல, நாகரீக வேகத்தில் சிக்கிக் கொண்ட சங்கரும் அதில் அடித்துக் கொண்டு போகப்பட்டான். அதன் விளைவாக, முதலில், இஷ்ட விரோதமாக டென்னிஸ் கோர்ட்டுக்கு மதுவை அனுப்பிய சங்கர், பெண்ணின் ஆட்டத்தையும் உடையையும் பார்த்துப் பார்த்து நாளாவட்டத்தில் பழகி விட்டதால், எதுவும் சரியாகவே அவன் கண்ணுக்குப் பட்டது.

ஆனால் ஒரு விஷயத்தில் மட்டும் சங்கர் எச்சரிக்கையுடனிருந்தான். மது புருஷர்களுடன் விளையாடுகிறாள் என்ற விஷயம் ஜெயத்துக்குத் தெரியக் கூடாது என்பது தான் அது. மதுவிடமும் இதைப் பற்றி எச்சரித்திருந்தான்.

"மது ! உன் தாய் பழைய காலத்தவள். அவளுக்கு நாகரீகம் தெரியாது. கேட்டால் உங்கள் காலேஜில் பெண்களுடன் விளையாடுவதாகக் கூறிவிடு," என்று சொல்லிக் கொடுத்திருந்தான். மோஹனும் இது விஷயத்தில் எச்சரிக்கப்பட்டிருந்தபடியாலும் வெகு நாட்கள் டென்னிஸ் விஷயம் ஜெயத்துக்குத் தெரியாமலே இருந்தது.

ஆனால் அந்த டென்னிஸ் விளையாட்டில் எத்தனை கெடுதல் இருந்தாலும் ஒரு நல்லது இருக்கத்தான் செய்தது

மதுவின் தேகம் நன்றாகச் சாலை பிடித்த மாதிரி ஆகி விட்டது. அனாவசியமாக இருந்த சதை கரைந்து அவளை ரம்பையாக அடித்து விட்டது. அந்த ரம்பையை அன்று காரின் உள்ளே தலை நீட்டிய மோஹன் நீண்ட நேரம் பார்த்தான். அந்த ஆண் மகன், அப்படிப் பார்ப்பதைச் சிறிது நேரம் உள்ள மகிழ்ச்சியுடன் சகித்த மது, பிறகு வெளி வெறுப்புடன், "சாமி! காரை விடு." என்றாள்.

காரை நிறுத்தியதும் தனது சீட்டிலிருந்து இறங்கி அப்புறம் சென்று விட்ட டிரைவர் சாமி, மதுவின் குரல் கேட்டதும் திரும்பிவரக் காலை எடுத்து வைத்தான். "இருடா சாமி!" என்ற மோஹனின் குரல் அவன் காலைத் தேக்கியது. அவனை அதட்டி நிறுத்திய மோஹன் கேட்டான், "ஏன் மது! உடம்பு சரியாயில்லையா!" என்று.

"சரியாகத்தானிருக்கிறது."

"பின் ஏன் டென்னிஸுக்கு வரவில்லை."

"வீட்டுக்கு சீக்கிரம் வரும்படி அம்மா சொல்லியிருக்கிறாள்."

"ஏன் வீட்டில் ஏதாவது விசேஷமா?"

"இல்லை. ஒரு விசேஷமுமில்லை."

"பின் எதற்காகப் போக வேண்டும்?"

"காலேஜை விட்டு நேராக வரும்படி தாயார் உத்தரவு."

நிலைமையைப் புரிந்து கொண்டான் மோஹன். ஜெயத்தை அவன் இரண்டொருமுறை தன் வீட்டில் பார்த்திருந்தான். சங்கர் வீட்டிலும் ஓரிரு முறைகள் பார்த்திருந்தான். அவளைப் பார்த்த போதெல்லாம் விவரிக்க



முடியாத பயம் அவன் உள்ளத்தில் எழுந்தது. அது அன்றும் உதயமாகத் தான் செய்தது. இருப்பினும் ஆசை பயத்தை உதறியதால் அவன் கதவைத் திறந்து கொண்டு காருக்குள் அவள் பக்கத்தில் உட்கார்ந்து அவள் கையைப் பிடித்துக் கொண்டான். "மது!" என்று இன்பமாக அழைக்கவும் செய்தான். அவள் பதில் சொல்லவில்லை: வாலிபத்தின் உணர்ச்சிகள் அவள் உடலை ஊடுருவிக் கொண்டிருந்தன "இன்று ஒரே ஆட்டம் ஆடிவிட்டுப் போய்விடு மது! அதிக நேரமும் ஆகாது. சிறிது தாமதத்திற்குக் காரணமும் சொல்லலாம்." என்றான் மோஹன் மீண்டும் இன்பம் சொட்டிய குரலில்.

"என்ன காரணம் சொல்லுவது?"

"உனக்குப் பரீட்சை எப்போது!"

"அடுத்த மாதம்."

"காலேஜில் அதற்காக ஸ்பெஷல் கிளாஸ் வைத்ததாக சொல்வேன்."

மதுவின் முகத்தில் புன்முறுவல் அரும்பியது. தான் ஜெயித்து விட்டதை உணர்ந்த மோஹன், சாமியைக் கூப்பிட்டு மதுவின் காரை டென்னிஸ் கோர்ட்டுக்கு ஓட்டச் சொல்லி, தானும் அதைப் பின் தொடர்ந்தான்...

ஆனால் ஆட்டம் ஒரு ஆட்டத்தோடு நிற்கவில்லை. இருவரும் நேரம் போவது தெரியாமல் ஆடினார்கள். அன்று நேரங்கழித்தே வீடு திரும்பினாள் மது தனியாகவும் திரும்பவில்லை. அவளை வாயில் வரையில் மோஹன் கொண்டு வந்து விட்டான். அது மட்டுமல்ல. வீட்டுக்குள் செல்ல முயன்ற அவளைக் காரிலிருந்தபடியே இழுத்துக் கன்னத்தை அழுத்திக் கிள்ளவும் செய்தான். மது கன்னத்தை இன்பத்துடன் துடைத்துக் கொண்டு கதவைத் திறந்து உள்ளே நுழைந்தாள். எதிரில் ஜெயம் நின்று கொண்டிருந்தாள்.

# 33. சங்கரின் மனைவி

மது தன்னைக் கண்டதும் அசந்து நின்று விட்டதைக் கண்ட ஜெயத்தின் கண்களில் தீப்பொறி பறந்ததன்றி 'யாருடைய கார் அது ?' என்ற சொற்களும் சீறி உதிர்ந்தன.

மது மௌனம் சாதித்தாள். ஜெயத்தின் கோபம் அதிகமாகவே, "யாருடைய கார் அது ?" என்ற கேள்வி இரண்டாம் முறையாக முன்னைவிட அதிக கோபத்துடன் எழுந்தது.

"அட்வகேட் இருக்கிறாரே அவருடைய கார்..." தயங்கித் தயங்கிச் சொன்னாள் மது.

"ஏன் அந்தக் காரில் வர வேண்டும் ? நமது கார் என்ன ஆயிற்று ?" என்றாள் ஜெயம் மீண்டும்.

"ஒன்றும் ஆகவில்லை."

"பின் ஏன் வரவில்லை ?"

"அவர் கொண்டுவந்து விட்டு விடுவதாகச் சொன்னார்"

"யார் அது அவர் ?"

"மோகன் ஸார் !"

"மோகன் ஸாரா ? அவன் என்ன உனக்கு வாத்தியாரோ ?"

"ஆமாம். அவர்தான் டென்னிஸ் சொல்லிக் கொடுத்தார்."

இதைக் கேட்ட ஜெயம் திகைத்தாள். இத்தனை நாளாக மது, தான் பள்ளிக்கூடத்தில் பெண்களோடு டென்னிஸ் ஆடுவதாகவும் பெண்கள்தான் பயிற்சியளிப்ப



தாகவும் சொன்னது முழுப்பொய்யென்பதையும், அந்தப் பொய்க்குச் சங்கரும் சேர்ந்து பாடியிருக்கிறானென்பதையும் புரிந்து கொண்டதால், அவளுடைய உள்ளம் எரிமலையாகியது. "உன்னைக் காலேஜ் விட்டதும் நேராக இங்கு வரச் சொன்னேனா இல்லையா ?" என்று கேட்டாள்.

"ஆமாம்," என்றாள் மது திகிலுடன்.

"பின் ஏன் வரவில்லை ?" என்று வினவினாள் ஜெயம்.

இம்முறை ஜெயத்தின் குரல் சாவதானப்பட்டு விட்டது.

ஆனால் அதில் காணப்பட்ட சாந்தி கோபத்தை விடப் பயங்கரமாயிருந்தது மதுவுக்கு.

"வீட்டிற்குத்தான் வரப் புறப்பட்டேன்..." என்று இழுத்தாள்.

"உம்..."

"நடுவில் மோகன் ஸார் வந்து..."

"உம்..."

"பழக்கம் ரொம்பநாள் விட்டுப் போனால் டென்னிஸ் சரியாக வராது என்று..." அவள் வாசகத்தை முடிக்கு முன்பு, "எந்தப் பழக்கமடி ? டென்னிஸ் பழக்கமா ? கன்னத்தைக் கிள்ளும் பழக்கமா ? இனிமேல் அந்தத் தடியனுடன் திரியமாட்டியே ? மாட்டியே ? என்று விடு விடு என்று வார்த்தைகளைக் கொட்டியதல்லாமல், மதுவின் கன்னமிரண்டிலும் மாற்றி மாற்றி நாலு அறைகளையும் கொடுத்த ஜெயம் சரேலென்று திரும்பி உள்ளே சென்றுவிட்டாள்.

அந்த நான்கு அறைகள் வலிக்கவில்லை மதுவுக்கு. தாயின் சொற்கள் அவளைச் சுட்டெரித்தன. தான்

செய்தது தவறு என்று அவளுக்கு உள்ளூரத் தெரிந்திருந்தது. இருப்பினும் தான் எந்தத் தவறும் செய்யாதது போல் தன்னைத் தானே ஏமாற்றிக் கொண்டாள் மது. 'நான் என்ன செய்து விட்டேன்? டென்னிஸ்தானே ஆடினேன்? எத்தனை பெண்கள் ஆண்களுடன் டென்னிஸ் ஆடுகிறார்கள்?' என்று உள்ளூரக் கேள்விகளை எழுப்பிக் கொண்டாள்.

தாய் கொடுத்த அறைகள் மோஹனின் இரு விரல்கள் கிள்ளிக் கன்னத்தில் ஏற்படுத்திய பொட்டளவு சிவப்பை மறைத்து விட்டன. அந்த அறைகளில் கன்னம் பூராவுமே சிவந்து விட்டபடியால் பொட்டுத் தெரியவில்லை. ஆகவே புத்தகங்கள் பிடிக்காத கை, கன்னங்களை மாறி மாறித் தடவ, இதயம் பயத்தால் துடிக்க, தன் அறைக்குச் சென்ற மது புத்தகங்களை மேஜைமீது போட்டுவிட்டுப் பக்கத்திலிருந்த ஸ்பிரிங் கட்டிலில் தொப்பென விழுந்தாள். ஸ்பிரிங் கட்டில் இருமுறை எழுந்து தாழ்ந்தது.

மது குப்புறப் படுத்துக் கண்களை இரு கைகளாலும் மூடிக்கொண்டிருந்தாள். அழுகை எழுந்தது. கண்களில் நீர் பெருகி மெத்தையை மறைத்தது. தாய் வந்து சாப்பிடக் கூப்பிட்டாலும் போவதில்லை என்ற விம்மும் அதனூடே எழுந்தது. குலுங்கிக் குலுங்கி அழுதாள் மது.

இரவு பத்தரை மணிக்கு வீட்டுக்கு வந்த சங்கர் வாயிற் கதவு திறந்திருப்பதைப் பார்த்து, என்ன விசேஷமோ என்று பயந்து உள்ளே நுழைந்தவன், முன் ஹாலின் தரையில் ஜெயம் படுத்திருப்பதைக் கண்டான். பிறகு உள்ளே சென்று மதுவின் அறையில் எட்டிப் பார்த்தான். மது அவள் தலையைத் தலையணையில் புரட்டிக் கொண்டிருந்ததையும் கவனித்தான். போட்ட ஜிப்பாவைக் கழற்றாமலே அவளருகில் சென்று, கட்டிலில் உட்கார்ந்து, "மது... மது..." என்று அவள் முதுகைத் தட்டினான்.



மது தலையைத் தூக்கவில்லை. தகப்பனைக் கண்டதும் குலுங்கிக் குலுங்கி அழ ஆரம்பித்தாள். "ஏம்மா! ஏன் அழறே?" என்று வினவினான் சங்கர்.

"ஒண்ணுமில்லே." திரும்பவும் அதிகமாக அழ ஆரம்பித்தாள் மது.

அவளை அதற்குமேல் சங்கர் எதும் கேட்கவில்லை. வீட்டில் ஏதோ தகராறு நடந்திருக்கிறதென்பதை மட்டும் புரிந்து கொண்டான். ஆகவே அவளைத் தேற்றி, முதுகைத் தடவிக் கொடுத்துவிட்டு, மீண்டும் கூடத்துக்குச் சென்று தரையில் படுத்திருந்த மனைவியின் எதிரில் ஒரு விநாடி நின்றான். அவள் இருந்த நிலை, படுத்திருந்த வகை, அவனுக்கு ஏதோ எச்சரிக்கையை அளித்திருக்க வேண்டும். ஆகவே அதட்டிக் கூப்பிட வந்தவன், திடீரெனக் குரலை மாற்றிக் கொண்டு, "ஜெயம், ஜெயம்!" என்று இருமுறை சாதாரணமாகக் கூப்பிட்டான்.

கணவன் குரல் கேட்டதும் வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்திருந்த ஜெயம், அவனை ஒருமுறை ஏறெடுத்து நோக்கினாள். பிறகு, "இதோ தட்டு வைக்கிறேன். நீங்கள் கை கால் கழுவிக் கொண்டு வாருங்கள்," என்று கூறிச் சமையற் கட்டை நோக்கி திரும்பினாள்.

"வேண்டாம். எனக்குப் பசியில்லை." என்றான் சங்கர்.

இந்தப் பதில் அவளுக்குச் சில வருடங்களாகவே சர்வ சகஜமாகிவிட்டது. ஆகவே உள்ளே சீர்ப்படுத்தக் கிளம்பினாள்.

"எங்கு போகிறாய்?" என்ற சங்கரின் கேள்வி அவளைத் திரும்ப வைத்தது.

'சமையலறையைச் சரிப்படுத்த வேண்டாமா?' என்று அவள் கேட்டாள்.

"நீ சாப்பிட்டு விட்டாயா ?"

"இல்லை."

"ஏன் ?"

"எனக்கும் பசிக்கவில்லை."

"குழந்தை ?"

"அவனுக்கு இன்று சாப்பாடு வேண்டாம் போலிருக்கிறது."

"போலிருக்கிறதா ?"

"ஆமாம்,"

"உனக்கு எப்படித் தெரியும் அது ?"

"அவன் வந்து சாப்பாடு போடும்படி கேட்காததிலிருந்து."

சங்கர் சில விநாடிகள் மௌனமாக நின்றான். பிறகு கேட்டான், "என்ன நடந்தது ? குழந்தை ஏன் அழுது கொண்டு படுத்திருக்கிறான் ? என்று

"அவனையே கேட்பதுதானே ?" என்றாள் ஜெயம் சலிப்புடன்.

"நீதான் சொல்லேன் !" என்று கேட்டான் சங்கர்,

ஜெயம் அவனை ஏறெடுத்துப் பார்த்தாள். "நமக்கிருப்பது ஒரே பெண்..." என்றாள், விஷயத்தை பேச நா எழாததால்.

"அது தெரியும் எனக்கு !" என்றான் சங்கர்.

"வேறு விஷயங்களும் உங்களுக்குத் தெரியும்." ஜெயத்தின் குரலில் சிறிது கடுமை தட்டியது.



"என்ன டென்னிஸ் ஆடுவது பெண்களுடன் அல்ல ; அந்த அட்வகேட் வீட்டுப் பையனுடன்தான் ஆடுகிறாளென்பதும் தெரியும் உங்களுக்கு."

"ஜெயம் !"

"என்னை அதட்டிப் பயனில்லை. உங்கள் மனச்சாட்சியைத் தொட்டுக் கொள்ளுங்கள்."

சங்கர் சில விநாடிகள் அவளை உற்றுப் பார்த்தான். பிறகு சொன்னான், "மோகனுடன் பெண் டென்னிஸ் ஆடுவதால் தவறில்லை," என்று.

ஜெயத்தின் விழிகள் கோபத்தைக் கக்கின. "உங்களுக்குச் சித்தசுவாதீனமிருக்கிறதா ?"

"இருக்கிறது. அதனால்தான் இன்று அதைப் பேசி முடித்தேன்," என்றான் சங்கர்.

"எதை ?" என்று ஜெயம் கேட்டாள்.

"சங்கர் சொன்ன பதில் அவளைப் பிரமிக்க வைத்ததா ? திகைக்க வைத்ததா ? அவன் சொன்ன செய்தியின் விளைவாக அவள் இதயத்தில் விவரிக்க இயலாத உணர்ச்சிகள் மோதின.

"அப்படியா !" என்ற அவள் கேள்வியில், லேசாக மகிழ்ச்சியும் கலந்திருந்தது.

ஒரு விநாடி ஜெயத்தின் புருவங்கள் அவள் அழகிய நெற்றியின் மேல்புறத்தை நோக்கி எழுந்தது.

"யாரிடம் பேசி முடித்தீர்கள் ?" என்று சந்தேகத்துடன் கேட்டாள் ஜெயம்.

"யாரிடம் பேசி முடிப்பேன் ? அட்வகேட் சுப்ரமண்யத்திடம்தான். மதுவும் மோகனும் சேர்ந்து பழகுவதை நான் மட்டும் கவனிக்கவில்லையா ? இல்லை, பெண்ணின்

கல்யாண விஷயத்தில் தகப்பனுக்கு மட்டும் அக்கறை கிடையாதா ?" என்று வினவினான் சங்கர். "இப்பொழுது உனக்குத் திருப்தியாகி விட்டதல்லவா ?"

"நீங்களும் அவனும் நல்லபடியிருந்தால் எனக்குத் திருப்திக்குக் குறைச்சலேது ? ஏதாவது தாறுமாறாக நடக்காமலிருந்தால் சரிதான்," என்று ஜெயம் அப்பொழுதும் சொன்னாள்.

"என்ன தாறுமாறு நடந்துவிடும் ?"

சங்கர் அங்கிருந்த சோபாவில் உட்கார்ந்து கொண்டான். அவன் காலடியில் ஜெயமும் உட்கார்ந்து கொண்டாள். அவன் முழந்தாள்மீது அவள் கையொன்று கிடந்தது. அந்த நிலையில் அவள் சொன்னாள். "இதோ பாருங்கள் !'பஞ்சையும் நெருப்பையும் பக்கத்தில் வைத்துப் பற்றிக் கொள்ளாதே என்றால் பற்றாமல் இருக்காது. ஆகையால், பெண்ணைக் கட்டுப்பாடு செய்யுங்கள். கல்யாணம் ஆகட்டும் அப்புறம் அவள் கணவனுடன் ஊரெல்லாம் திரியட்டும். குறுக்கே நான் வரவில்லை" என்று. அத்துடன் "சரி நிச்சயதார்த்தம் எப்போது ?" என்று வினவினாள்.

சங்கர் சற்று மென்று விழுங்கினான்; "அதையும் கேட்டேன்..." என்று இழுத்தான்.

"அட்வகேட் என்ன சொன்னார் ?" என்று வினவினாள் ஜெயம் சந்தேகத்துடன்.

"நான் கேட்டதற்கு நிச்சயதார்த்தம் என்ற சம்பிரதாயம் எதற்கு ? என் வார்த்தை போதாதா ? கண்டிப்பாய் மதுதான் எங்கள் வீட்டு நாட்டுப்பெண். நான் வேண்டாமென்றாலும் மோகன் விடுவானா ?" என்றார் அட்வகேட்.

ஜெயம் சில விநாடிகள் மௌனமாயிருந்தாள். "நிச்சயதார்த்தம் செய்து கொள்ளட்டும். அல்லது அந்தப்பையன் பெண்ணுடன் பழகுவதை நிறுத்திக் கொள்ளட்டும்." என்றாள் முடிவில் திட்டமாக.



மறுநாள் மாலை, சங்கருடன் அட்வகேட் பரம நடபுடனாக அவன் வீட்டுக்கு வந்து ஹால் சோபாவில் உட்கார்ந்து கொண்டார். காப்பியைக் கதவு மறைவிலிருந்து கொண்டு கணவன் மூலம் அனுப்பி வைத்த ஜெயத்தைப் பாராமலேயே, "சம்பந்தியம்மா என் மீது சந்தேகப்படுவதாகத் தெரிகிறது. அட்வகேட் சுப்ரமண்யம் இதுவரை வாக்குத் தவறியதில்லை," என்று துவங்கினார் விஷயத்தை. வெகு சுலபத்தில் தமது சாமர்த்தியத்தால் ஜெயத்தைத் தமது கட்சிக்குக் கொண்டு வந்து விடலாமென்று பார்த்தார். ஆனால் சங்கர் குடும்பக் கப்பலின் அந்த நங்கூரம் பலமாக ஊன்றிக் கொண்டிருந்தது.

சிலக்கொழுந்துவிடமும் தணிகாசலத்திடமும் தவிர வேறு யாருடனும் அன்றுவரை பேசியறியாத ஜெயம், கதவு மறைவிலிருந்து மெல்ல அட்வகேட்டின் காது கேட்கும் படியாகச் சொன்னாள். "தங்கள் வாக்கைப் பற்றிச் சந்தேகமில்லை. இருப்பினும் நமது சம்பிரதாயமிருக்கிறது" என்று.

"சம்பிரதாயத்தை நான் மாற்றச் சொல்லவில்லையே; பெண்ணுக்கு இன்னும் படிப்பு முடியவில்லை. இரண்டு வருஷம் இருக்கிறது. அதற்குள் என்ன அவசரம் நிச்சயதார்த்தத்துக்கு என்று பார்த்தேன்," என்றார் அட்வகேட்.

"அப்படியல்ல அது..." என்றாள் ஜெயம் மெதுவாக.

"வேறு எப்படி ?"

"பிள்ளைக்குப் பெண் பிடித்துவிட்டால் முதலில் நிச்சயதார்த்தத்தையும், பிறகு திருமணத்தையும் முடித்து விடுவதுதான் நல்லது. சுபஸ்ய சீக்கிரம் என்று பெரியவர்கள் சொல்லுவார்கள்."

"இதற்குள் திருமணமானால் படிப்பு ?"

"பிள்ளைதான் பாஸ் செய்துவிட்டதே. இவனுக் கென்ன படிப்பு? பிள்ளை இஷ்டப்பட்டால் படிக்கிறான். இல்லை, நிறுத்திவிடுகிறான். முதலில் அவன் உங்கள் வீட்டுப் பெண்ணாகட்டும். அப்புறம் உங்கள் பாடு, அவன் பாடு." இந்தப் பதில் மிக உறுதியாயிருந்தது.

"சரி, அப்படித்தான் செய்து விடுவோம்," என்று அட்வகேட், "எப்படியும் இது சூன்ய மாதம், இதில் எதும் செய்வதற்கில்லை. அடுத்த மாதம் உங்களிஷ்டப்படி நிச்சயதார்த்தம் செய்து விடுவோம்," என்று கூறிச் சென்றார்.

அட்வகேட் சென்றதும், சங்கர் நிம்மதிப் பெருமூச்சு விட்டான். "இப்பொழுது என்ன சொல்கிறாய்?" என்று வெற்றிக் குறியுடன் கேட்கவும் செய்தான்.

ஜெயத்தின் முகத்தில் சாந்தியில்லை. "எல்லாம் சரியாக நடந்தால் சரிதான். எதற்கும் முருகன் இருக்கிறான்," என்று கூறினாள் அவள்.

அட்வகேட் வந்து சென்றதும், சங்கர் தான் சாந்திப் பெருமூச்சு விட்டானே யொழிய, அட்வகேட் மனத்தில் அத்தனை சாந்தியில்லை. வீடு சென்றபின் சங்கர் பார்த்த வெற்றிப் பார்வையை அவர் பார்க்க முடியவில்லை. அவர் மனைவியிடம் மெள்ள, மெள்ள விஷயத்தை அவிழ்த்ததும் பெரிய வைர பேஸரியைத் தாங்கி மிகவும் தடிப்பாயிருந்த அட்வகேட் மனைவியின் மூக்கு, கோபத்தால் சயம் பூசுபவன் துருத்தி போல ஒருமுறை உப்பித் தாழ்ந்தது. "அந்தப் பாட்டுக்காரன் பெண்ணையா நம் மோகனுக்குப் பண்ணப் போகிறீர்கள்? வேறு பெண் அகப்பட வில்லை? உங்களுக்கு?" என்று சீறினாள் அவர் மனைவி.

"ஏன், அந்தப் பெண்ணுக்கு என்ன?" என்று கேட்டார் அட்வகேட்.

"சம்பந்தி யார்னு கேட்டால் என்ன சொல்வீர்கள்?"



"பெரிய கலைஞர். கவி. அவர் பெயரைச் சொன்னால் என்ன?"

"பேப்பரிலே போடறதுக்குச் சௌகரியமாயிருக்கும். நம் பந்துக்கள் நாலு பேர் கிட்டத் தனியாகக் கேட்டுப் பாருங்கள்."

பேப்பரில் வரும் முன்னேற்ற வியாபாரங்களுக்கும் தனி வாழ்க்கைக்கும் ஏகப்பட்ட வித்தியாசமுண்டு என்பதை அட்வகேட் உணர்ந்தேயிருந்தார். ஆகவே விஷயத்திற்கு மெள்ள வந்து. "ஏண்டி, உன் பையன் பாரிஸுக்குப் போகணுமா இல்லையா?" என்று கேட்டார்.

"போகணும்."

"ஏரோப்ளேன்லே வெறுமே விடமாட்டான். இங்கிலாந்துக்கும் அமெரிக்காவுக்கும் போனால் ஹோட்டல் செலவே நம்மை ஓட்டாண்டியாக்கிவிடும், தெரியுமா?"

"அதற்குக் கவி என்ன பண்ணுவாராம்?"

"கவி கணக்கிலே சொன்னையா இரண்டு லட்ச ரூபாய் இருக்கு."

"அப்படியா!" அட்வகேட் மனைவி வாயைப் பிளந்தாள்.

"ஆமாம். தவிர, கவிக்கு கணிசமா ஒரே பொண்ணு," என்றும் சுட்டிக்காட்டினார். அட்வகேட் மனைவிக்குச் சிறிது சந்தேகம் இருக்கவே, "இதை யார் சொன்னது உங்களுக்கு?" என்று வினவினாள்.

"பூங்காவனம்," என்றார் அட்வகேட்.

"புரோக்கரா?" அட்வகேட் மனைவியின் குரலில் சந்தேகம் பூர்ணமாக ஒலித்தது.

"ஆமாம், புரோக்கர்தான்; இருப்பினும் அவனை நான் நம்பவில்லை. நானே பாங்கியை விசாரித்தேன். அதுமட்டுமல்ல? கவியும் அந்த ராவ்சாகிபும் சேர்ந்து துவக்கியிருக்கும் ஒரு கம்பெனி தாஸ்தாவேஜையும் பார்த்தேன்," என்று அட்வகேட் விளக்கினார்.

"கம்பெனி வேறு ஆரம்பித்திருக்கிறாரா கவி!"

"ஆம். இந்தக் காலத்தில் யார் யார் அவரவர் வேலையோடு நிற்கிறார்கள்? 'ஸைட்' தொழில் ஒன்று வைத்துக் கொள்கிறார்கள்."

"நீங்களும் அப்படி யொன்று வைத்துக்கொண்டால் எவ்வளவு நன்றாயிருக்கும்?" என்றாள் அட்வகேட் மனைவி.

அட்வகேட் சுப்ரமண்யம், "ஏன் இப்பொழுதுள்ள தொழிலுக்கு என்ன?" என்று வினவினார்.

"ஒன்றுமில்லை. பையனை ஃபாரினுக்கு அனுப்ப எந்தப் பணக்காரன் பெண்ணைப் பிடிக்கலாமென்று பார்க்க வேண்டியிருக்கிறது," என்றாள் அட்வகேட்டின் மனைவி.

இதற்குமேல் மனைவியிடம் பேசினால் என்ன ஆகுமென்பதை அறிந்திருந்ததால் அட்வகேட் வாயை மூடிக்கொண்டார். அவர் மனைவியும் சங்கரின் பணத்தை எண்ணி மென்மைச் சம்பந்தத்துக்குச் சம்மதித்தாள். ஆகவே மோகன் மது வாழ்வு அடுத்த ஒருமாதம் மிக இன்பமாகப் போயிற்று. அதற்கு அடுத்த மாதத்தில் அவர்கள் வசந்த வாழ்க்கையில் குறுக்கே ஒரு புயல் மெள்ளத் துவங்கியது.

அந்தப் புயலைத் தாங்கி வந்தார் புரோக்கர் பூங்காவனம். நீண்ட நேரம் ஒரு நாள், பூங்காவனமும் கவியும் தனி அறையில் பேசிக் கொண்டிருந்தார்கள். மறுநாள் காலையில் பூங்காவனம் வெகு வேகமாக வந்தார். அவரைத் தாங்கிக் கவியின் கார் மட்டும் திரும்பி வந்தது. அதில் கவி ஏறியதும் கார் மீண்டும் பறந்தது.

# 34. பரிவும் சரிவும்

கவி சங்கரின் கார் வேகமாகத் தான் பறந்ததென்றாலும், உள்ளே உட்கார்ந்திருந்த கவியின் மனத்தைவிட அது வேகமாய்ப் பறந்ததாகச் சொல்ல முடியாது. அவன் மனத்தில் சொல்லவொண்ணாத திகில் சூழ்ந்து கிடந்ததன்றி, ஏதேதோ பல இடங்களை நோக்கி வெகு துரிதமாக அவன் நினைப்புத் தாவிக் கொண்டிருந்தது. ராவ்சாகிபும் தானும் கலையழகியும் சேர்ந்து ஆரம்பித்த சினிமாக் கம்பெனியும் சரி, வேறு ஒரு சில்க் கம்பெனியும் சரி, ஒழுங்காக வேலை செய்யாததால், தான் பாடிப் பாடிச் சம்பாதித்த பணம் படிப்படியாகக் குறையத் துவங்கிவிட்டதையும், சென்ற இரண்டு வருஷங்களில் பாங்கியிலிருந்த டிபாஸிட்டுக்கு மேல் தனது வெளிக் கடன் ஏறி விட்டதையும் எண்ணிப் பார்த்தான் சங்கர். இதற்கெல்லாம் காரணம், ராவ்சாகிப்பானாலும் அவர் அதிகமாகத் தங்கள் இருவர் பெயரையும் வெளியில் அடிபடாமல் மறைத்து வைத்ததும்கூட விந்தையாய்த் தெரிந்தது அவன் சிந்தைக்கு. ஆனால் ராவ்சாகிப் அதற்குக் கூறிய காரணம் மட்டும் சரியாகவே இருந்தது. "உங்கள் பெயரும் என் பெயரும் வெளியில் அடிப்படலாமா? அப்புறம் இல்லாத புரளியெல்லாம் வெளியில் கிளம்பும் கவிஞரே." என்று எச்சரித்திருந்தார் ராவ்சாகிப்.

ஆகவே சங்கர் அந்தக் கம்பெனிக்குப் பணம் கொடுத்துக் கொண்டிருந்தானே யொழிய, உரிமைப் பத்திரங்களெல்லாம் கலையழகியின் பெயரிலேயே இருந்தன. அந்தப் பத்திரங்களின் காரணமாகவோ, அல்லது பூங்காவனத்தின் இடையறாத முயற்சியின் காரணமாகவோ, கலையழகி அவனுடன் சென்ற இரண்டு வருடங்களில் நெருங்கிப் பழகிக் கொண்டிருந்தாள், ஆனால் அந்தப் பழக்கம், சங்கருக்கு எத்தனை பாதகத்தை விளைவித்ததானாலும் அவன் நடத்தைக்கு மட்டும் எந்தப்

பாதகத்தையும் விளைவிக்கவில்லை. எத்தனையோ இரவுகளில் அவன் கலையழகியின் வீட்டில் ராவ்சாகிப்புடன் நீண்ட நேரம் கழித்திருக்கிறான். சில வேளைகளில், ராவ்சாகிப் ஜாடையாக முன்னால் தமது பங்களாவுக்கு நழுவிக்கூட இருக்கிறார். அவர் நழுவிய பின் கலையழகி பலவித உபசாரங்களில் ஈடுபட்டும் இருக்கிறாள். ஆனால் அந்த உபசாரம் எதுவும் சங்கரை இம்மியளவும் தொடவில்லை.

ராவ்சாகிப் அவனைப் பலவிதமாகப் பல காரியங்களில் சிக்க வைத்திருந்தார். முதலில் சினிமாக் கம்பெனிக்கு அவனைப் பணம் போடச் சொன்ன போதே, "எதற்கு எனக்கு இதெல்லாம்?" என்று சங்கர் ஆட்சேபித்தான். "பணம் ஐயா பணம்." என்று ஊக்கினார் ராவ்சாகிப்.

"எனக்குத் தான் போதிய பணம் இருக்கிறதே," என்று சொல்லிப் பார்த்தான் சங்கர்.

"பணத்தைப் பாங்கியில் ஊறுகாய் போட்டு வைப்பதா? அது ஒன்றுக்குப் பத்தானால் உமது மகள் வேண்டாமென்பாளா? உமது மனைவிக்குத் தான் கசக்குமா?" என்றார் ராவ்சாகிப்.

சரியென்று அந்தக் கம்பெனியில் பணத்தைப் போட்டான் சங்கர். முழுவதும் பாங்கியிலிருந்து எடுத்துப் போட்டால் தெரிந்துவிடப் போகிறது என்பதற்காகக் கொஞ்சத் தொகையைக் கடனாகவும் வாங்கிப் போட்டான். இப்படித்தான் சில்க் கம்பெனியிலும் போட்டான். இப்படிப் பல வழிகளில் பணத்தைப் போட வைத்துக் கொண்டிருந்தார் ராவ்சாகிப்.

அவர் போட வைத்தார். இவன் போட்டான், போட்டான். போட்டுக் கொண்டே இருந்தான். பணத்தை மட்டுமல்ல! கையெழுத்தையும் போட்டான், போட்டான், போட்டுக் கொண்டே இருந்தான். இதற்கெல்லாம் முத்தாய்ப்பு வைக்கும் கட்டம், அன்று அவன் காரில் பறந்து கொண்டிருந்த போது வந்திருந்தது.



பின் ஸீட்டில் சாய்ந்தபடி பலவாறு எண்ணிப் பார்த்துக் கொண்டிருந்தபடியால் திடீரெனக் கார் ஓர் இடத்தில் நின்றது கூடத் தெரியவில்லை அவனுக்கு. புரோக்கர் பூங்காவனம் கார்க் கதவைத் திறந்து முகம் பூராவும் மகிழ்ச்சி நிலவ, "ஸார் ஸார்," என்று இரு முறை கூப்பிட்ட பின்பு தான் சங்கருக்குச் சுரணை வந்தது. "அப்படியா! இதோ வந்துவிட்டேன்," என்று சொல்லிக் கொண்டே கீழே இறங்கிய சங்கர், தன் கண்ணெதிரே பெரும் வீட்டைக் கண்டு, சற்று நேரம் நின்றான்.

"இது தான் அவங்க வீடு. உள்ளே வாங்க. எல்லாரும் இருக்காங்க," என்றார் பூங்காவனம் குதூகலத்துடன்.

பூங்காவனம் சங்கரை அழைத்துக் கொண்டு உள்ளே சென்றதும், அங்கு ராவ்சாகிபும் கலையழகியும் அவனுக்கு முன்னாலேயே காத்துக் கொண்டு இருந்தார்கள். ராவ்சாகிப் அன்று பரம டீக்காக சூட் போட்டுக் கொண்டிருந்தார். கலையழகி பாஷன் போட்டிக்குப் போகப் போவதுபோல் அலங்காரம் செய்து கொண்டிருந்தாள். அவர்கள் இருவரும் அமர்ந்திருந்த சோபாவுக்கு நடுவில் பூங்காவனம் சங்கரை உட்காரச் சொல்லித் தான் மட்டும் நின்று கொண்டு, எதிரே நாற்காலியில் உட்கார்ந்திருந்தவரிடம், "இவங்கதான். கவி" என்று அறிமுகப்படுத்திப் புன்முறுவல் செய்தார்.

"எதிரே இருந்தவர் முகத்தில் புன்முறுவல் வரவில்லை. கறுத்துக் குட்டையாக இருந்த அந்த மனிதர், "அப்படியா!" என்று மரியாதையுடன் கேட்டார். அந்த மரியாதையில் பெரும் அழுத்தம் இருந்தது. சங்கர் பதிலுக்குத் தலையை அசைத்தான்.

அடுத்தபடி அவர் பூங்காவனத்தை நோக்கி, "ஏங்க, இவங்ககிட்ட எப்படீங்கறதைச் சொல்லி விட்டீங்களா ?" என்று வினவினார்.

"சொல்லாமலிருப்பேனா ?" என்று கேட்ட பூங்காவனம், பெருமகிழ்ச்சியை முகத்தில் காட்டினார்.

அந்த மனிதர் மேலும் சங்கரை நோக்கி, "உங்க சினிமா பிஸினஸுக்குப் பணம் வேணும்னு பூங்காவனம் சொன்னார். ராவ்சாகிபும் இந்த அம்மாவும் கூடச் சொன்னாங்க. அதனாலேதான் ஒப்புக்கிட்டேன். இப்பல்லாம் இந்த பிஸினஸை நிறுத்திட்டேன். கொடுத்த இடங்களிலே பணம் வர்றதில்லை," என்று தாம் ஏதோ சங்கருக்குத் தாட்சண்யத்துக்காகப் பணம் கொடுப்பது போலச் சொன்னார்.

சங்கர் பூங்காவனத்தையும் ராவ்சாகிபையும் பார்த்தான். அவர்களிருவரும் தலையாட்டவே, தானும் காரணம் புரியாமல் தலையாட்டினான்.

மீண்டும் அந்த மனிதர் கேட்டார், "அப்போ ரிஜிஸ்ட்ரேஷன் இல்லை ?" என்று.

"என்னாங்க, இவ்வளவு பெரிய கலி ரிஜிஸ்ட்ரார் ஆபீஸுக்கு வந்தால் நாளைக்கே பேப்பரிலே வந்துடாதா ?" என்றார் பூங்காவனம், அத்துடன், "சும்மா சொல்லாடரிலே போட்டுக்குங்க. வீடு இன்னைக்கு மதிப்புக்கு இரண்டு லட்சம் போகும். பாங்கியிலே இரண்டு லட்சம் இருக்கு," என்றும் சுட்டிக் காட்டினார்.

"அது மட்டுமா ? நான் கூட இல்லையா ?" என்றார் ராவ்சாகிப்.

அந்த மனிதர் ராவ்சாகிப்பை விழித்துப் பார்த்தார். "உங்க பாக்கியே வர்லீங்களே !" என்றார்.

ராவ்சாகிப் முகம் சுண்டியது. "வரும், வரும்," என்றார்.



"எப்பங்க வரப்போகுது ? வருஷம் ஒண்ணாச்சு," என்றார் அந்த மனிதர். பிறகு மேற்கொண்டு பேசாமல், பூங்காவனத்தை நோக்கி, "பத்திரங்கள் எங்கே ?" என்று வினவினார்.

பூங்காவனம் 'ஸிப்' பையைச் சரேலென்று திறந்து ஒரு நீண்ட கவரை எடுத்து நீட்டவே, அந்த மனிதர் நீண்ட நேரம் அதை ஆராய்ந்துவிட்டு, அதை எடுத்துக் கொண்டு உள்ளறைக்குச் சென்றார். பிறகு ஒரு காகிதம், ஸ்டாம்பு ஆகியவற்றுடன் திரும்பி வந்தார்.

அன்று ஒரு லட்ச ரூபாய்க்குப் புரோ நோட்டு எழுதிக் கையெழுத்துப் போட்டான் சங்கர். ராவ்சாகிப்பும் கலையரசியும் சாட்சிக் கையெழுத்துப் போட்டார்கள். அந்தச் சம்பிரதாயங்கள் முடிந்ததும், அதைத் திருப்பி நாலு தடவை படித்துப் பார்த்த பிறகு, "சரி, நீங்க போங்க," என்றார் அந்த மனிதர்.

பணத்தைக் காலணா கொடுக்காமல் அவர் போகச் சொன்னதைக் கேட்ட சங்கர் ராவ்சாகிப்பைப் பார்த்தான். ராவ்சாகிப், பூங்காவனம் இருவரும் அந்த மனிதரை நோக்கி, "இவர் இந்த மாதிரி பிஸினஸுக்குப் புதுசு," என்று மன்னிப்புக் கேட்டுக் கொண்டு, "சும்மா வாங்க சங்கர். நாளைக்குப் பணம் வரும்," என்று கூறவே, சங்கர் பிரமிப்புடன் வெளியே நடந்தான்.

வெளியில் பூங்காவனம் தைரியம் சொன்னார். "சில விஷயங்களைச் சொல்வதற்கில்லை. ஐயாவுடையதெல்லாம் பிளாக்கிலே இருக்கு. அவரை நம்புவதால் தவறு இல்லை. எங்களுக்கும் அவருக்கும் நீண்ட நாள் டிரான்ஸாக்ஷன்" என்றார்.

"அவர் நம்பிப் பணம் கொடுத்துப் பின்னால் புரோ நோட்டு வாங்கிக் கொள்கிறதுதானே ? நம்பிக்கை நமக்கு மட்டும்தான் இருக்க வேண்டுமா ?" என்று கேட்டான் சங்கர்.

"அதனால் பாதகமில்லை," என்றார் பூங்காவனம்.

"இது பண விஷயம். இன்றிரவு நான் இறந்து விட்டால் ?" என்று சிற்றத்துடன் கேட்டான் சங்கர்.

"நான் பாத்துக்கறேன். பயப்படாதீங்க," என்றார் பூங்காவனம்.

பூங்காவனத்தின் பரிவிலும் தைரியத்திலும் அடிக்கடி இப்படிக் காரியம் நடந்தது. சங்கரின் 'பாக்'கில் எப்பொழுதும் நோட்டுக்கள் கற்றை கற்றையாக இருந் தன. அந்தக் கற்றைகளும், பூங்காவனத்தின் பரிவும் அவன் வாழ்வின் சரிவுக்கு மெள்ள மெள்ள அடிகோலின.

## 35. இறங்கிவந்த இடி

அடுத்த ஆறு மாதங்களில் சங்கர் மிகவும் அமைதி யுடன் மேலுக்குக் காணப்பட்டாலும், உள்ளூர அவனுக்கு வேதனைகள் இருந்து கொண்டிருந்தன. அவனுடைய தோல் பையில் சதா நோட்டுக் கற்றைகள் இருந்தாலும், அவன் எடுத்ததற்கெல்லாம் நூறு ரூபாய் நோட்டையே மாற்றி வந்தாலும், அவன் புத்தியில் மட்டும் ஏதோ யோசனை இருந்து வந்தது. அந்த ஆறு மாதங்களில் பூங்காவனம் காலை, நடுப்பகல், மாலை, இரவு இப்படி சதா சர்வகாலமும் திடீர் திடீரென சங்கர் வீட்டுக்கு வருகை தருவதும், இருவரும் காரில் ஏறிப் பறப்பதும் வழக்கமாகிவிட்டது. பூங்காவனத்தின் தயவால் புது சவர்லே கார் ஒன்றும் சங்கர் வீட்டுக்கு வந்துவிட்டதால், சங்கரின் பெருமைக் கொடி சென்னையில் பல இடங்களில் பலமாகப் பறந்தது. அந்த ஆறு மாதங்களில் கோழையா யிருந்த சங்கரைத் துணிச்சலுள்ளவனாகவும் பூங்காவனம் அடித்துவிட்டார். முன்னர் ஒரு லட்ச ரூபாய்க்குப் புரோநோட்டு எழுதிக் கொடுத்துப் பத்திரங்களையும் அடமானம் வைத்து பணம் வாங்காமல் திரும்ப மறுத்த சங்கர், பூங்காவனத்தின் பயிற்சியால் எந்த இடத்திலும் கையெழுத்துப் போடவும் பணத்தைப் பிறரு வாங்கிக் கொள்ளவும் பழக்கப்பட்டு விட்டான். வட்டிக்காகப் பிசுகி தனது அற்ப புத்தியைக் காட்டாமல் எந்த வட்டி யையும் முகமலர்ச்சியுடன் முன்னதாகக் கொடுக்கும் முற்போக்குள்ள தாராளப் பிரபுவுமானான் சங்கர்.



அவன் தாராளத்தில் கலையழகியின் புது சினிமாக் கம்பெனி மிகப் படாடோபமாக நடந்தது.

அதற்காகத் தியாகராய நகரில் தனி பங்களா வொன்றை, வாடகை ஐநூறு ரூபாய்க்கும், ரசீது நூறு ரூபாய்க்கும் இருக்கும்படியாகப் பூங்காவனம் வெகு சாமர்த்தியமாக அமர்த்திக் கொடுத்தார். அது மட்டு மின்றி, கலையழகி ரால்சாகிப் இவர்களின் வற்புறுத்தலின் பேரிலும், சங்கரின் வேண்டுகோளின் பேரிலும், பூங்கா வனம் அதன் நிர்வாகப் பொறுப்பையும் ஏற்றுக் கொண்டார். பணத்தைக் கொண்டு வரும் பொறுப்பைப் பூங்காவனமும் அதைச் செலவழிக்கும் பொறுப்பைக் கலையழகி, ரால்சாகிப் இவர்களும் ஏற்றுக் கொண்டு, கையெழுத்துப் போடும் ஒரு சிரமத்தைத் தவிர வேறு சிரமத்தைச் சங்கருக்கு வைக்காததால், படப்பிடிப்பு வேலைகள் தங்கு தடையின்றி நடந்தன.

இப்படி நடந்த கம்பெனி வெகு துரிதத்தில் எட்டு மாதங்களுக்குள் வெளிக் கொணர்ந்த திரைச் சித்திரம், கலையழகியின் சிறந்த நடிப்பு, கவி சங்கரின் சிறந்த இசை இத்தனையும் சேர்ந்தும், துரிதத்தில் ஒரு தியேட் டரை விட்டு இன்னொரு தியேட்டருக்கு தாவவே சங்கர் சற்றுத் திகைப்படைந்தான். ஆனால் இதைப்பற்றிக் கவலைப்பட வேண்டாமென்று கலையழகியும், ரால் சாகிபும் தைரியம் சொன்னார்கள். அது மட்டுமல்ல, "இப்படி ஒரு படத்திலேயே மனம் உடைந்தால் எப்படி ? அடுத்த படம் ஜமாய்த்தால் இந்தக் கடனை ஒழித்து, மேலே 120 பர்செண்டும் நமக்கு நிற்கும்," என்று

பூங்காவனம் ஊக்கமூட்டினார். 'நமக்கு' என்று எதற்காகப் பூங்காவனம் சொல்கிறாரென்பது சங்கருக்கு தெரியா விட்டாலும், பூங்காவனத்தின் சாதுரியமில்லா விட்டால் மேற்கொண்டு பணம் கிடைக்காதென்பதை உணர்ந்ததால், சரியென்று தலையாட்டினான்.

"இரண்டாவது புரொடக்ஷனை உடனே அறிவித்து விட வேண்டும். இல்லா விட்டால் பட விநியோகஸ்தர்கள் விழித்துக் கொண்டு விடுவார்கள்," என்று ராவ்சாகிபும் எச்சரிக்கை செய்தார்.

கதையை என்ன சிதைத்தாலும் கவலைப்படாத கதாசிரியர். நடிகை எத்தனை பருமன் வளர்ந்தாலும் கவலைப்படாத காமிராமென், டைரக்டர், பணம் எத்தனை செலவானாலும் கவலைப்படாத ராவ்சாகிப், பூங்காவனம்— இவர்களைக் கொண்ட கம்பெனி கவலையில்லாமலே முன்னேறிக் கொண்டிருந்தது. கவலைப் பட்டவர் ஒருவர் தான். பாட்டுப் பாடிப் பணம் சேர்த்ததையெல்லாம் சினிமாவில் விட்டுக் கடனும் வாங்கிக் கொண்டிருந்த கவி சங்கர்தான். அவன் கவலையை ஒழிக்கவும் ராவ்சாகிபும் கலையழகியும் முயன்றார்கள். "கொஞ்சம் விஸ்கி சாப்பிடுங்க. சுறுசுறுப்பாக இருக்கும். கவலையும் போகும்," என்றாள் கலையழகி ஒரு நாள்.

சங்கர் முடியாதென்று திட்டமாகத் தலையை அசைத்தான். "என்ன சங்கர்! நீங்க சாப்பிடற மருந்திலே ஆல்கஹால் இல்லையா?" என்று வற்புறுத்தினார் ராவ்சாகிப்.

சங்கர் அப்பொழுதும் மசியவில்லை. திடீரென்று நாற்காலியை விட்டு எழுந்திருந்தான். ராவ்சாகிப் அந்தச் சமயத்தில் என்ன காரணத்தாலோ வெளியே சென்றார். கலையழகி அவனைப் பிரமிப்புடன் பார்த்து, "ஏங்க? எங்கே போகிறீங்க?" என்று வினவினாள்.

"வீட்டுக்கு," என்றான் சங்கர்.



"ஏன்?"

"தலையை லேசாகச் சுற்றுகிறது."

"இப்படி வாங்க," என்ற கலையழகி, அவனருகில் வந்து தலைமேல் கையை வைத்தாள். அவன் தலைமேல் அவள் கை வைத்து வெகு நாளானாலும், அன்று தான் உண்மையில் தன் பூதக் கையை வைத்தாள். அவன் தலை சிறிது சுட்டுப் பிறகு வியர்த்தது. அப்படியே அவனை நாற்காலியில் உட்கார வைத்து, நாற்காலியின் பின்பு தான் நின்று தனது மார்பில் அவன் தலையைச் சாய்த்துக் கொண்டாள். ஒரு வினாடி சங்கர் கண்களை மூடிக் கொண்டான். சிறிது ஆறுதலாக இருந்தது. இருப்பினும் திடீரென்று சமாளித்துக் கொண்டு எழுந்திருந்த சங்கர், தளர்ந்த நடையுடன் கம்பெனியின் மாடிப்படிகளில் இறங்கி நடந்து, காரில் ஏறித் தொப்பென்று விழுந்தான். வீடு வந்ததும் உள்ளே போய்க் கட்டிலில் படுத்துக் கொண்டான்.

கணவன் வந்த நிலை, அவன் படுக்கையறைக்குச் சென்ற முறை இவற்றைக் கண்ட ஜெயம் மனம் துடிதுடிக்க அவனைப் பின் தொடர்ந்தாள். அவன் படுக்கையில் விழுந்ததும் அறைக் கதவைச் சாத்திக்கொண்டு கட்டிலுக்குச் சென்று தானும் உட்கார்ந்து சங்கரின் நெற்றியில் கையை வைத்துப் பார்த்தாள். நெற்றி ஜில்லென்று இருக்கவே உள்ளே போய்க் கொஞ்சம் ஹார்லிக்ஸ் கரைத்துக்கொண்டு வந்து, அவன் தலையை எடுத்துத் தன் மடியில் வைத்துக் கொண்டு மெள்ள மெள்ளப் புகட்டினாள்.

சங்கர் இரண்டு வாய் ஹார்லிக்ஸைக் குடித்ததும் கண்களைத் திறந்து பார்த்தான். அவன் கண்களைப் பரிவும் பாசமும் சந்தித்தன. அவள் மடி அவன் தலைக்குப் பெரும் ஆதரவாய் இருந்தது. கால வெள்ளத்தில் கவலையின் சிக்கலில் சற்றே இளைத்த மடிதான் அது.

சந்த இணைத்த மடியானாலும் உறுதி தளராத மடியாத லால் அதில் பெரு இன்பம், பய நிவர்த்தி இரண்டும் கிடைத்தன சங்கருக்கு. அவன் ஜோர்லிக்ளைக் கழுத்து விட்டுக் குப்புறத் திரும்பி அவள் மடியில் முகத்தைப் புதைத்துக் கொண்டு குழந்தையைப் போல் கிடந்தான்.

ஜெயத்தின் கற்புக் கரங்களிலொன்று அவன் முதுகைத் தடவிக் கொடுத்தது இன்னொன்று தலையைக் கோதி விட்டது. நாற்பத்திரண்டு வயதே ஆன அவன் தலையில் நாலைந்து நரை மயிர்கள் இருந்ததைக் கவனித்த அவள் இதயத்தில் ரத்தம் வடிந்தது. கவலையின்றிக் கட்டுத் தேகத்துடன் காளைபோல் மாலை வேளைகளில் சிறு வயதில் தன்னெதிரில் நின்ற கணவன், இப்படிச் சிறிது நரையோடி உடல் வலுக்குன்றி மடியில் குழந்தை போல் படுத்திருந்த காட்சியைச் சகிக்க முடியவில்லை அவளால், கண்களை லேசாகத் துடைத்துக் கொண்டாள் ஒரு முறை. அத்தனை துன்பத்திலும் ஓர் இன்பம் இருந்தது அந்த குலமகளுக்கு. தன் கணவன் இதயம் அத்தனை சமூகப் பேரலைகளிலும் தன்னை விட்டு நீங்கி ஓடவில்லையென்ற எண்ணம் பேரின்பத்தைத் தந்தது அவளுக்கு. அந்த ஓர் எண்ணம் அவளுக்கு இணையில்லாத தைரியத்தை அளித்த தால், எந்தக் கஷ்டம் வந்தாலும் தாங்கும் சக்தியை அளித்தது அவளுக்கு. பின்னால் வந்த பேரிடிகளை அவளால் தாங்க முடிந்தது என்றால், அதற்கு முக்கிய காரணம் அன்றிரவில் கணவன் அவள் மடியில் அனாதை யைப்போல் கிடந்ததுதான். சிறுவயல் ஒட்டு வீட்டின் காமிரா அறையின் சிங்காரக் காட்சிகளை எப்படி அவள் மறக்கவில்லையோ, அந்தப் பெரும் பங்களாவின் படாடோப அறையில் ஸ்பிரிங் கட்டிலில் கணவன் தன்னிடம் கிடந்த அனுதாபக் காட்சியையும் அவள் மறக்க வில்லை. அந்த நினைப்பு அவளுக்குப் பெரும் உறுதியைக் கொடுத்தது. அந்த உறுதியின் விளைவாக, மறு நாள் அவளே பெரிய டாக்டர் ஒருவரை வரவழைத்து, சங்கரின் உடல் நிலையைப் பரிசோதிக்கச் செய்தாள்.



டாக்டர் நீண்ட நேரம் பரிசோதித்தார் பிறகு முகமலர்ச்சியுடன் தலையை நிமிர்த்தினார். ''கவலைப் படத் தற்சமயம் ஏதுமில்லை,'' என்றும் கூறினார்.

"மயக்கத்தின் காரணம் ?" என்று கேட்டாள் ஜெயம்.

"வாஸமோட்டார் அன்பாலன்ஸ்," என்ற ஆங்கில வார்த்தையைச் சொன்ன டாக்டர், "வேறொன்று மில்லை நரம்புகளின் அதிர்ச்சி" என்று தமிழிலும் கூறினார்.

"மருந்து ஏதாவது..." என்று கேட்டாள் ஜெயம்.

"எதுவும் வேண்டாம், பேசாமல் வீட்டில் நாலு நாள் படுத்துக் கொண்டிருக்கட்டும். அதிகமாக எதற்கும் கவலைப் படாதிருந்தால் நல்லது," என்றும் கூறிவிட்டுச் சென்றார் டாக்டர்.

ஜெயம் சரியென்று தலையாட்டினாள். மதுவையும் அவன் அடுத்த இரண்டு நாட்கள் எங்கும் அனுப்பவில்லை. யாரையும் சங்கரைப் பார்க்கவும் அனுமதிக்கவில்லை. ஆனால், மூன்றாவது நாள் பூங்காவனத்தை மட்டும் அவள் தடை செய்ய முடியவில்லை. "அம்மா, ஒரு நிமிஷம் பேசி விட்டுப் போய் விடுகிறேன், தலைபோகிற காரியம்," என்று கெஞ்சினார் பூங்காவனம்.

வேறு வழியில்லாமல் அனுமதித்தாள் ஜெயம்.

## 36. எதிர்பார்த்த முடிவு

**ஜெ**யத்துடன் அதிகமாக மன்றாடி நுழைந்த பூங்கா வனத்துக்கு ஒரு நாற்காலியை எடுத்துப் போட்டு உட்காரச் செய்த ஜெயம், கட்டிலுக்கு அருகில் சங்கர் தலை மாட்டில் ஒருபுறமாக நின்று கொண்டாள். அவள் தங்களிருவரையும் தனித்து விட்டு வெளியே செல்

வாதனைக் கண்ட பூங்காவனம், ஒரு விநாடி பிரள பிரள விழித்தார். பிறகு சங்கரைப் பார்த்தார். சங்கர் முகத்தில் ஏதோ சிந்தனைக்கான அறிகுறிகள் சில விநாடிகள் தெரிந்தன. பிறகு அவை மறைந்து விட்டன. "என்ன விஷயம் மிஸ்டர் பூங்காவனம் ? சொல்லுங்கள்," என்றான்.

பூங்காவனம் ஏதோ மென்று விழுங்கி விட்டு, "நம்ம பிஸினஸ்லே கொஞ்சம் ட்ரபிள். அதைச் சொல்லி அம்மாவைக் கஷ்டப்படுத்தணுமா ?" என்று, ஜெயம் அங்கிருக்கத் தேவையில்லாததைக் குறிப்பாக உணர்த்திப் பார்த்தார்.

சங்கர் மீண்டும் சிந்தனையில் ஆழ்ந்தான். ஜெயத்தின் இடது கை அவன் நெற்றியை லேசாகத் தொட்டது. அது அளித்த உறுதியினாலோ என்னவோ சங்கர் சொன்னான், "எதுவாயிருந்தாலும் அவளுக்குத் தெரியட்டும். சொல்லுங்கள்," என்று.

பூங்காவனம் நாற்காலியில் சிறிது அசைந்து ஜெயத்தை நோக்கி, "அம்மா ! இப்போ சொல்லப் போகிறதைப் பற்றித் துளிக் கூடக் கவலைப்படாதிங்க. இந்தப் பூங்காவனம் இதைவிடப் பெரிய விஷயங்களைச் சமாளித்திருக்கிறான்," என்று கூறி விட்டு, சங்கரைப் பார்த்து, "அந்த ராம் இருக்கான் இல்லையா ராம் ?" என்றான்.

ஜெயத்தின் கூரிய அறிவுக்கு, 'ராம்' என்பது முழுப் பெயரில்லையென்பது தெரிந்திருந்தாலும், பெயரைப் பற்றிக் கவலைப்படாமல் விஷயத்தைப் பற்றியே கவலை கொண்டாள். சங்கர் இரண்டைப் பற்றியும் கவலைப் படாமல், "ஆமாம். என்ன ? பணம் கேட்கிறானா ?" என்றான் சர்வ சாதாரணமாக.

"பணம் கேட்டா நான் உங்ககிட்டேயா வருவேன் ! நானே பழைய இடத்திலே சொல்லி அட்ஜஸ்ட் பண்ணி விட மாட்டேனா ? அயோக்கியப் பயல் நோட்டீஸிலே



கொடுத்திருக்கான் ?" என்று, பணம் கொடுத்தவன் ஏதோ பெரிய அக்கிரமம் செய்து விட்ட மாதிரிக் கடிந்து கொண்டார் பூங்காவனம்.

"நாம் எத்தனை கொடுக்க வேண்டும் அவனுக்கு ?" சங்கர் கேள்வியில் மிகுந்த மரியாதை இருந்தது.

"ஒண்ணரை ரூபாய்ங்க," பூங்காவனத்தின் குரலில் கசப்பு இருந்தது.

"ஒண்ணரை ரூபாயா !" சங்கர் கேள்வியில் பிரமிப்பு ஒலித்தது.

"ஆமாங்க."

"நாம்ப வாங்கினது அரை ரூபாய் தானே ?"

"ஆமாங்க."

"அது எப்படி ஒண்ணரையாச்சு ?"

"இந்தக் காலத்து வட்டிக்கு அரை ஒண்ணரையாறது ஒரு பிரமாதங்களா ? காலந்தான் மோசமா போச்சுங்களே !" என்று காலத்தைக் கடிந்து கொண்டார், பூங்காவனம்

"சரி, நோட்டீஸைக் கொடுங்கள்," என்ற சங்கர், அவர் ஜிப்பைத் திறந்து தோற்பையிலிருந்து எடுத்துக் கொடுத்த நோட்டீஸைப் படித்துப் பார்த்தான். அவன் முகத்தில் பெருவேதனை தெரிந்தது. சில விநாடிகள் கண்ணை மூடிக் கொண்டு படுத்திருந்தான். பிறகு நோட்டீஸைப் பூங்காவனத்திடம் திருப்பிக் கொடுத்தான். "இதை உம்மால் சமாளிக்க முடியுமா ?" என்றும் கேட்டான் வேதனையை உள்ளடக்கி.

"பூங்காவனம் முயற்சியில் தோல்வி அடைந்தா லொழிய இங்கு வரமாட்டானுங்க," என்றார் பூங்காவனம்.

"கலையழகியைத் தற்காலிமாக அட்ஜஸ்ட் பண்ணச் சொல்லிக் கேட்கிறது தானே," என்று கேட்டான் சங்கர்.

"அவங்க கையை விரிச்சுட்டாங்க."

"ஏால்சாகிப் ?"

"அந்த ஆள் சுத்த பிசாத்துங்க. அவர் வீட்டுச் செல வுக்கே நான் இப்பத்தான் இரண்டு சின்ன ரூபாய் அட்ஜஸ்ட் பண்ணிக் கொடுத்தேன்."

சங்கர் மெள்ள நகைத்தான். அந்த நகைப்பில் ஆயிரம் அர்த்தங்கள் இருந்தன. "சரி, நோட்டீஸை வச்சிட்டுப் போங்க," என்றான் பூங்காவனத்தை நோக்கி.

"அப்ப இந்த விஷயம்..." என்று துவங்கினார் பூங்கா வனம்.

"நான் பார்த்துக்கறேன்," என்ற சங்கர், போய் வாருங்கள், என்பதற்கறிகுறியாகக் கையைக் கூப்பினான்.

பூங்காவனத்தின் முகத்தில் பெரும் பிரமிப்புத் தெரிந்தது. அவர் நாற்காலியை விட்டு எழுந்திருந்து ஒரு கேள்வியை வீசினார் கடுங்கோபத்துடன். "அந்த நோட்டீஸை அனுப்பியது யார் தெரியுமா ?" என்று.

"தெரியும். அட்வகேட் சுப்ரமண்யம், எனக்குச் சம்பந்தியாகப் போகிறவர்."

"அதன் விளைவுகளை யோசித்தீர்களா ? கடைசியில் பூங்காவனம் கெடுத்து விட்டான் என்ற பெயர் வரக் கூடாது." என்றார் பூங்காவனம் நின்றவண்ணம் கடுங்குரலில்.

"நீங்கள் கெடுத்து உலகம் கெடுவதானால் உலகம் என்றோ அழிந்து போயிருக்கும். போய் வாருங்கள் பூங்காவனம்," என்றான் சங்கர்.

பூங்காவனம், மிகுந்த கோபத்துடன் வெளியே சென்ற வர், கதவுக்கருகில் ஒரு விநாடி நின்று கட்டிலில் படுத் திருந்த சங்கரைப் பார்த்து, "இதனால் தங்கள் மகளின் பிற்காலம் பாதிக்கப்படலாமென்பதற்காக எத்தனையோ



வேலைகளை விட்டுவிட்டு வந்தேன். இனிமேல் எது நடந் தாலும் நான் பொறுப்பாளியல்ல," என்று சொல்லிவிட்டு, அடுத்த கணம் அங்கிருந்து விரைந்தார்.

சங்கர் கையிலிருந்த நோட்டீஸை ஜெயத்திடம் நீட்டி, "ஜெயம் ! இதை மேஜை டிராயரில் வை," என்றான்.

அதைக் கையில் வாங்கி, அவன் சொற்படி டிராயரில் வைத்து, டிராயரை இழுத்துச் சாத்திவிட்டு, படுக்கையில் அவனருகில் உட்கார்ந்துகொண்டாள் ஜெயம். இருவரும் நீண்ட நேரம் ஏதும் பேசவில்லை. சங்கரே பேச்சைத் துவங்கினான். "ஜெயம், பூங்காவனம் சொன்னது புரிந்ததா ?" என்று.

"புரிந்தது." என்றாள் ஜெயம்.

"நாங்களிருவரும் பேசிக்கொண்டது என்னவென்று புரிந்ததா உனக்கு ?" என்று வினவினான் சங்கர் மீண்டும்.

"புரிந்தது. கடன் வாங்கியிருக்கிறீர்கள். கடன்காரன் நோட்டீஸ் கொடுத்திருக்கிறான்," என்றாள் ஜெயமும் அமைதியுடன்.

"எத்தனை ரூபாய் கடன் தெரியுமா ?"

"தெரியும்."

"நாங்கள் அரை. ஒண்ணு, ஒண்ணரை என்று பேசிய தெல்லாம்..."

"லட்சக் கணக்கு."

"அதெப்படித் தெரியும் ஜெயம் உனக்கு ?"

"பின்னால் பூங்காவனம் சின்ன ரூபாய் இரண்டைப் பற்றிப் பிரஸ்தாபித்தாரே !"

சங்கர் மெ ளப் புன்முறுவல் செய்தான். அந்தப் புன் முறுவலில் வருத்தம் தோய்ந்திருந்தது. "ஜெயம் ! உனக்குத்

தெரியுமா ? நான் உனக்கும் மதுவுக்கும் எத்தனை துரோகம் செய்திருக்கிறேனென்று ?" என்று கூறிப் பெருமூச்சு விட்டான், பிறகு.

"எங்களுக்கு நீங்கள் ஒருநாளும் துரோகம் செய்ய முடியாது." என்றாள் ஜெயம்.

"இப்பொழுது செய்திருப்பதென்ன ?"

"எதுவாயிருந்தாலும் செய்திருப்பது விதி. நீங்களல்ல."

"மனிதன் தன் கெடுதல்களை மறைப்பதற்கு விதியின் மேல் பாரத்தைப் போடுவது சரியா ?"

"கெடுதல் அவன் செய்வதற்குக்கூட அவன் தலையெழுத்துத்தான் காரணம் !"

"நான் எது செய்தாலும் நீ தப்பே சொல்ல மாட்டாயா ஜெயம் ?"

"நீங்களாகத் தவறு எதுவும் செய்ய முடியாது."

"ஏன்?"

"உங்கள் குணம் அப்படிப்பட்டது."

"அப்படியே வைத்துக் கொள்வோம். பிறர் கைப்பொம்மையாக ஆடுவது விவேகமா ?"

"ஆடுவது விவேகமல்ல. ஆனால், குறித்த காலத்தில் ஆட மறுத்துவிடுவது விவேகம்."

சங்கர் அவள் கைகளிலொன்றை எடுத்துத் தன் கைகளில் வைத்துக்கொண்டான். "என் செயல் எதிலும் நீ நல்லதையும் விவேகத்தையும் கண்டதால்தான், நான் இப்படிக் கெட்டு விட்டேன். நீ என்னைக் கண்டித்திருக்க வேண்டும் ஜெயம். அதுவும் உன் கடமை. இப்பொழுது தான் விழித்துக் கொண்டு என்ன பயன்? கண் கெட்டபின்



சூரிய நமஸ்காரம் எதற்கு ?" என்ற சங்கரின் குரல் தழுதழுத்துக் கிடந்தது. அத்துடன் மேலும் சொன்னான், "ஜெயம், இந்தச் சுப்ரமண்யத்தைப் பார்த்தாயா ?" என்று.

"அட்வகேட்டா ?" என்றாள் ஜெயம் சர்வ சாதாரணமாக.

"ஆமாம்," என்றான் சங்கர் வெறுப்புடன்.

"அவருக்கென்ன ?"

"அவர்தான் இந்த நோட்டீஸை அனுப்பியிருக்கிறார்."

"ஆம், பூங்காவனம் சொன்னார்."

"நமது பெண்ணை வாங்கிக் கொள்ளப் போகிறவர், நம்மிடம் ஒரு வார்த்தைச் சொல்ல வேண்டாமா ?"

"சொல்ல வேண்டியதுதான். ஆனால், யார் மனது எப்படியென்று யார் கண்டது ?"

"மனது எப்படியிருக்க முடியும் ஜெயம் ? நிச்சயதார்த்தம் வேறு செய்திருக்கிறார்."

"செய்தாலென்ன ? ஆறு மாதமாகக் கல்யாணத்துக்குப் பிடிகொடுக்கவில்லையே அவர் ?"

சங்கர் சிறிது ஆலோசித்துவிட்டு, "ஜெயம் ! உனக்குப் போன் பண்ணத் தெரியுமா ?" என்று வினவினான்.

"தெரியாது." என்றாள் ஜெயம்.

"சரி மதுவைக் கூப்பிட்டு, அட்வகேட்டை டெலிபோனில் கூப்பிடச் சொல்." என்றான் சங்கர்.

ஜெயம் ஏதும் பேசாமல் எழுந்து வெளியே சென்று மதுவை அழைத்து வந்தாள். மகளை ஆசையுடன் நோக்கின சங்கரின் கண்கள். மது அவனருகில் கட்டிலில்

உட்கார்ந்து கொண்டான். சங்கரின் கை அவள் தலையைத் தடவிக் கொடுத்தது. முகத்தில் தொடங்கிய மயிரிழைகளைத் தூக்கி மற்ற இழைகளுடன் சேர்த்தான்.

"அப்பா!" என்றாள் மது.

"ஏம்மா !" என்ற சங்கரின் குரலில் அன்பு உருகி யோடியது

"உடம்பு எப்படியப்பா இருக்கு ?"

"ஒண்ணுமில்லேம்மா, சரியாயிருக்கு."

"அன்றைக்கு, டாக்டர் வந்தபோது நான் பயந்து விட்டேன், அப்பா."

"டாக்டர்தான் பயத்துக்கு ஒண்ணுமில்லேன்னு சொல்லிட்டாரே !"

மதுவின் கண்களில் நீர் திரண்டது. "அப்பா" என்ற சொற்கள் துக்கத்தில் மிதந்து வந்தன.

"ஏம்மா ?",

"நீங்க எதுக்கும் கவலைப்படாதீங்க அப்பா !"

"இல்லைம்மா."

"என்னைப் பத்திக்கூடக் கவலைப்படக் கூடாது."

இதை எதற்காக மது சொல்கிறாள் என்பது விளங்கவில்லை சங்கருக்கு. "உன்னைப் பத்தி நான் ஏம்மா கவலைப்படணும் ?" நீ படித்த பெண். உன்னை நீ காப்பாத்திக்க முடியும்," என்ற சங்கர், அதற்குமேல் அவளை பேசவிடாது, "மது ! நீ டெலிபோனில் அட்வகேட்டை கூப்பிட்டு, இங்கு ஒரு நடை வந்து போகச் சொல், அவசரம் என்று சொல்," என்றான்.

மது வெளியே கூடத்துக்குச் சென்று, சில நாழிகைகள் கழித்துத் திரும்பி வந்தாள். "அப்பா ! அவருக்கு



இன்னிக்குக் கோர்ட்டிலே வேலை ஜாஸ்தியாம். நாளை வரேன்னு சொன்னார்," என்று கூறினாள்.

அட்வகேட் சுப்ரமண்யம் மறுநாளும் வரவில்லை, அதற்கு மறு நாளும் வரவில்லை. மது செய்த டெலிபோன்களுக்குப் பதில் சரியாகக் கிடைக்கவில்லை. கடைசியாக ஒரு முடிவுக்கு வந்த சங்கர், "மது ! நீயே நேரில் நமது காரை எடுத்துக் கொண்டு போய் அட்வகேட்டை அழைத்து வா," என்றான்.

மது அட்வகேட்டை அழைத்து வரக் கிளம்பினாள். அன்று டிரைவரைக் கூட அழைக்கவில்லை அவள். தானே காரை ஓட்டிக் கொண்டு சென்றாள். அன்று ஏதாவதொரு முடிவு ஏற்படும் என்பதைச் சங்கர் உணர்ந்திருந்தான். அந்த முடிவு ஒன்று பெரும் பயங்கரமாயிருக்கும் ; அல்லது பெரும் அமைதியைத்தரும் என்பதை அவனறிந்திருந்தான், அதற்காகக் காத்துமிருந்தான். வந்த முடிவு பயங்கரம் தான். அமைதியல்ல.

## 37. அற்ற குளத்தில்..

முடிவு பயங்கரமாகத்தானிருந்தது. அதைச் சங்கர் எதிர்பார்த்துமிருந்தான். எதிர்பார்க்கக் காரணங்களும் இருந்தன. பூங்காவனம் வந்து சென்ற நாள் முதல், பூங்காவனம் அதுவரை மிகச் சாமர்த்தியமாக மூடி மறைத்த விபரீதங்களெல்லாம் தலைவிரித்தாடின. கலையழகியின் சினிமாக் கம்பெனியில் வேலை பார்த்த பலர், பூங்காவனம் வந்து போன அன்று மாலையே ஆறுமாத பாக்கிக்கு வந்து பிராணனை வாங்கினார்கள். போதாக் குறைக்கு சங்கர் முன்பின் பார்த்தறியாத பலர் வந்து பணம் கேட்டார்கள். அவன் கையெழுத்துப் போட்ட பல உண்டியல்களையும் காட்டினார்கள். வந்த ஒவ்வொருவரையும் அவன் நேரில் பார்த்துச் சமாதானம்

சொல்லி அனுப்பினான். உள்ளே வேலை செய்யும் நேரம் போக மீதி நேரங்களில் அவனை விட்டுப் பிரியாம லிருந்த ஜெயம், அவனுக்கு ஏறியுள்ள கடன் பளுவைப் பார்த்துப் பிரமித்தாள். இத்தனைக்கும் அந்தக் கடன்கள் எப்படி ஏற்பட்டன என்பதைப் பற்றி ஒரு வார்த்தை கூடக் கேட்கவில்லை அவள். அதைக் கவனித்த சங்கர், தன்னருகில் அமர்ந்திருப்பது விலையில்லாத மாணிக்க மென்பதை உணர்ந்தான். அந்த நினைப்பில் ஒருமுறை அவளைக் கேட்கவும் செய்தான், "ஏன் ஜெயம் நேற்றும் இன்றும் வந்த உண்டியல்களின் தொகை என்ன தெரியுமா ?"

"தெரியாதே," என்றாள் ஜெயம்.

"இரண்டு லட்ச ரூபாய்," என்றான் சங்கர் அமைதி யுடன்.

"அப்படியா !" சர்வ அமைதியுடன் வந்தது ஜெயத்தின் பதிலும்.

"இத்தனை கடன் எப்படி வந்தது என்று கேட்க வில்லையே நீ ?" என்று வினவினான் சங்கர்.

"புருஷர்கள் விஷயம் அது. அதைப் பற்றி நான் கேட்பானேன் ?"

"அது உன்னையும் பாதிக்குமல்லவா ?"

"புருஷனின் சுகதுக்கங்கள் மனைவியையும் சேர்ந் தவை."

"இங்கு நீ என்ன சுகப்பட்டு விட்டாய் ? துக்கம் தானே உனக்குக் கிடைத்ததெல்லாம் ?"

"நீங்கள் மட்டும் என்ன சுகப்பட்டு விட்டீர்கள் ? இந்த வியாபாரங்களில் உங்களுக்குக் கிடைத்ததெல்லாம் வீண் கவலை, சுகவீனம், இவைதானே ?"



சங்கர் தனது வாழ்க்கையைப் பற்றிச் சில விநாடிகள் சிந்தித்துப் பார்த்தான். அவள் சொன்னதில் எத்தனை அர்த்தமிருந்தது ! உண்மையில் சென்ற வருடங்களில் பணம் அவனிடம் லட்சக்கணக்கில் புரண்டும், தன் மனதுக்கு அது எத்தகைய சந்துஷ்டியையும் அளிக்க வில்லையென்பதையும், துக்கத்தையே அளித்ததென்ப தையும் நினைத்துப் பார்த்து, 'எதற்காக இந்த பணப் பிசாசிடம் சிக்கிக் கொண்டேன் ?' என்று தன்னைத் தானே கேட்டுக் கொள்ளவும் செய்தான். தவிரத் தன் சரிவு சில நாட்களாகவே பூங்காவனத்துக்கும் கலையழ கிக்கும் தெரிந்திருக்க வேண்டுமென்பதையும், ராவ்சாகிப் புக்குக் கூட உள் வயணம் விளங்கியிருக்க வேண்டுமென் பதையும் உணர்ந்து கொண்டான் அவன். சென்ற சில மாதங்களாகவே, சினிமாக் கம்பெனியில் வேலை பார்த்த வர்கள் கம்பெனியில் கூடிக்கூடி நின்றதையும், கலையழகியோ ராவ்சாகிபோ அந்தப் பக்கம் தலை காட்டாததையும் நினைத்துப் பார்த்த அவன் சிந்தனையில் பல விஷயங்கள் திடீரெனப் பளிச்சிட்டன. இத்தனையும் கண் முன்பு நடந்திருந்தும் புரோக்கர் பூங்காவனம் என்ற திரை இவையனைத்துக்கும் காரணம் கூறி, ஏதும் நடவாதது போல் தன் கண்களை மறைத்து விட்ட தாலேயே, தன் வாழ்க்கையில் இறங்கிவந்த இடியின் ஆரம்ப சூசகங்களைத் தான் புரிந்து கொள்ள முடிய வில்லை யென்பது தெளிவாகத் தெரிந்தது.

தொடர்ச்சியாகப் பதினைந்து நாட்கள் கலையழ கியோ, ராவ்சாகிபோ கம்பெனிக்கு வராதிருந்ததைப் பற்றி, சங்கர் ஒரு நாள் பூங்காவனத்தைக் கேட்க முற்பட்டு, "என்ன பூங்காவனம், ராவ்சாகிபையும் கலையழகியையும் இந்தப் பக்கம் காணோமே ?" என்றான்.

"ராவ்சாகிப் ஊரிலே இல்லீங்க. அம்மாவுக்கு இப்ப அடிக்கடி ஷூட்டிங்," என்றார் பூங்காவனம்.

"ராவ்சாகிப் எந்த ஊருக்குப் போயிருக்கிறார் ?" என்று வினவினான் சங்கர்.

"வெளியூர்லே ஏதோ லெக்சராம்," என்றார் பூங்காவனம் அலட்சியமாக.

அதற்கு மேல் அன்று எதுவும் கேட்கவில்லை சங்கர். மற்றொரு நாள் கம்பெனிக்குப் போனபோது, பூங்காவனத்தை அழைத்து, "பூங்காவனம் ! கம்பெனி ஆட்களெல்லாம் என் வாசல்லே அந்த மரநிழலிலேயே உட்கார்ந்திருக்காங்க ? அவர்களை உள்ளுக்கு வரச் சொல்லுங்க," என்றான்.

பூங்காவனம் சிறிது தயங்கினார்.

"என்ன பூங்காவனம் ! என்ன யோசிக்கிறீங்க ?" என்று கேட்டான் சங்கர்.

"அவங்களை நான் ஏற்கெனவே ரெண்டு தடவை சொல்லியாச்சுங்க,'' என்றார் பூங்காவனம், தயக்கத்துடனும் வெறுப்புடனும்.

"அப்படின்னா ?'' சங்கர் கோபத்துடன் கேட்டான்.

"உள்ளே வரமாட்டேங்கறாங்க,'' என்றார் பூங்காவனம்.

"என்ன நினைச்சுக்கிறாங்க ? இது என்ன ஆபீசா ? சத்திரமா ?" என்று சீறினான் சங்கர்.

பூங்காவனம் மறுபடியும் தயங்கினார். "அவங்ககூட அதைத்தானுங்க கேட்கறாங்க," என்றார் தயக்கத்துடன்.

"அவங்களும் அதைத்தான் கேட்கறாங்களா ?" சங்கரின் குரலில் வியப்பும் கோபமும் இருந்தது.

"ஆமாங்க."

"அத்தனை துணிவா அவங்களுக்கு ?"



"சம்பளம் வர்லேன்னா இந்தக் காலத்திலே யாரும் துணிஞ்சுடறாங்களே. ஒரு மாசம் பாக்கி வையுங்க, எசமான் விசுவாசம், நன்றியெல்லாம் பறந்துடறதுங்க. அப்படியிருக்க, ஆறுமாச பாக்கிக்கு..." பூங்காவனம் வாசகத்தை முடிக்கவில்லை. இருப்பினும் சங்கர் புரிந்து கொண்டான்.

"ஏன் கொடுக்கவில்லை சம்பளம் ?" என்று கடிந்தான்.

"பணம் இருந்தாக் கொடுத்திருக்க மாட்டோம் ?" என்ற பூங்காவனம், மேஜை டிராயரிலிருந்து ஓர் உண்டியல் காகிதத்தை எடுத்து நீட்டி, "இதிலே கையெழுத்துப் போடுங்க. அந்தப் பிசாசுகளுக்கு ஒரு மாசச் சம்பளத்தைத் தொலைக்கிறேன்," என்றார்.

பதில் பேசாமல் சங்கர் கையெழுத்திட்டான். இப்படி அவன் இட்ட கையெழுத்துக்கள் பல. இத்தனைக்கும் ஆபீசிலிருந்தவர்கள், எந்த உற்சாகத்தையும் காட்டவில்லை. மற்ற வியாபாரக் கம்பெனிகளில் ஐந்து மாத போனஸ் கிடைக்கும்போது, சினிமாக் கம்பெனியில் ஐந்து மாதச் சம்பளப் பாக்கிக்கு யார் வேலை செய்வார்கள் ? மெள்ள மெள்ள நிற்கத் தொடங்கினார்கள். அவர்கள் நிற்கத் துவங்குவதற்கு முன்பே நின்றுவிட்ட கலையழகியும் ராவ்சாகிபும் திரும்பவேயில்லை. அவர்களைப் பார்க்கச் சங்கர் முயலவும் இல்லை.

அற்ற குளத்து அறுநீர்ப் பறவைகள் எப்படியென்று அவன் அறிந்து இருந்தான். ஆகவே மென்னத் திரும்பத் தன் நிலையைத் திருத்த முயன்றான். பூங்காவனத்தின் மூலம் மேற்கொண்டு கடன்களை வாங்கினான், பூங்காவனத்தின் பாஷையில் 'ஒரு அயிட்டத்தை வைத்து இன்னொரு அயிட்டத்தை அட்ஜஸ்ட்' செய்தான். இந்த நிலையில் ராவ்சாகிப்புடன் ஆரம்பித்த சில் கம்பெனியின் பங்குகள் மார்க்கெட்டில் விழ ஆரம்பித்தன. இப்படிப் படிப்படியாக ஏற்பட்ட சூசகங்களையெல்லாம் அவ

மாகத் தூக்கி எறிந்து பேசினார் பூங்காவனம். "ஒண்ணும் கவலைப்படாதிங்க. கம்பெனின்னா சரியறதும் மறுபடியும் தலையைத் தூக்கறதும் சகஜம்," என்று அறிவுரை கூறினார். அது மட்டுமின்றி எத்தனை பெரிய கம்பெனிகளெல்லாம் இன்ஸால்வெண்ட் ஆகிவிட்டது என்பதைச் சரித்திர பூர்வமாக எடுத்துக் காட்டி, "இன்று கூடச் சென்னையில் இன்ஸால்வெண்ட் போட்ட பெரிய மனிதர்கள் காரில் போகிறார்கள். அவர்களுக்கென்ன வசதி குறைந்து விட்டதா? வாழ்க்கை குறைந்து விட்டதா?" என்று அடித்துச் சொல்லி, பெரிய மனிதர்கள் இன்ஸால்வெண்ட் ஆகவேண்டிய அவசியத்தை எடுத்து உரைத்தார். "கெட்டாலும் மேன்மக்கள்," என்று பழமொழியை இந்த இன்ஸால்வெண்ட்காரர்களுக்கு அனுகுணமாகவும் உபயோகப்படுத்தினார் பூங்காவனம்.

பூங்காவனத்தின் சமாதானங்கள், துணிவு உரைகள், இவை சங்கருக்கு எந்தத் தைரியமும் அளிக்காததால், அவன் மனத்தைத் துயரமும் இகிலும் உள்ளூர அரித்துக் கொண்டிருந்தன. அந்த துயரத்தின் விளைவுதான் முற்றி நரம்புத் தளர்ச்சியில் கொண்டு வந்து விட்டது. அவனை அடியோடு முறிக்க வந்த அஸ்திரம்தான் அட்வகேட் சுப்ரமண்யத்தின் நோட்டீஸ். அந்தத் தொகையைப் பற்றி அவன் கவலைப்படவில்லை. எதையும் எதிர்த்து நிற்கும் துணிவை அவன் தூய உள்ளம் அவனுக்கு அளித்தது. ஆனால் அட்வகேட்டும், மற்ற அறுநீர்ப் பறவைகளைப் போலத்தானா என்பதையும் அறிந்து கொள்ள எண்ணினான் சங்கர்! அதை முன்னிட்டுத்தான் மதுவை நேரில் அட்வகேட் வீட்டுக்கு அனுப்பினான். அதில் அவன் பயந்த முடிவு இருந்தது. அவன் நினைத்ததை விடப் பயங்கர முடிவு.

அத்தகைய ஒரு பயங்கர முடிவு ஏற்படுமென்பதை அறியாமலே, மது காரைச் செலுத்திக் கொண்டு அட்வகேட் வீட்டை அடைந்தான். காரை போர்ட்டிகோ



வில் நிறுத்தி விட்டு, உள்ளே நுழைந்து, முன்கூடத்தைத் தாண்டி உள்ளே செல்ல முயன்றான். "மது," என்று பக்கத்து அறையிலிருந்த அட்வகேட்டின் குரல் அவனை மேலே போக விடாமல் தடுத்தது.

"மாமா!" என்று அழைத்த மது, அவர் அறை வாயிற்படியில் நின்றான்.

அவனைப் பார்த்த அட்வகேட் எதையோ மென்று விழுங்கினார். "எங்கே வந்தாய்?" என்று கேட்டார் மெள்ளச் சமாளித்துக் கொண்டு.

"அப்பா உங்களைப் பார்த்து விட்டு வரச் சொன்னார்," என்றான் மது.

"எதற்கு?" என்று கேட்டார் சுப்ரமண்யம்.

"எனக்குத் தெரியாது," என்றான் மது.

"இரண்டு நாளையிலே வரேன்னு சொல்லு," என்று தட்டிக் கழிக்கப் பார்த்தார் அட்வகேட்.

மது விடவில்லை. "ஏதோ ரொம்ப அவசரம் போலிருக்கு," என்றான்.

"எல்லாருக்கும்தான் அவசரம். அவரவர்களுக்கு ஒழிய வேண்டாமா?" என்ற அட்வகேட், தனது மேஜை மீதிருந்த சட்டப் புத்தகத்தைப் புரட்டிப் பார்க்க ஆரம்பித்தார்.

அவர் முகத்திலிருந்த கடுமை, குரலிலிருந்த இரக்கமற்ற தன்மை இரண்டும் பேரதிர்ச்சியைத் தந்தன மதுவுக்கு. "அப்பா உடம்பு சுகமில்லாமல் படுத்திருக்கிறார்..." என்று மது இழுத்தான்.

"அதற்கு வக்கீல் என்ன செய்ய முடியும்? டாக்டரைக் கூப்பிட்டுக் காட்டுவதுதானே," என்றார் அட்வகேட் புத்தகத்தைப் பார்த்தபடி.

"டாக்டரிடம் காண்பித்தோம். நரம்புத் தளர்ச்சி அதிகமாக இருப்பதாகவும், படுக்கையை விட்டு நகரக் கூடாதென்றும் சொல்லி விட்டார். ஆகையால்தான் உங்களைக் கூட்டிக் கொண்டு வரச் சொன்னார்," என்றான் மது.

அட்வகேட் சிறிது யோசனையில் ஆழ்ந்தார். பிறகு அனுதாபப்படுவது போல் முகத்தை வைத்துக்கொண்டார். கடைசியாகக் கேட்டார், "மது ! உன்னால் அதிர்ச்சியான செய்தியைத் தாங்க முடியுமா ?" என்று.

மதுவின் உதடுகளில் வருத்தம் தோய்ந்த புன்முறுவல் தவழ்ந்தது. "இரண்டு நாட்களாகப் பெரும் அதிர்ச்சிகளைத் தாங்கி வருகின்றேன்," என்றான்.

"என்ன அதிர்ச்சிகளைத் தாங்கி வருகிறாய் ?" என்றார் அட்வகேட்.

"கடன் சம்பந்தமான அதிர்ச்சிகள். அப்பாவும் அம்மாவும் நான் கவனிக்கவில்லையென்று நினைக்கிறார்கள். என் கண்களும் குருடாகி விடவில்லை. காதுகளும் செவிடாகி விடவில்லை. பெரிய மனிதர்கள் என்று சொல்லிக் கொள்பவர்களிடம் என் நம்பிக்கை போய் விட்டது. ஆனால் ஒன்றில் மட்டும் இன்னும் நம்பிக்கை வைத்திருக்கிறேன்," என்றான் மது துயரமும் வேகமும் வெறுப்பும் கலந்த குரலில்.

சுப்ரமண்யம் சங்கடத்துடன் நாற்காலியில் அசைந்தார். "நன்றாகப் பேசுகிறாய்," என்றார் அந்த சங்கடம் குரலில் ஒலிக்க.

"நான் பேசவில்லை. எனக்குச் சரியாகப் பேசவும் தெரியாது. உணர்ச்சி பேச வைக்கிறது," என்றான் மது.

அட்வகேட் அவன் பேச்சின் பொருளை நன்றாகப் புரிந்து கொண்டார். ஆகவே மௌனம் சாதித்தார்.



மது மேற்கொண்டு கேட்டான், "நான் ஒன்றில் நம்பிக்கை வைத்திருக்கிறேனென்று சொன்னேனே, எது தெரியுமா மாமா ?" என்று.

"எது ?" அட்வகேட்டின் குரலில் கடுப்பு இருந்தது.

"உங்கள் இதயத்தில் உங்கள் நாட்டுப் பெண்ணை உத்தேசித்தாவது சிறிது இரக்கம் இருக்குமென்று நம்பிக்கை," என்று கூறிய மது, அவரைப் பார்க்க முடியாமல் தலைகுனிந்து கொண்டான். தான் அத்து மீறிப் பேசுவதை அவன் உணர்ந்தே இருந்தான். ஆனால் அவன் தந்தையிருந்த நிலை, அட்வகேட் கொடுத்த நோட்டீஸ், தங்கள் வீட்டை வட்டமிட்ட அவர் தான் டெலிபோன் செய்தும் வராத செய்கை இவையனைத்தும் அவன் உணர்ச்சிகளைக் கிளறியிருந்தன.

அட்வகேட் சுப்ரமண்யம் அவன் மனநிலையை உணர்ந்தார். இருப்பினும் சிறிதும் இரக்கமின்றிச் சொன்னார், "மது ! நான் இருதயமற்றவனல்ல. ஆனால் கட்சிக்காரனிடம் பணம் வாங்கிக் கொண்டு அவன் எதிராளியிடம் உறவு கொண்டாடுவது என் வழக்கமல்ல. உன் தகப்பனார் இன்ஸால்வெண்ட் ஆகி விட்டார். மூன்று கடன்காரர்கள் என்னிடமே வழக்கைக் கொடுத்திருக்கிறார்கள். ஒருவர் கடனுக்குத்தான் நோட்டீஸ் கொடுத்திருக்கிறேன். மற்ற இருவரும் முரடர்கள். ஒருவன் கிரெடிட்டார்ஸ் பெடிஷன் கொடுக்கச் சொல்லியிருக்கிறான். அப்படியென்றால் என்ன தெரியுமா ? உன் தந்தையை இன்ஸால்வெண்ட் என்று கோர்ட் அறிவிக்க மனுக் கொடுக்கச் சொல்கிறான். இன்னொருவன் உன் தந்தை ஊரைவிட்டே ஓடிவிடுவாரென்று நினைக்கிறான். ஆகையால் ஏ. பி. ஜே. போடச் சொல்கிறான், அதாவது தீர்ப்புக்கு முன்பு உங்கள் வீட்டை ஜப்தி செய்யச் சொல்கிறான். நிலைமை பயங்கரமாயிருக்கிறது. உன் தகப்பனார் இத்தனை கடனை வைத்துக் கொண்டு, பணக்கார வேஷம் போட்டிருக்க

வேண்டியதில்லை. இதோ பார் மது! இன்னும் ஒரு வாரம் நான் தாமதிக்கிறேன். அதற்குள் எல்லாவற்றையும் உன் தந்தையைச் சீர்செய்து கொள்ளச் சொல். இந்த நிலையில் நான் அங்கு வந்து பயன் ஏதுமில்லை. அங்கு வந்தாலும் இதைத்தான் சொல்லப் போகிறேன்."

இரக்கம் சிறிதுமின்றி வெளிவந்த அந்த வார்த்தைகளைக் கேட்ட மதுவின் இதயம் எரிமலையாகியது. தந்தையிடம் பெண் கேட்டுக் கெஞ்சிய இந்த அட்வகேட் எப்படிப் பேசுகிறார் என்று நினைத்து வியந்தாள் மது. அட்வகேட் சுப்ரமண்யத்துக்கு ஆரம்பத்தில் இல்லாத தொழில் கூடத் தனது தந்தையால் பெரிதும் ஏற்பட்டதென்பதை அவள் அறிந்திருந்தாள். சங்கர் தனது செல்வாக்கை உபயோகப்படுத்தி, ஒப்பந்தங்களை எழுதவும், சாதாரண நோட்டீஸ் கொடுக்கவும், பல கம்பெனிகளின் வக்கீலாக அவரை ஏற்பாடு செய்ததும் மதுவுக்குத் தெரியும். அந்த வளர்த்த கடா தங்கள் மார்பிலேயே பாய்வதை அறிந்த அவள், கோபக் கண்களை, அவர் மீது நாட்டி, விடுவிடு என உள்பக்கம் நடக்க முற்பட்டாள்.

"மது!" வக்கீலின் அதிகாரக் குரல் அவளை சட்டென்று தேக்கியது.

"ஏன்?" என்று கேட்டாள் மதுவும் கோபத்துடன்.

"எங்குப் போகிறாய் ?"

"உங்கள் பிள்ளையைப் பார்க்க."

"கல்யாணமாகாத பெண், வயது வந்த பையனைத் தனித்துச் சந்திப்பதும் பேசுவதும் சரியல்ல," அட்வகேட் குரலில் ஆத்திரமிருந்தது.

"நான் மணக்கப் போகிறவர் தானே?" மது சீறினாள்.

"அதைப் பற்றியும் யோசிக்க வேண்டியிருக்கிறது," என்றார் அட்வகேட்.



"என்ன, என்ன ?" பேரதிர்ச்சி அவள் இதயத்தை இடித்தது. ஒருகணம் சிலையென நின்றாள். அடுத்த விநாடி, திரும்பிப் பைத்தியம் பிடித்தவள் போல் வெளியே ஓடினாள். வெளியே காரின் கதவு மூடும் சத்தமும், கார் புறப்பட்டு விர்ரென்று செல்லும் சத்தமும், அட்வகேட்டின் காதில் விழுந்தன. அவர் நிம்மதிப் பெருமூச்சு விட்டார். அதுவரை மறைவிலிருந்து நடந்ததைப் பார்த்துக் கொண்டு இருந்த அவர் மனைவி, வெளியே வந்து, "உங்களுக்குக் கூடப் புத்தியிருக்கிறது," என்று சொலித்தாள்.

அட்வகேட் புன்முறுவல் செய்தார். "இதற்குப் பிரமாத புத்தி தேவையில்லை. இன்ஸால்வெண்டின் மகளை நம் மகனுக்குப் பண்ணிக் கொண்டால் ஊரில் தலைகாட்ட முடியுமா?" என்றார் அவர். அவர் மனைவி கணவனைப் பெருமையுடன் பார்த்தாள்.

ஆனால் மது உள்ளம் வெடித்துவிடும் நிலையில் காரை விட்டுக் கொண்டு வேகமாக வீட்டிற்குச் சென்றாள். வாசலிலேயே அவள் காரை இருவர் நிறுத்தினார்கள். காரிலிருந்து இறங்காமலே, "யார் நீங்கள் ?"

"சற்று இறங்கம்மா" என்றார் அவர்களில் ஒருவர்.

காரை 'ஆப்' செய்துவிட்டு இறங்கினாள் அவள். அந்த இருவரில் ஒருவர் டிரைவர் சீட்டிலும் மற்றொருவர் பக்கத்து சீட்டிலும் உட்கார, கார் வெளியே சென்றது. பிரமை தட்டி நின்றாள் மது. கார் பறந்தது. அது போவதை முழுக்கப் பார்க்க முடியவில்லை அவளால். கண்களில் வழிந்தோடிய நீர், காரை முதலில் தெளிவற்றதாக்கி, பின்பு அடியோடும் மறைத்தும் விட்டது.

# 38. குலமகள் கையில் குடும்பம்

கலங்கிய கண்களுடன் நீண்ட நேரம் காரைப் பார்த்துக்கொண்டு நின்ற கட்டழகி மது, கடைசியாகக் கண்களைச் சேலைத் தலைப்பால் துடைத்துக் கொண்டு, கால்கள் துவள மெள்ளத் திரும்பித் தளர்ந்த நடையுடன் வீட்டுக்குள் நுழைந்தாள். கதவுக்கருகிலேயே அவளைச் சந்தித்த ஜெயம் பெண்ணின் மனநிலையை நொடிப் பொழுதில் கண்டு கொண்டு, அவளைத் தன் மார்புடன் சேர்த்து அணைத்துக் கொண்டு, தலையைக் கோதியும் கொடுத்தாள். பெண்ணை அவள் அப்படி அணைத்துப் பல வருடங்கள் ஆகிவிட்டன. பெண் கல்லூரிக்குப் போக ஆரம்பித்த பிறகு, அவள் வளர்ந்து விட்டாளென்ற காரணத்தாலோ, அல்லது அவள் 'அப்பாவின் பெண்'ணாகி, தாயாருடன் நெருங்காத காரணத்தாலோ, ஜெயம் அவளை அப்படி அணைக்க வாய்ப்பு இருந்ததில்லை. ஆனால் அந்தக் குடும்பத்தின் தலையில் இறங்கிக் கொண்டிருந்த கடன் என்னும் இடியும், சங்கரின் பலவீனமான உடல்நிலையும் மகளை அப்படி அணைக்கத் தூண்டவே, ஜெயம், மகளை மிகுந்த ஆதரவுடன் அணைத்தது அணைத்தபடியே இருந்தாள்.

துக்கம் குமுறிக் கொண்டிருந்த சித்தம், இரத்தம் வடிந்துக் கொண்டிருந்த இதயம், நரம்புகள் சிதறிவிடும் போலிருந்த உடம்பின் பொது நிலை, இவற்றால் துவண்டுவிட்ட மதுவுக்குத் தாயின் அந்த அணைப்பு பெரும் ஆறுதலாயிருந்தது. தாயின் மார்பில் புதைந்து கிடந்த மதுவுக்கு, அதில் தன் துக்கத்தையெல்லாம் சமனம் செய்யும் அத்தனை சக்தியிருந்தது ஆச்சரியமாக இருந்தது. அந்த அணைப்பிலிருந்து விலக இஷ்டப்படாத அந்தப் பருவப் பெண் நன்றாகத் தனது தலையைத் தாயின் நெஞ்சில் இழைத்துக் கொண்டாள். அந்தப் பருவ மங்கை அப்பொழுதும் தாய்க்குக் குழந்தையாகவே காட்சி அளித்



தாள். சிங்கார வாய் திறந்து பாலருந்த வந்து முட்டிய கைக்குழந்தை மதுவுக்கும், இன்று பெரியவளாகி மணாளனுக்கு எதிர்பார்த்துக் கொண்டிருந்த கட்டழகி மதுவின் தலையின் தாக்குதலுக்கும் எந்தவித வித்தியாசமும் தெரியவில்லை அந்தத் தாய்க்கு. தாயின் அணைப்பில் நீண்ட நேரம் இருந்துவிட்ட மது, கடைசியாகத் தலை நிமிர்ந்து, "அம்மா," என்று அழைத்தாள். அக்குரலில் ஒலித்தது அழுகையா ஆத்திரமா ஆதங்கமா என்று ஏதும் புரியாததால் ஜெயம் மெள்ளக் கேட்டாள், "ஏன் மது?" என்று.

மது சாந்திப் பெருமூச்சு விட்டாள். அத்துடன் சொன்னாள் "உன்னிடம் நான் ரொம்பப் பேச வேண்டியிருக்கிறது அம்மா," என்று.

ஜெயத்தின் பதில் எந்தவிதப் பதட்டமும் இல்லாமல் வந்தது. "பேசினால் போகிறது," என்றாள் அவள். அத்துடன் மகளை அணைத்தபடி அழைத்துக் கொண்டு உள்ளே சென்ற ஜெயம், "நீ சாப்பிட்டுவிட்டு அப்பாவின் பக்கத்தில் போய் உட்கார்ந்து கொள். நான் உள் வேலைகளை முடித்துக் கொண்டு வருகிறேன்," என்றாள்.

"எனக்குப் பசிக்கவில்லை அம்மா. நான் வேலையைக் கவனிக்கிறேன். நீ போய் அப்பா பக்கத்தில் உட்கார்ந்து கொள்," என்றாள் மது தழுதழுத்த குரலில்.

ஜெயத்தின் இதழ்களில் அத்தனை வருத்தத்திலும் புன்முறுவலொன்று விரிந்தது. மதுவுக்குச் சமையலறை வேலை எதுவும் தெரியாதென்பது அவளுக்குத் தெரியும். அந்தப் புன்முறுவலைத் தொடர்ந்து சொன்னாள். "உன்னால் முடியாது மது. நீ போய் உட்கார்ந்து கொள் அப்பாவிடம், எதற்கும் சாப்பிடவா," என்று.

"நான்தான் சொன்னேனே. எனக்குப் பசிக்கவில்லையென்று," என்று பிடிவாதம் செய்தாள் மது, துக்கம் தொண்டையை அடைக்க.

"இருக்கட்டும் வா. இப்பவாவது சொல்கிறபடி கேள்" என்று கடிந்து கொண்ட ஜெயம், வலுக்கட்டாய மாக அவனுக்குச் சோற்றைப் போட்டாள். மதுவின் மன நிலையிருந்த நிலையில் உணவு இறங்கவில்லை உள்ளே. இரண்டு முறை தொண்டையிலிருந்து சாதமும் வெளி வந்தது. ஏதோ சாப்பிட்டதாகப் பெயர் செய்து, தட்டி லேயே கையையும் அலம்பிவிட்டுத் தட்டை எடுத்துக் கொண்டு கிளம்பினான்.

"தட்டைக் கீழே வை," என்றாள் ஜெயம்,

"நான் தட்டை அலம்பிக்கொண்டு வருகிறேன்," என்றான் மது.

என்றும் சாப்பிட்ட தட்டை அலம்பாத மது, அன்று தட்டு அலம்ப முற்பட்டதை எண்ணிச் சிறிது வருத்தம் கலந்த புன்முறுவலை வெளியிட்டாள் ஜெயம். அதைக் கவனித்த மது, "ஏம்மா! நான் தட்டை அலம்ப எடுத்தது உனக்கு ஆச்சரியமாக இருக்கிறதா?" என்று வினவினான். அவன் குரலில் விபரீத ஒலி இருந்தது.

"ஆம்," என்றாள் ஜெயம்.

தட்டுடன் நின்ற மது, "இது என் தட்டு அம்மா! இனி மேல் நான் பிறர் வீட்டுப் பாத்திரங்களையும் கழுவ நேரிடலாம்," என்றுகூறிவிட்டுச்சரேலென சமையலறைக்கு வெளியிலிருந்த தாழ்வாரக் குழாய்க்குச் சென்றான். தட்டை அலம்பிய பிறகு, வழக்கம்போல் ஹாலின் சோபாவுக்குப் போகாமல் சமையலறையிலேயே உட்கார்ந்துவிட்ட மதுவின் முகத்தைப் பார்த்த தாய், அதிலிருந்த சோகத்தைக் கவனித்தாள். ஏதோ பெரும் துன்பம் மகனின் உள்ளத்தைத் தகர்ப்பது அவளுக்குப் புரிந்திருந்தது. அந்தத் துன்பம் என்ன என்பதை ஓரளவு ஊகிக்கவும் அவளால் முடிந்தது. வெண்கலப் பானையில் இருந்த சாதத்தைக் கிளறி அடுக்கில் கொட்டிக்கொண்டு, பானையை ஒழித்த வண்ணம், "ஏன் மது, வக்கீல் வர மறுத்து விட்டாரா?" என்று வினவினாள் ஜெயம்.



"ஆமாம்மா," தலையைக் குனிந்த வண்ணம் பதில் சொன்னான் மது.

"மேற்கொண்டு என்ன சொன்னார்?" என்று எழுந்தது ஜெயத்தின் கேள்வி.

மது நடந்ததை அப்படியே வார்த்தைக்கு வார்த்தை விவரித்தான். ஜெயம் அவனுக்கு முதுகைக் காட்டிக் கொண்டு உட்கார்ந்து ரசப் பாத்திரம், வாணலி, முதலிய வற்றை ஒழித்துக் கொண்டே, அத்தனைக்கும் சர்வ சாதாரணமாக 'ஊம்' கொட்டினாள். அந்தப் பாத்திரங் களில் அப்படி ஒழிப்பதற்கு அத்தனை அதிகமாக எதுவும் இல்லாவிடினும், ஒழித்து முடிப்பதற்கு நேரம் ஆகத்தான் செய்தது. மது கதையை முடிப்பதற்கும், இரண்டு கை களிலும் பாத்திரத்தை எடுத்துக்கொண்டு ஜெயம் வெளித் தாழ்வாரத்துக்குச் செல்வதற்கும் நேரம் சரியாயிருந்தது. தாழ்வாரத்தில் பாத்திரங்களைப் போட்டுவிட்டுத் திரும்பிய ஜெயம், மதுவை நோக்கி, "சரி, மது! நீ போய் அப்பாவிடம் உட்கார்ந்து கொள். அவரிடம் எதையும் சொல்லாதே," என்றாள்.

மது உட்கார்ந்த இடத்திலிருந்து எழுந்தான். தாயை ஒரு விநாடி உற்று நோக்கிவிட்டு, "எதையுமா?" என்று கேட்டான்.

"ஆம், எதையும்தான்." ஜெயத்தின் குரலில் கண்டிப்பு இருந்தது, உறுதியுமிருந்தது.

"வீட்டு ஜப்தி விஷயம் கூடவா?" என்று வினவினான் மது.

"ஆம்,"

"தவறு இல்லையா அம்மா?"

"எது?"

"அப்பாவிடமிருந்து இதையெல்லாம் மறைப்பது?"

ஜெயம் பெண்ணை நோக்கினாள். "நீ டென்னிஸ் ஆடினதையும் வக்கீல் வீட்டுப் பையனுடன் பழகியதையும் உங்கப்பாவும் நீயும் என்னிடம் மறைத்திருக்கலே, அது மட்டும் தவறில்லையா?" என்று வினவினாள்.

அவள் கேள்வி சாதாரணமாகத்தான் இருந்தது. அதில் வெறுப்போ துன்பமோ எதுவுமே இல்லை. அவள் மேலும் சர்வ சாதாரணமாகவே சொன்னாள். "அப்பாவின் உடம்பு சரியில்லை மது. மோட்டாரை அவர்கள் கைப்பற்றப் போவது அப்பாவுக்குத் தெரியும். நீ வக்கீல் வீட்டுக்குப் போனதுமே அதைப்பற்றிக் கவலைப் பட்டார் அவர். "ஐயோ அது 'எச்.பி.' ஆச்சே, 'டியூ' கூடக் கட்டலையே என்று ஏதோ புது வார்த்தைகளைச் சொன்னார். நான் அந்த வார்த்தைகளுக்கு அர்த்தத்தைக் கூடக் கேட்கவில்லை. காரும் அடமானம் என்பதைத் தெரிந்து கொண்டேன். நீ இறங்கியதும், அவர்கள் காரைக் கொண்டு போனதைப் பார்த்தேன். அதைக்கூட அப்பாவிடம் சொல்ல வேண்டாம். எதையும் தாங்கும் நிலையில் அவர் இல்லை மது. நமக்குக் கார் வேண்டாம், வீடு வேண்டாம், பணம் வேண்டாம், அவர் இருந்தால் போதும். இதெல்லாம் அவர் இருந்தால் திரும்பக் கிடைக்கும்," என்று.

தாயின் உறுதியான குரல் தெளிவான சிந்தனை, அத்தனை வாழ்க்கைச் சரிவிலும் அவள் காட்டிய நிதானம் எல்லாம் பெரு வித்தையாய் இருந்தது மதுவுக்கு. தாயின் உறுதியைப் பார்த்த மது, தனக்கு எத்தனை படிப்பிருந்தும் ஏதும் தெரியாத அந்தப் பட்டிக்காட்டுத் தாய்க்கிருந்த நிதானமும் உறுதியுமில்லாததை நினைத்து வியந்தாள். பழங்கால வாழ்க்கை முறையில் ஏதோ பெரும் பலமிருப்பதை அவள் உணர்ந்தாள். ஆகவே, ஏதும் சொல்லாமல் தாயின் சொற்படி தந்தையின் அறையை நோக்கி நடந்தாள். மகள் சென்றதும், ஜெயம் மீண்டும் சமையலறையைச் சுத்தப் படுத்துவதில் முனைந்தாள். அவள் அதைச் சுத்தம் செய்ததிலேயே பெரும் உறுதி தெரிந்தது. அத்துடன் அந்த



வேலைகளைச் செய்துகொண்டே அவள் தீவிர ஆலோசனையில் இறங்கியிருப்பதும் தெரிந்தது. அடுக்களைப்பெரிய துடைப்பம் ஆழமாகப் பதிந்தது. வெளி முற்றத்தைச் சாண்டிய நார் பிரஷ் சரசரவென்று சப்தித்தது. மீதியிருந்த சாதம், குழம்பு, ரசம், கறி இவற்றை அடுக்குகளில் எடுத்து வைத்து, ஒன்றின்மேல் ஒன்றாக அடுக்கி வைத்து, கை கால்களைக் கழுவி முகத்தைச் சுத்தம் செய்து குங்குமத்தை இட்டுக்கொண்டு, மகாலட்சுமிபோல் கூடத்துக்கு வந்து, வழக்கத்துக்கு மாறாக சோபாவில் உட்கார்ந்து நீண்ட நேரம் யோசனையில் ஆழ்ந்தாள். பிறகு வாயிலிருந்த கூர்க்காவை அழைத்து, டாக்டரைத் தவிர யார் வந்தாலும் தன்னைக் கேட்காமல் உள்ளே விட வேண்டாமென்று கண்டிப்பான உத்தரவும் பிறப்பித்தாள். கூர்க்கா தனது வாயை வியப்புடன் பிளந்தான். என்றும் எந்த உத்தரவையும் இடாத எஜமானியம்மாள் அன்று உத்தரவிட்டது அவனுக்குப் பிரமிப்பை அளித்தது. ஆனால் காரணம் கேட்காமல் அலுவல் புரியும் வீரர் கூட்டத்தைச் சேர்ந்த கூர்க்கா, சரியென்பதற்கு அறிகுறியாகத் தலையை மட்டும் அசைத்துப் போய்விட்டான். பிறகு கணவன் படுத்திருந்த அறைக்குள் சென்ற ஜெயம், அவனுக்குப் பக்கத்திலிருந்த பிளாஸ்கிலிருந்து சிறிது கஞ்சியைக் கொட்டிக் கொடுத்தாள். ஏதோ பேச முயன்ற சங்கரை, "ஒன்றும் பேச வேண்டாம். சொல்கிறபடி கேளுங்கள். எல்லாவற்றையும் நான் பார்த்துக் கொள்கிறேன்," என்றும் கடுமையுடன் கூறினாள்.

சங்கரின் புருவங்கள் வியப்புடன் மேலே எழுந்தன. அவன் கண்கள் மதுவின் கண்களுடன் சந்தித்தன. இருவர் உதடுகளிலும் புன்னகை தவழ்ந்தது. அதைக் கவனித்த ஜெயம், மிக உறுதியுடன் சொன்னாள். "உங்கள் இருவர் ராஜ்யமும் இத்தனை நாள் நடந்தது. என் ராஜ்யமும் தான் சில நாட்கள் நடக்கட்டுமே," என்று.

"நீ எடுத்துக்கொள்ளும் ராஜ்யத்தில் பசை சிறிதுமில்லையே தெரியுமா?" என்று சங்கரின் உதடுகள் முணுமுணுத்தன.

"பசை இருக்கிற ராஜ்யத்தை யாரும் சமாளிக்கலாம். தவிரப் பசையைப்பற்றி எனக்கென்ன? என் சம்பந்தப்பட்ட வரையில் பசையிருந்தபோதும் ஒரே விதம்தான், பசையில்லாதபோதும் ஒரே விதம்தான். சரி, கண்ணை மூடிப்படுங்கள்," என்ற ஜெயம் "மது, இப்படி வா! அப்பா தூங்கட்டும்," என்று பெண்ணையும் வெளியே அழைத்தாள்.

மது தகப்பனைப் பார்த்து விழித்தாள். சங்கர் புன்முறுவல் செய்தான். அந்தப் புன்முறுவலில் சாந்தியிருந்தது. தன் தலையிலிருந்த குடும்பச்சுமை இறங்கிவிட்டதற்கான சந்துஷ்டியும் காணப்பட்டது அதில். அதைக் கண்டு திருப்தியடைந்த மது, தாயைப் பின்பற்றி வெளியே சென்றாள். தாய் அவளைச் சமையலறைக்கு அழைத்துச் சென்று, "மது! நான் உட்கார்ந்திருக்கிறேன். நீ கூடத்துக்குப் போய் மேஜையிலிருந்து ஒரு கவர் கொண்டு வா. லெட்டர் எழுதக் காகிதமும் பேனாவும் எடுத்துவா" என்றாள்.

"அங்கேயே எழுதிவிடலாமே அம்மா," என்றாள் மது. "இந்தச் சமையலறையில்தான் எனக்கு யோசனைகளும் சரியாக வரும். நான் ஆதி முதல் பழகிய இடம் இதுதான்." என்றாள் ஜெயம்.

தாய் சொற்படி மது பேப்பர், பேனா, கவர், அடியில் வைத்துக்கொள்ள ஒரு தடிப் புத்தகம் இத்தனையும் கொண்டு வந்தாள். "எழுது மது." என்ற ஜெயம், "அன்புள்ள..." என்று துவங்கி அடுத்த வார்த்தையைச் சொன்னதும், மது பிரமிப்பின் ஊடே கேட்கவும் செய்தாள்.

"எதையும் கேட்காதே. சொல்கிறபடி எழுது." அதிகாரத்துடன் வந்தது ஜெயத்தின் பதில்.



மது எழுதினாள். கடிதத்தில் கண்ட விஷயங்கள் அவளுக்குப் பேரதிர்ச்சியைத் தந்ததால், சாதாரணமாக நன்றாயிருக்கும் அவள் கையெழுத்து அன்று கிறுக்கலாக இருந்தது. கடிதத்தை எழுதி முடித்ததும் அம்மா சொன்ன விலாசத்தையும் எழுதிய மது கவரை ஒட்டினாள். அடுத்தபடி, "மது! நீ கொஞ்சம் வெளியே கிளம்பு," என்றாள் ஜெயம்.

"காரில்லை" மதுவின் குரல் பரிதாபமாயிருந்தது.

"நீ காரில் பிறக்கவில்லை. பட்டிக்காட்டு அறையில் பிறந்தாய். பஸ்ஸில் போய் வா. வேண்டிய சில்லறையைப் பெட்டியிலிருந்து எடுத்துக் கொள். வழியில் இதைத் தபாலில் சேர்த்து விடு," என்ற ஜெயம் எங்கு போகவேண்டும், யாரைப் பார்க்கவேண்டும், என்ன சொல்லவேண்டும் என்ற விஷயங்களையும் விடுவிடு என்று கூறினாள். அது மட்டுமல்ல, "இது எதுவும் அப்பாவுக்குத் தெரிய வேண்டாம்," என்றும் திட்டமிட்டாள்.

மது தன் தாயை ஏறெடுத்து நோக்கினாள். அவள் உத்தரவுகள் புரட்சிகரமாயிருந்தன. முகத்தில் பெரும் உறுதியிருந்தது. அந்தச் சமையலறையில் பெரும் ராணி போல் நின்றாள் ஜெயம். மதுவுக்கு ஒரு விஷயம் இட்டமாகப் புரிந்தது. குடும்பப் பொறுப்பு, கணவன் கையிலிருந்து அந்தக் குலமகள் கைக்கு மாறிவிட்டது என்பது தெளிவாகத் தெரிந்தது அவளுக்கு.

## 39. ஆம்பலும் நெய்தலும்

தாய் சொன்ன இடத்துக்கெல்லாம் மது சென்று திரும்பிவர சாயந்திரம் மணி ஐந்தாகிவிட்டது. பல வருடங்களாகப் பஸ் ஏறிப் பழக்கமில்லாததாலும், வெயில் அதிகமாக மேலே படாமலே காலத்தைக் கழித்துவிட்டதாலும், முகம் கறுத்துப்போய் ஆடை புழுதிபடிந்துமிருந்த ஆயாசத்துடன் வந்த மது, 'அப்பாடி...' என்று

சோபாவில் விழுந்து சாய்ந்து கொண்டான். அவள் வந்ததைப் பின் கட்டிலிருந்தே பார்த்த ஜெயம் கூடத்துக்கு வந்து மதுவைத் திருப்தியுடன் நோக்கினாள். அவன் கறுத்த முகமும் கலைந்த ஆடையும் பார்ப்பதற்கு மிகத் திருப்தியாயிருந்தன ஜெயத்துக்கு. அத்துடன் தாய்க்கு மகனின் கஷ்டத்தில் இயற்கையாக ஏற்படும் அனுதாபமும் கலந்துகொண்டது அவள் இதயத்தில். ஆகவே கேட்டாள். ஜெயம், "ஏன் மது? ஏன் இத்தனை நாழிகையாகிவிட்டது?" என்று.

மது சிறிது ஆசுவாசப்படுத்திக் கொண்டு, "என்ன செய்கிறது? நான் போனபோது டாக்டர் வீட்டில் இல்லை. விஸிட் போயிருந்தார். வந்ததும் அவரிடம் விஷயத்தைச் சொல்லி விட்டுக் கிளம்பினேன். அப்புறம் மாமா வீட்டுக்குப் போனேன். அவரும் இல்லை. மில்லில் காலை ஷிப்டுக்குப் போயிருந்தவர் மூன்று மணிக்குத் தான் வந்தார்," என்று தன் தாமதத்துக்குக் காரணம் சொன்னான்.

"மாமா' வீட்டைப் பற்றி மது சொன்னதும் ஜெயத்தின் முகம் மிகவும் கனிந்தது. "மாமா உன்னை அடையாளம் கண்டு பிடித்துக் கொண்டாரா மது? உன்னை அவர் பார்த்து நாளாகிறதே," என்று கேட்டாள் ஜெயம்.

"நாளாகிறதா! வருஷங்களல்லவா ஆகிறது? இருந்தாலும் மாமா சட்டென்று அடையாளம் கண்டு கொண்டார். என்னைப் பார்த்ததும் அழுதுவிட்டார்," என்றான் மது. அவன் குரலில் ஆனந்தம், பரிதாபம் இரண்டும் கலந்திருந்தன.

ஜெயத்துக்குத் துக்கம் தொண்டையை அடைத்துக் கொண்டது. கண்ணிலும் நீர் துளிர்த்தது. "மாமா என்ன சொன்னார்?" என்று கேட்டாள்.

"இன்றைக்கு ராத்திரி மறுபடியும் வேலைக்குப் போகணுமாம். நாளைக்கு லீவு எடுத்துக் கொண்டு



கண்டிப்பாய் காலையிலே வந்துடறதாகச் சொன்னார்," என்றான் மது.

"எதற்கு வரச் சொன்னேன்னு கேட்டாரா?" என்று வினவினாள் ஜெயம்.

"இல்லை. எதுவுமே கேட்கவில்லை. அப்பாவுக்கு உடம்பு சரியில்லை; உங்களை அம்மா அழைச்சிட்டு வரச் சொன்னாங்கன்னு சொன்னேன். இருக்கிற நிலைமையைச் சொல்லி நாளைக் காலையிலே வரேன்னு சொல்லுன்னு சொன்னார்," என்ற மது சிறிது தயங்கினான்.

"என்ன மது?" என்று கேட்டாள் ஜெயம்.

"என்னைப் பஸ் வரைக்கும் கொண்டு வந்து ஏற்றி விட்டார். பஸ்ஸில் ஏறும் போது 'அம்மாகிட்ட சொல்லு எதுக்கும் கவலை வேண்டாம்னு' என்று சொல்லிவிட்டுப் போனார்," என்றான் மது.

ஜெயம் ஆசுவாசப் பெருமூச்சு விட்டாள். "மது! இனி மேல் நமக்குக் கவலையில்லை. ஆமாம், அந்தக் கடிதாசியை..." என்று துவங்கினாள்.

"தபாலில் போட்டு விட்டேன்," என்றான் மது.

பிறகு மதுவை உள்ளே போய் முகம் கழுவச்சொல்லித் தலைவாரிப் பின்னி விட்டாள். பிறகு ஒரு கப் ஓவல்டினைக் கரைத்துக் கொடுத்து விட்டு, "நான் சமையலை முடிச்சுட்டு வரேன், நீ போய் அப்பாவைப் பார்த்து கொள். டாக்டர் வந்தால் கூப்பிடு," என்றாள்.

மது தந்தையின் அறையை நாடிச் செல்ல ஜெயம் சமையலறைக்குச் சென்றாள். மதுவை அன்று பகல் ஒரு மணியிலிருந்து காணாத சங்கர், உள்ளே வந்து பக்கத்தில் உட்கார்ந்ததும், "ஏன் மது? உன்னை எங்கே நான் முழுவதும் காணோம்?" என்று கேட்டான்.

"புத்தகம் பார்க்கும் வேலையிருந்தது, போனேன்," என்று பொய் சொன்னான் மது.

"இப்ப லீவில்லையா உனக்கு? காலேஜ் ஏது?" சங்கர் வினவினான், அவள் கையைப் பிடித்து வருடிக் கொண்டே.

"ஏம்பா, காலேஜ் இல்லேன்னா லைப்ரரி ஒர்க் இல்லையா?" என்று கேட்டாள் மது.

சங்கர் புன்முறுவல் செய்தான். லீவு நாட்களாயிருந்தாலும் மது பொது லைப்ரரிக்குப் போய் வருவது வழக்கமென்பதை அவன் அறிந்தேயிருந்தான். "ஏம்மா இப்படி புத்தகப் புழுவாப் போறே? லீவ் நாள்னா ஓய்வு எடுத்துக் கொள்ளக் கூடாதா?" என்று வினவினான்.

"இப்ப ஓய்வு இல்லாமல் என்னப்பா?" என்ற மது அவன் தலையை அன்புடன் கோதி விட்டாள். சற்று நேரம் கழித்து, ஜெயமும் சமையல் வேலையை முடித்துக் கொண்டு வந்தாள். அவள் வந்த பத்து நிமிடங்களுக்கெல்லாம் டாக்டர் காரின் ஹாரன் வாசலில் கேட்டது.

மணி கிட்டத்தட்ட ஆறரை ஆகி விட்டதால், கவியின் பங்களாவில் விளக்குகள் ஜாஜ்வல்யமாக எரிந்து கொண்டிருந்தன. மாலை வேளையாதலால் வாசற் கதவைத் திறந்தே வைத்திருந்த ஜெயம் டாக்டரை வாசலிலேயே எதிர் கொண்டாள். பிறகு அவருடன் அறைக்கு வந்தாள். டாக்டர் அன்று மிக உற்சாகமாகக் காணப்பட்டார், "எப்படி இருக்கிறீர்கள் சங்கர்?" என்று உற்சாகத்துடன் ஒரு கேள்வியும் கேட்டுக் கொண்டே, ஜெயம் இழுத்துப் போட்ட நாற்காலியில் சங்கரின் படுக்கைக்குப் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டார்.

"பரவாயில்லை. கொஞ்சம் படபடப்புத்தான் அதிகமாய் இருக்கிறது," என்றான் சங்கர்.

"அப்படியா? சரி பார்க்கலாம்," என்ற டாக்டர், அவன் சட்டைப் பொத்தான்களைக் கழற்றி ஸ்டெதாஸ் கோப்பால் பரிசோதிக்கத் தொடங்கினார். அன்று



படபடப்பு வழக்கத்துக்கு அதிகமாகவே இருந்தது. அவனைத் திரும்பிப் படுத்துக் கொள்ளச் சொல்லி முதுகிலும் ஸ்டெதாஸ்கோப்பை வைத்து நீண்ட நேரம் பார்த்தார், மறுபடியும் மல்லாந்து படுக்கச் சொல்லி இதயத்தைப் பார்த்தார், பிறகு அவன் கையில் துணிப் பட்டையைக் கட்டி ரப்பர் பம்பை அடித்து ரத்த அழுத்தம் எப்படியிருக்கிறதென்று பார்த்தார். கடைசியில், "நர்வ்ஸ் நர்வ்ஸ் ஆல் நர்வ்ஸ்," என்று அலுத்துக் கொண்டார்.

"என்ன டாக்டர்? ஏதாவது கோளாறா யிருக்கிறதா?" என்று வினவினான் சங்கர் கவலையுடன்.

"ஒரு கோளாறுமில்லை. பிளட் பிரஷர் சாதாரணமாகத்தானிருக்கிறது. உங்கள் தகராறு முழுவதும் நரம்புகள்தான். அப்படி என்ன கவலை உங்களுக்கு நரம்புகள் இப்படிக் களைத்து கிடக்க?" என்று டாக்டர் கேட்டார்.

சங்கர் புன்முறுவல் செய்தான், "கவலை யாரை விட்டது டாக்டர்?" என்று கேட்டான்.

"மிஸ்டர் சங்கர்! இப்பொழுது உங்களுக்கு நரம்புத் தளர்ச்சியைவிட வேறு தொந்தரவு எதுமில்லை, "டாக்கி கார்டியா,—அதாவது, இதயப் படபடப்புக்கு அதுதான் காரணம். உங்கள் வயதுக்கு இருக்கவேண்டிய நாடித் துடிப்புக்கு அதிகமாக இருக்கிறது நாடியின் ஓட்டம். நீங்கள் ஒரு மாதமாவது சென்னையை விட்டுக் கிராமப் பக்கம் செல்வது நல்லது. உங்களுக்கு வேண்டியதெல்லாம் யாரும் தொந்தரவு செய்யாத சுமுகமான சூழ்நிலை, ஓய்வு, இவைதான். மருந்து இரண்டாம் பட்சம்," என்றார் டாக்டர்.

"நான் எங்கு போக முடியும் டாக்டர்?" என்றான் சங்கர்.

"ஏன்? பெங்களூர், ஊட்டி, கோடை எங்காவது போங்களேன்," என்றார் டாக்டர்.

இந்தச் சமயத்தில் ஜெயம் இடையே புகுந்து, "ஏன் டாக்டர்! சாதாரண கிராமமாயிருந்தால் போதாதா?" என்று வினவினாள்.

"தாராளமாகப் போதும். நல்ல காற்று, ஓய்வு இது தானே தேவை இவருக்கு. இவர் பிஸினஸை எல்லாம் யாராவது கொஞ்ச நாளைக்குப் பார்த்துக் கொள்ளட்டுமே. யார் கிட்டேயாவது ஒப்படைச்சுட்டுப் போங்க. சுவரை வைத்துக் கொண்டுதானே சித்திரம் எழுதணும்?" என்ற டாக்டர், தமது பணி முடிந்துவிட்டதென்பதற்கு அறிகுறியாக எழுந்திருந்தார். போகும் போது, "கவலைக்கு எதுவுமில்லை மிஸ்டர் சங்கர். நான் சொல்கிறபடி செய்யுங்கள். ஒரு மாத்திரை கொடுத்தனுப்புகிறேன். அதைக் காலையில் பாதி, ராத்திரியில் பாதி சாப்பிடுங்கள். ஒரு மாதத்துக்கு ஆகும்படி அனுப்புகிறேன்," என்று கூறி விட்டுச் சென்று விட்டார்.

அவரை வாசல்வரை கொண்டு விட்ட ஜெயம், "மிக்க நன்றி டாக்டர்," என்றாள்.

டாக்டர் திரும்பி அவளைப் பார்த்தார். அவர் கண்களில் ஆச்சரியம் ததும்பி நின்றது. "அம்மா, எப்படியாவது கணவனைக் காப்பாற்ற முயன்றதாக சாவித்திரியின் கதையைக் கேட்டிருக்கிறேன். அது பொய்யில்லையம்மா. உண்மைதான்," என்று கூறிவிட்டுப் படிகளில் இறங்கி நடந்தார்.

ஜெயம் சாந்திப் பெருமூச்சுவிட்டு உள்ளே நடந்தாள். கணவன் அறைக்குள் வந்ததும், அவளைச் சங்கர் கேட்டான். "டாக்டர் என்ன சொன்னார்?" என்று.

"கவலைக்கு எதுவுமில்லை என்று சொன்னார் வெளியூர் போகச் சொன்னார்." என்றாள் ஜெயம்.



"நாம் எந்த வெளியூருக்குப் போக முடியும்? ஊட்டி, பெங்களூர் போய் நிர்வகிக்க நம்மிடம் பணம் இருக்கிறதென்று நினைக்கிறாயா?" என்று கேட்டான் சங்கர்.

"ஊட்டிக்கும் பெங்களூருக்கும் எதற்காகப் போக வேண்டும்?" என்று கேட்டாள் ஜெயம்.

"வேறெங்கே போக முடியும்?" என்று வினவினான் சங்கர்.

"நம்ம ஊர் எங்கும் ஓடிவிடவில்லையே?" என்று ஜெயம் கேட்டாள்.

சங்கர் முகத்தில் பெருவியப்புப் படர்ந்தது. "எது? சிறுவயலா?" என்று மிதமிஞ்சிய வியப்பு குரலிலும் ஒலிக்கக் கேட்டான்.

"ஆம்" என்றாள் ஜெயம் சர்வசாதாரணமாக.

"அங்கு என்ன இருக்கிறது நமக்கு. வீடா? வாசலா? நிலமா?"

"அவற்றைவிட அதிகமானதொன்று இருக்கிறது."

"என்ன அது?"

"மனிதர்களின் அன்பு."

"இப்பொழுது அவர்கள் நம்மிடம் அன்பு காட்டுவார்களா?"

"ஏன் மாட்டார்கள்?"

"நாம் எங்கே பன்னிரண்டு வருடங்களாக அவர்களை மதித்தோம்? இரண்டுமுறை பஞ்சாயத்து என்னை அழைத்ததே, நான் போனேனா? நல்லவர்களையெல்லாம் அலட்சியம் செய்தாகிவிட்டது. போனால் கல்லையெடுத்து அடிப்பார்கள். சேசே! அங்கே முகத்தைக் காட்ட எனக்கு யோக்கியதை இல்லை," என்றான் சங்கர்.

"யாரும் உங்களைக் கல்லால் அடிக்க மாட்டார்கள் அங்கே," என்றாள் ஜெயம்.

"என் ?" என்று வினவினான் சங்கர்.

"அந்த மனிதர்களின் தன்மை வேறு."

"அது சரி! இங்கு குட்டை குழப்பி வைத்திருக்கிறேனே விவகாரங்கள், அதையெல்லாம் யார் கவனிப்பார்கள்! பூங்காவனம் கூடக் கைவிட்டு விட்டாரே?"

"அவர் கைவிட்டது உங்கள் நல்ல காலம், நமது பண விவகாரங்களை அண்ணன் கவனித்துக்கொள்வார்." இதை ஜெயம் சர்வ சாதாரணமாகத்தான் சொன்னாள். ஆனால் சங்கர் முகத்தில் பிரமிப்பு மிதமிஞ்சிப் படர்ந்தது. "என்ன ; என்ன ! தணிகாசலமா ?" என்று கேட்டான்.

"ஆமாம்" என்றாள் ஜெயம்.

"அவருக்குப் படிப்பு அதிகமில்லையே ஜெயம். அதைத் தவிர இங்கு ஊழல் மிக அதிகமாயிற்றே. அது கிடக்கட்டும். அவரைக் கூப்பிட்டால் நம் முகத்தில் காறித் துப்புவார்." என்று சங்கர் துன்பம் தோய்ந்த குரலில் சொன்னான்.

"படித்தவர்களை, ஒரு அட்வகேட், ஒரு ராவ்சாகிப் உட்பட நம்பிப்பார்த்தாகி விட்டது. படிக்காத ஒருவரையும்தான் நம்பிப் பார்ப்போமே," என்றாள் ஜெயம்.

சங்கர் மேற்கொண்டு எதுவும் பேசவில்லை. ஜெயத்தின் குரலில் உறுதி தீவிரமாயிருந்தது ஆனால், "தணிகாசலம் மானமுள்ளவர். யார் அழைத்தாலும் வரமாட்டார்!" என்று தனக்குள் சொல்லிக் கொண்டான்.

ஆனால் மறுநாள் தணிகாசலம் வரத்தான் செய்தார். அதற்கு அடுத்த நாளைக்கு அடுத்த நாள் சிவக்கொழுந்துவும் கிராமத்திலிருந்து வந்தே சேர்ந்தார். அற்ற அந்தக் குளத்தில் ஆம்பலும் நெய்தலும் உறவாடவே செய்தன.



## 40. சிரிப்பொலி

**வா**சலில் தூரத்தே வரும்போதே தணிகாசலத்தைக் கண்டுவிட்ட ஜெயத்தின் மனத்தில் பெரும் ஆறுதலும் தலையிலிருந்து பெரும் சுமை இறங்கிவிட்டதற்கான ஓர் ஆசுவாசமும் ஏற்பட்டதால், அவள் தணிகாசலத்தை மிகுந்த உற்சாகத்துடன் வரவேற்றாள். தணிகாசலமும் இடையே ஓடிவிட்ட வருடங்களைப் பற்றி எந்தவித பிரஸ்தாபமும் செய்யாமல், "என்ன தங்கச்சி! ஏன் இப்படி இளைச்சுட்டே? அண்ணன் நானிருக்கும்போது உனக்கென்ன கவலை?" என்று கேட்டுக்கொண்டே உள்ளே நுழைந்தார்.

ஜெயம் அவரை நேராக அடுக்களைக்கு அழைத்துக் கொண்டுபோய், "அண்ணா, என்ன சாப்பிடுகிறீர்கள்?" என்று கேட்டாள்.

தணிகாசலம் சப்பணிக்கத் தரையில் உட்கார்ந்து கொண்டு, "எதை வேண்டுமானாலும் கொடு தங்கச்சி. உன் கையில் சாப்பிட்டு எத்தனை வருஷங்களாகின்றன!" என்றார்.

ஜெயம் அவருக்குப் பாலை நன்றாகக் காய்ச்சிக் கொடுக்க அதைச் சாப்பிட்டுக் கொண்டே நீண்ட நேரம் பேசிக்கொண்டிருந்தார் தணிகாசலம். பிறகு, "தங்கச்சி, நான் போய்த் தம்பியைப் பார்த்துவிட்டு வர்றேன்," என்று சொல்லிக் கொண்டு சங்கர் இருந்த அறையை நாடிச் சென்றார்.

சங்கரின் கண்களும், தணிகாசலத்தின் கண்களும் ஒரு வினாடி சந்தித்தன. இருவரிடையே நீண்ட நேரம் மௌனம் நிலவியது. கவியைக் கவியாக்கிய அந்தச் சாதாரணத் தொழிலாளியும், அந்த ஏணியை உதறிவிட்ட கவியும் ஒருவரையொருவர் பார்த்ததும் பேசச் சக்தியற்றவராயினர். இருப்பினும் கற்பனை வெள்ளமும் இன்ச

உணர்ச்சியும் பெருக வேண்டிய கவி, வாயைத்திறக்க அடியோடு சக்தியற்றவராக இருக்கவே, தணிகாசலமே பேச முற்பட்டு, "என்ன தம்பி உடம்புக்கு என்ன ?" என்று கேட்டு பக்கத்தில் அமர்ந்தார்.

சங்கர், தணிகாசலத்தின் கையைத் தனது கையொன்றால் பிடித்துக்கொண்டு, மெள்ளச் சொன்னான் "நரம்புத் தளர்ச்சி என்று டாக்டர் சொல்கிறார். இருதயத் துடிப்பு அதிகமாயிருக்கிறதாம்," என்று.

அவன் குரலில் பலவீனமிருப்பதைக் கவனித்தார் தணிகாசலம். அத்தனைக்கும் மன அதிர்ச்சி காரணமென்பதை ஏற்கெனவே ஜெயம் புரிய வைத்திருந்தானாகையால், "தம்பி ! உனக்குக் குடி கிடையாது, நடத்தை பிசகு கிடையாது. அப்படியிருக்க இருதய நோய் எப்படி வரும் ?" என்று கேட்டார் அவர்.

"போதைக்கு மதுவைத்தான் குடிக்க வேண்டுமென்பதில்லை தணிகாசலம். சிந்தனையில், அதன் ஆணவத்தில், செல்வச் செருக்கில் போதைகள் எத்தனையோ உண்டு. நடத்தை பிசகுவது என்பது பெண்கள் தொடர்புதான் என்று பொருளல்ல. நல்லதையும் நல்லவர்களையும் விடுவதெல்லாங்கூட நடத்தைப் பிசகுதான்." என்றான் சங்கர் மெள்ள.

தணிகாசலத்தின் கண்கள் அகல விரிந்தன ஆச்சரியத்தால். சங்கர் அந்த வேதனையில் பேசுவதெல்லாம் கவிதையாகத் தெரிந்தது அவருக்கு. "சங்கர் ! உண்மையில் நீ கவியாகவே மாறிவிட்டாயே," என்று வியப்புடன் கூறவும் செய்தார்.

"ஆம்," என்று ஒப்புக்கொண்டான் சங்கர். "எனக்குக் கவிதை எழுத வராதிருந்தபோது பணம் நிறைய வந்தது. நல்ல கவிதை எழுத வந்த பிறகு பணம் போக ஆரம்பித்து விட்டது. இப்பொழுது அடியோடு போயே விட்டது. கவிதை மட்டும் மிஞ்சியது. அதில் வியப்புமில்லை," என்று சங்கர் மெள்ள நகைத்தான்.



"ஏன் வியப்பு இல்லை ?"

"எனக்குத் துன்பம் வந்து விட்டது."

"அதற்கும் கவிதைக்கும் என்ன சம்பந்தம் ?"

"சோகத்துக்கும் கவிதைக்கும்தான் சம்பந்தம். இருபத்து நாலாயிரம் சுலோகங்களை எழுதிய வான்மீகரே தன் சோகத்திலிருந்துதான் சுலோகம் பிறந்ததாகச் சொல்கிறார்."

தணிகாசலத்தின் வியப்பு அதிகமாயிற்று. "இத்தனையும் எப்பொழுது படித்தாய் தம்பி ?" என்று கேட்டார்.

"சமீப காலத்தில் எதுவுமே படிக்கவில்லை."

"ஏற்கெனவே..."

"இல்லை, இல்லை. சிறு வயதில் சில பெரியவர்கள் உபன்யாசங்களைக் கேட்டிருக்கிறேன், மாமாவின் தொந்தரவுக்காக. அந்த நினைப்புகள் !"

"மாமாவா !"

"ஆம். சிவக்கொழுந்து. உயர்ந்த மனிதர்."

"அவரை நான் பார்த்ததில்லையே !"

"எப்படிப் பார்க்க முடியும் ? நான் இருக்குமிடத்தில் நல்லவர்கள் வர முடியாதே."

தணிகாசலம் சில விநாடிகள் மௌனமாயிருந்தார். பிறகு சொன்னார்: "தம்பி ! உனக்கு தீவிரமான எந்த உடற் கோளாறும் இருக்க முடியாது. இருதயப் படபடப்பு சாதாரணமாகப் பலருக்கு ஏற்படுகிறது. இந்தக் காலத்தில் அதில் கெடுதல் ஏதுமில்லை. உன் இருதயத்துக்கு ஏதுமில்லை. கொஞ்சம் கவலையை மறந்துவிடு," என்று.

"தவறு தணிகாசலம், என் இதயம் கெட்டு நாளாகிறது. இல்லாவிடில் உங்களையெல்லாம் புறக்கணித்திருப்

பேலா?" என்று கேட்ட சங்கரின் கண்களில் நீர் திரண்டது.

தணிகாசலம் அவனை ஊன்றிக் கவனித்தார். பிறகு வெகு கண்டிப்புடன் சொன்னார்: "நீ ஆண் பிள்ளை. நீ கலங்கினால் தங்கச்சி என்ன செய்யும்? டாக்டர் சொல்கிறபடி நீ கிராமத்துக்குப் போ தங்கச்சியுடன். இருக்கிற விவகாரங்களை நான் பார்த்துக் கொள்கிறேன்," என்று.

சங்கர் நன்றி ததும்பிய கண்களை அவர் மீது திருப்பினான். அவன் முகத்தில் கவலை திரண்டது. "தணிகாசலம்! இங்கிருக்கிற ஊழல்கள் மிக அதிகமாயிற்றே!"

"தொழிற்சாலை நிர்வாக ஊழலைவிட அதிக ஊழல் உலகத்தில் எங்கும் கிடையாது தம்பி! நீ கவலையை மறந்து விடு. சரி, உன் கம்பெனிகள், கடன்கள் சம்பந்தமான தஸ்தாவேஜுகள் எங்கே?" என்று அடித்துக் கேட்டார் தணிகாசலம்.

சங்கர் கையால் இடங்களைச் சுட்டிக் காட்ட, டிராயரிலிருந்து பூங்காவனம் கொண்டு வந்த நோட்டுகளையும், பீரோவில் பல கவர்களிலிருந்த பத்திரங்கள், ஒப்பந்தங்கள் முதலானவற்றையும் எடுத்துக் கொண்டார். பிறகு அவையனைத்தையும் ஒன்றாகக் கட்டி, ஒரே பீரோவில் வைத்துப் பூட்டி, சாவியைக் கையிலெடுத்துக் கொண்டார். "தங்கச்சியை அனுப்புகிறேன் தம்பி! ஏதாவது சாப்பிட்டு விட்டுப் படுத்துத் தூங்கு. நான் இந்தப் பங்களாவை விட்டு நகரப் போவதில்லை. நாளும் அந்தக் காலனியில் எத்தனை நாள் தானிருப்பது? இந்தப் பங்களாவை என் கையிலிருந்து யார் வாங்கி விடுகிறான் பார்க்கிறேன்" என்று கூறிவிட்டு, வெளியே சென்றார்.

அவர் சென்றதும் சங்கர் நிம்மதிப் பெருமூச்சு விட்டான். அந்த தஸ்தாவேஜுகள் தணிகாசலத்தின் கைக்கு மாறியதாலேயே, ஏதோ பெரும் சுமை இறங்கி



விட்ட மாதிரி இருந்தது அவனுக்கு. அன்று பூராவும் உணவருந்தி ஓய்வெடுத்துக் கொண்டான். மதுவும் ஜெயமும் மாறி மாறி அவனைப் பார்த்துக் கொண்டார்கள்.

மதுவைப் பார்த்த சமயங்களில்தான் அவனுக்குச் சிறிது வேதனையாய் இருந்தது. அவள் வாழ்க்கையை வளப்படுத்தப் போய், அதை எத்தனை நாசத்தில் கொண்டு வந்து விட்டோம் என்று ஏங்கினான் அவன். அந்த ஏக்கத்தில் அன்று மாலை கேட்டான்: "ஏம்மா மது! மாலை வேளையாகிறதே. வெளியில் போகிறது தானே?" என்று.

"எங்கேப்பா போகிறது?" என்று கேட்டாள் மது.

"ஏன்? டென்னிஸுக்குப் போ. மோஹனை டெலிபோனிலே கூப்பிடேன்."

"நான் டென்னிஸுக்குப் போகலைப்பா?"

"ஏம்மா?"

"என்ன டென்னிஸ் வேண்டிக் கிடக்கிறது? அதைப் பார்த்தாலே வெறுப்பாயிருக்கிறது எனக்கு."

"மோகன்?"

"அவரைப் பற்றி என்னிடம் பேசாதீர்கள்," என்ற மது கண்களில் திரண்ட நீரைத் தந்தை பார்க்காதிருக்கட்டும் என்று வெளியே சென்றாள், ஏதோ அவசர காரியமிருப்பதைப் போல்.

சங்கருக்கு விஷயம் புரிந்தது. தன் விவகாரங்களின் விளைவாக, மதுவின் வாழ்க்கையும் பாதிக்கப்படுவதை உணர்ந்தான். குணமுள்ள மதுவானாலும், அவள் அப்பொழுது பணமற்ற மதுவாகையால், அட்வகேட் தமது கருத்தை மாற்றிக் கொண்டிருப்பாரென்பதை உணர்ந்தான். துக்கம் மெள்ள மெள்ள மீண்டும் அவன் இதயத்

தில் நுழைந்தது. படுக்கையில் திரும்பிக் குப்புறப் படுத்துக் கொண்டான். தலையணையைக் கண்ணீர் நனைத்தது.

அன்று முழுவதும் அவன் மனம் உடைந்து கிடந்தது. மறுநாளைக்கு மறுநாள், சிறுவயலிலிருந்து வந்த சிவக்கொழுந்து அவன் மனப்புண்ணைப் பெரிதும் ஆற்றினார். வெண்கலக் கடையில் யானை புகுந்தது போல், பெருத்த இரைச்சலைப் போட்டுக் கொண்டு, பழைய தகரப்பிடித்த ஸ்டீல் பெட்டி யொன்றுடன் உள்ளே சென்று, பல்கூடத் துலக்காமல், நேராக ஜெயத்துடன் சங்கரின் அறைக்குள் நுழைந்து, "என்ன மாப்பிள்ளே! படுக்கையிலே நீட்டிட்டீங்க? நம்ப குட்டி எங்கே?" என்று விசாரித்துத் திரும்பி, வாசற்படியில் நின்ற மதுவைப் பார்த்து, "யார் இது!" என்று இழுத்தார்.

"மதுதான் அப்பா" ஜெயத்தின் குரல் தழுதழுத்துக் கிடந்தது.

"ஹாம்!" என்று வாயைப் பிளந்தார் சிவக்கொழுந்து, "அடே இது மதுவா! ஆமாம் ஆமாம், இல்லாவிட்டால் இப்படிப் பட்டிக்காடு மாதிரி இருக்குமா? ஆம்பிளை டிரஸ் போட்டிருக்காது?"

மது மெல்ல நகைத்தாள். "நானா தாத்தா பட்டிக்காடு?" என்றாள்.

"நான் தாத்தாங்கறதைத் தெரிஞ்சுக்கிட்டியா?,'

"தெரியாம என்ன?''

"என்னை எப்பப் பார்த்திருக்கே?"

"சில பேரைப் பார்க்க வேண்டாம். மனம் சொல்லும்" என்ற மதுவை விழித்து, வியப்புடன் நோக்கிய சிவக்கொழுந்து, "என் மாப்பிள்ளே? இதையும் கவி எழுதப் பழக்கிட்டீங்களா?" என்று வினவி தமட்டுத்தனமாகச் சிரித்தார்.



அந்தச் சிரிப்பும் அந்தப் பேச்சும் டாக்டரின் அத்தனை மருந்துகளும் தராத சாந்தியைக் கொடுத்தது சங்கருக்கு. அவனும் மெள்ளச் சிரித்தான். ஜெயத்தின் இதழ்களிலும் இளநகை அரும்பியது. "அம்மா நீ விட்டு வந்த வீடு அப்படியே இருக்கிறது. நடுவில் இரண்டு குடித்தனக்காரர்கள் இருந்தார்கள். சென்ற ஆறு மாதமாகப் பூட்டிக் கிடந்தது. உன் கடிதம் வந்த பிறகுதான் மருதநாயகத்திடம் சாவியைக் கேட்டு வாங்கி வீட்டைச் சுத்தம் செய்தேன். நீ இப்பொழுது போகும்போது வீட்டில் எந்த மாறுதலும் இருக்காது. ஒன்றுதான் வித்தியாசமிருக்கும்," என்றார் சிவக்கொழுந்து.

"எது?" என்று வினவினாள் ஜெயம். "இது," என்று மதுவைச் சுட்டிக்காட்டிய சிவக்கொழுந்து, இடிஇடியென நகைத்தார்.

சங்கர் உட்பட எல்லாரும் நகைத்தார்கள். நீண்ட நாளைக்குப் பிறகு, அந்த வீட்டில் சிரிப்பொலி கேட்டது.

## 41. துறைமுகம்

**கா**லத்தால் மாறுபடாத சிறந்த தத்துவங்கள் போலச் சிறுவயலின் அந்த சிறு ஓட்டு வீடு ஒரு மாமங்கத்துக்குப் பிறகும் பழையபடிதான் இருந்தது. அதன் சிங்கமுகப் பித்தளைத் தகடு அந்த மாலையிலும் மாடத்திலிருந்த அகல் விளக்குகளின் வெளிச்சத்தில் பிரகாசித்துக் கொண்டிருந்தது. எதிரேயிருந்த இலுப்பை மரம் தனது பழுப்புப் பூக்களை உதிர்க்கவே செய்தது. அதோ கத்துவது அந்தப் பழைய மைனாவாக இருக்க முடியாது. ஒரே மைனா பல வருடங்களாக அதே இடத்தில் உட்கார்ந்து கொண்டு இருக்குமா என்ன? சிறுவயலை விட்டுப்போன சங்கர் ஒருநாள் திரும்பவும் வருவான் என்று அதற்கு எப்படித் தெரியும்? மைனா பழையதோ

புதியதோ, ஒரு மைனா தலையை நீட்டத்தான் செய்தது. இன்பமாகக் கூவவும் முற்பட்டது. அன்றும் அந்த வெளிக் கதவு மூடியே இருந்தது, மணி ஏறிவிட்ட காரணத்தால். அந்தக் கதவை நோக்கி அன்றும் சங்கர் வந்தான். ஆனால் அந்த வருகையில் மட்டும் சிறிது மாறுதல் இருந்தது.

வந்தவன், இளமை துடித்த, இன்பத்தை எதிர்பார்த்த, வீஷமப் பார்வையுள்ள வாலிபனல்ல. நாற்பத்திரண்டு வயதைத் தாண்டியிருந்த நடுத்தர வயதினன். சந்துஷ்டியுடன், சிறிது வருத்தமும் கலந்த பார்வையுடையவன். அன்று அவன் தனித்து வரவில்லை. பதினெட்டு வயதுக் கட்டழகியொருத்தியும் அவனுடன் வந்தாள். அந்த இருவரும் வீட்டை அணுகியதும், அந்தப் பதினெட்டு வயதுக் கட்டழகி கதவைத் தட்டப் போனாள். அவளைத் தடுத்த அவன், "மது! சற்று இரு" என்று அவளை நோக்கினான்.

மதுவின் அழகிய விழிகள் அவனைத் திரும்பி நோக்கின. "ஏன் அப்பா!" என்று ஆச்சரியத்துடன் கேட்கவும் செய்தாள் அவள்.

சங்கரின் இதழ்களில் மந்தகாசம் தவழ்ந்தது. ஏதோ யோசனை ஒன்று அவன் சித்தத்தில் வலம்வந்து அவன் முகத்திலும் மகிழ்ச்சியை நிறுவியது. "ஒன்றுமில்லை. கதவை நான் தட்டுகிறேன்," என்றான் அவன்.

மதுவுக்கு அவன் சொல் மென்மேலும் வியப்பை அளித்தது. "யார் தட்டினாலென்ன?" என்று அவள் உள்ளுக்குள்ளேயே கேட்டுக்கொண்டாலும், "சரி அப்பா!" என்றாள் மேலுக்கு.

சங்கர் தன் தொண்டையை ஒருமுறை கனைத்துக் கொண்டான். "ஜெயம்...ஜெயம்!" என்று சற்று இறுமாப்புடன் அழைத்துக் கையைச் சின்முத்திரையாகப் பிடித்து விண்விண்ணென்று ஆள்காட்டி விரலால் கதவைத் தட்டவும் செய்தான். சில விநாடிகளில் உள்ளே மெட்டி ஒலி கேட்டது. அந்த மெட்டியின் ஒலிகளில் ஏதோ பெரும்



சக்தி இருந்திருக்க வேண்டும். சங்கர் நன்றாக நிமிர்ந்து கம்பீரமாக நின்றான்.

ஜெயம் கதவைத் திறந்தாள். ஆனால் பழைய நாள் போல் பாதி திறந்திருந்த கதவல்ல அது. இடித்துக் கொண்டு நுழைய அந்தப் பத்தினியும் வேண்டுமென்று குறுக்கே நிற்கவில்லை. பொய்க்கோப விழிகளைக்கூட அன்று காணோம். கதவை விசாலமாகத் திறந்த ஜெயம், "ஏன் இத்தனை நேரம்? உலாவச் சென்றால் வழக்கம் போல் சீக்கிரம் வரக்கூடாதா? எனக்கு ஒரே கவலையாகப் போய்விட்டது," என்றாள்.

அவள் முகத்தில் கவலை பெரிதும் விரிந்து கிடந்தது. அந்தக் கவலையிலும் தனிச் சோபையைப் பெற்றிருந்த ஜெயத்தின் முகத்தைச் சில விநாடிகள் பார்த்துக் கொண்டு நின்ற சங்கர், பின்னால் பெண் திற்பது நினைவுக்கு வந்ததும், "இன்று ஞாயிற்றுக் கிழமை அல்லவா?" என்றான்.

"ஆமாம் அதற்கென்ன?" என்று ஜெயம் கேட்டாள்.

"அனுமார் கோயில் பக்கம் போயிருந்தோம். யாரோ திருமஞ்சனம் செய்தார்கள். பார்த்துக் கொண்டிருந்தோம்," என்றான் சங்கர்.

"அப்படியா! சரி சரி, வாருங்கள்," என்றதும் சங்கரும் மதுவும் பின் தொடர உள்ளே சென்றாள்.

சங்கர் காமிரா அறைக்குள் சென்று சட்டையைப் பழைய இடத்தில் மாட்டினான். பழைய பெஞ்சில் உட்கார்ந்து கொண்டான். ஜெயம் அன்று அவனுடன் உள்ளே வரவில்லை. நேராகச் சமையலறைக்குச் சென்றாள். மதுதான் அவனுடன் காமிரா அறைக்கு வந்து, அவனுக்குப் படுக்கையை எடுத்துப் போட்டாள்.

இந்தச் சமயத்தில் வெள்ளிக் கிண்ணத்தில் பால் சாதம் பிசைந்து எடுத்துக்கொண்டு வந்த ஜெயம், "மது!

நீ போய் அப்பாவுக்குக் கொஞ்சம் வெந்நீர் வைத்துக் கொண்டு வா," என்று உத்தரவிட, மது வெளியில் சென்றாள்.

பெஞ்சுக்கெதிரே ஒரு ஸ்டூலை எடுத்துப் போட்ட ஜெயம், சாதக் கிண்ணத்தை அதில் வைத்தாள். சங்கர் சாதத்தைக் கையால் தொடவில்லை. ஜெயத்தை ஏறெடுத்து நோக்கினான். அந்த முப்பத்தைந்து வயதில் சிறுவயதைவிட மிக மனோகரமாக இருந்தாள் ஜெயம். அன்று வெயில் அதிகமாயிருந்ததால் மாலையில் குளித்ததாலும் ரவிக்கைபோடாததாலும் அதிசுதந்தரமாக அவனெதிரே நின்றாள் அவள் அன்றும். அவன் அவளையும் பார்த்து, தான் உட்கார்ந்திருந்த அந்த ஸாட்டின் படுக்கையையும் பார்த்தான்.

ஜெயம் அவன் கண்கள் சென்ற திசைகளைப் பார்த்தாள். உள்ளூரப் பல இன்ப நினைவுகள், இச்சைகள் உண்டானாலும், அவற்றை வெளிக்குக் காட்டாமல், "சாதம் ஆறிப்போகிறது, சாப்பிடுங்கள்," என்றாள்.

"ஆமாம், ஒரு சந்தேகம் ? எனக்கு" என்றான் சங்கர்.

"என்ன சந்தேகம் ?'' என்று கேட்டாள் அவள்.

"சிவக்கொழுந்து எதற்காக இந்த மெத்தையை இவ்வளவு வருஷங்கள் காப்பாற்றி வைத்தார் ?'' என்று கேட்டான்.

"அதை அவர் வந்ததும் கேளுங்கள்.''

சங்கர் மெள்ள நகைத்தான். "உம், சாப்பிடுங்கள் அசட்டுப் பிசட்டென்று பேச வேண்டாம். மது வரப் போகிறாள்,'' என்று எச்சரித்தாள்.

அதற்குமேல் ஏதும் பேசாத சங்கர் மெள்ளச் சாப்பிட்டான். மது கொண்டு வந்த வெந்நீரையும் பருகினான். மதுவும் ஜெயமும் சமையலறை வேலைகளைப் பார்க்கச் சென்றார்கள். சங்கர் வாசலுக்குச் சென்று திண்ணையில் உட்கார்ந்து கொண்டான். டாக்டர் சொன்னதுபோல் அவன் உடல்நிலை கிராம வாசத்தால் பெரிதும் சீர்பட்டிருந்தது. வெளியில் உலாவக்கூட முடிந்தது அவனால். வெகு சீக்கிரம் பழைய உடம்பு வந்து விடுவதற்கான அறிகுறிகள் தெரிந்தன. அதிகக் கவலைகூட இல்லை அவனுக்கு.



ஜெயம் சங்கரை அழைத்துக்கொண்டு சிறுவயல் வந்து இருபது நாட்களுக்குப் பின்னரும், சிவக்கொழுந்து வரவில்லை. அடிக்கடி அவரிடமிருந்து வந்த கடிதங்களிலும் "மாப்பிள்ளை உடம்பு எப்படி ?'' என்ற விசாரணையும், 'அந்தக் குட்டி விஷயமும் எனக்குத் தெரியும், அதையும் பார்க்கிறேன்,'' என்ற உற்சாகச் சொற்களும் தவிர வேறெதுவும் இல்லை.

ஆகவே, சென்னை விவகாரங்களைப்பற்றி அதிகக் கவலையில்லாவிட்டாலும், ஜெயத்துக்கும் சங்கருக்கும் மதுவைப் பற்றிய ஒரு கவலை மட்டும் இருந்தது.

அன்று அட்வகேட் வீட்டுக்குச் சென்ற மது மறுபடியும் பழைய மதுவாயில்லை. அவள் வாயைவிட்டு எதுவும் சொல்லாவிட்டாலும், முகத்தில் இருந்த அந்தப் பழைய சிரிப்பு மறைந்துவிட்டது. அந்தக் கட்டழகுத் தங்கம் நாளுக்கு நாள் துவண்டாள். காரணம் ஜெயத்துக்கும் சங்கருக்கும் தெரிந்திருந்தாலும், அவர்கள் ஏதும் செய்யச் சக்தியற்றவர்களாயிருந்தார்கள். சாப்பிட்டு வாசல் திண்ணையில் உட்கார்ந்திருந்த சங்கரும் அன்று அதைப் பற்றியே நினைத்துக் கொண்டிருந்தான். அந்த நினைப்பில் திண்ணையில் அயர்ந்து தூங்கிவிட்டான்.

அடுத்த இரண்டு நாட்களில் குறிப்பிடத்தக்க மாறுதல் ஏதும் இல்லை அவர்கள் வாழ்க்கையில். அடிக்கடி ரிஜிஸ்டர் தபால்கள் வருவதும் வந்த பத்திரங்களில் கையொப்பமிட்டுச் சென்னைக்குச் சங்கர் திரும்ப அனுப்புவதையும் தவிர வேறு எந்த விந்தையும் நடக்க

வில்லை. ஒரு வாரம் கழித்து மீண்டும் அந்த வீடு அமர்க்களப்பட்டது. சிவக்கொழுந்து தணிகாசலம் இருவரும் சென்னையிலிருந்து வந்து சேர்ந்தார்கள். சென்னை விவரங்களைக் கேட்கச் சிவக்கொழுந்து விட வில்லை. ''மாப்பிள்ளே! எம் மக உமக்குக் கிடைத்தது உமது அதிர்ஷ்டமய்யா. இங்கேதான் ஒரு அப்பனைப் பிடித்தானென்றால், பட்டணத்திலும் ஒரு அண்ணனைப் பிடித்து விட்டானே!'' என்று கூறி, தணிகாசலத்தின் முதுகில், ஓங்கி அறைந்தார். அத்துடன் விடவில்லை. ''தணிகாசலம் யமன்! இவரைக் கண்டு பட்டணத்திலே மந்திரிகள் முதல் எல்லாரும் நடுங்கறாங்க மாப்பிள்ளே. தணிகாசலம்தான் யமன்னு நெனைக்காதே, இவர் வக்கீல் பெரிய யமன்," என்றார்.

சங்கர் ஜெயம் இருவரும் பேசவில்லை. தணிகாசலம் ஏதோ வாயைத் திறந்தார். அவரைப் பேசவிடாத சிவக்கொழுந்து, ''என்னைப் பத்திப் பிரமாதமா சொல்கிறாரம்மா இவர். எத்தனையோ வியாஜ்யம் ஆடினவனுக்கு ஒரு வீட்டு அடமான ஊழல் தெரியாதா? ஆனா அந்த வீட்டை இரண்டு லட்ச ரூபாய்க்குத் தள்ளி, ஒரு லட்ச அடமானத் தொகை ராஜி போக, பாக்கியை மீட்கத் தணிகாசலத்தால்தான் முடியும். அது கிடக்கட்டும், எனக்கு ஒரே ஒரு வருத்தம்தான்,'' என்றார்.

''என்னப்பா?'' என்று கேட்டாள் ஜெயம்.

''மாப்பிள்ளையின் நண்பர்களைக் கூட்டிக்கொண்டு வர முடியவில்லை,'' என்றார் சிவக்கொழுந்து.

"யார் இவர் நண்பர்கள்?''

"சித்தாத்தானும்—அடடே, உனக்குக் கலையழகின்னு சொன்னாத்தானே தெரியும்—அவனும், நம்ம பிரசங்க ஜோதி ராவ்சாகிபும்தான்.''

''அவர்கள் எதற்காக இங்கே வரவேண்டும்?''

''ஒருத்தர் நாட்டியமாட; இன்னொருத்தர்...'' இந்த இடத்தில் சங்கரைப் பார்த்த சிவக்கொழுந்து, ''அது



கிடக்கட்டும், நாம் விரும்பித்தான் என்ன பிரயோசனம்? அவர்களை அனுப்பமாட்டார்கள்,'' என்றார்.

''யார்?"

''போலீஸார்தான்.''

ஜெயத்துக்கு விஷயம் மெள்ளப் புரிந்தது. ''என்ன கால வித்தியாசம்!'' என்றாள்.

சிவக்கொழுந்து ஹாஸ்யத்தைக் காட்டினார். ''அவர்கள் சம்பந்தப்பட்டவரையில் அது கால வித்தியாசமல்ல அம்மா. கணக்கு வித்தியாசம். கணக்கைச் சரிப்படுத்தினாலும் நம்ம கையெழுத்தைத் தவிர வேறு யார் கையெழுத்தைப் போட்டாலும் சட்டம் ஒப்புக்கிறதில்லையம்மா,'' என்ற சிவக்கொழுந்து, வீட்டுக்குப் போக எழுந்து, ''வாங்க தணிகாசலம்! சிறுவயலை விட்டுக் கிளம்பற வரைக்கும் என் வீடுதான் உங்களுக்கு,'' என்று அழைத்துக் கொண்டு கிளம்பினார்.

அந்தச் சம்பாஷணை முழுவதும் கேட்ட மதுவின் இதயம் பாலைவனம் போல் சாரமற்றுக் கிடந்தது. அன்று மாலை பிறையில் விளக்குகளை ஏற்றி வைத்துவிட்டு, வாசலில் உட்கார்ந்து கொண்டு, எதிரேயிருந்த இலுப்பை மரத்தைப் பார்த்துக் கொண்டிருந்தாள். அதன் கிளையிலிருந்து தலையை ஆட்டிய மைனாவைக்கூட அவள் கவனிக்கவில்லை. அன்று சங்கரை அனுமார் கோயிலுக்கு அழைத்துப் போகக்கூட மது முன்வரவில்லை. அவள் மனநிலையைப் புரிந்து கொண்ட ஜெயம், ''சரி, மது! நீ வீட்டைப் பார்த்துக் கொள். நான் அப்பாவை அழைத்துப் போய் வருகிறேன்,'' என்று சொல்லிச் சென்றாள்.

தனிமையில் விடப்பட்ட மது விளக்கு வைத்து வாசலில் வந்து உட்கார்ந்ததும் பெருமூச்சு விட்டாள். எது எப்படி இருந்தாலும் தன் வாழ்வு மட்டும் எதிரேயிருந்த இலுப்பை மரம்போல் கசப்புத்தானென்று நினைத்தாள். ஆகவே, அதையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தவள் உலகத்தை மறந்தாள். விளக்கு வைக்க வந்தவள், அரைமணி நேரம்அங்கேயே உட்கார்ந்து விட்டு,

மாலை வேளையாதலால் கதவைத் திறந்தபடி வைத்துக் காமிரா உள்ளே சென்று கட்டிலில் உட்கார்ந்து கொண்டு தலையைக் குனிந்து கொண்டாள். கண்கள் நீரைப் பெருக்கின. மார்பு விம்மிப் பெருமூச்சு விட்டது. சில வினாடிகள் அப்படியே உட்கார்ந்திருந்தவள், யாரோ உள்ளே நுழையும் காலடி ஓசை கேட்டுத் தலை நிமிர்ந்தாள். காமிரா அறை வாசற்படியில் மோகன் நின்று கொண்டிருந்தான். அடுத்த வினாடி அவன் அணைப்பிலிருந்தாள் மது.

அவன் பிடியில் ஆத்திரம் பெரிதுமிருந்தது. கைகள் அவள் உடலைத் தழுவின. கழுத்தில் புதைந்த இதழ்கள் எதுவும் சொல்ல முடியவில்லை. அவளை அப்படி நெறுக்கிப் பிழிந்து இரு கைகளாலும் எதிரே நிற்க வைத்து அவள் செங்கமல மு'த்தைப் பார்த்த மோகன், "அப்பா சம்மதித்து விட்டார் மது," என்ற சொற்களை ஆத்திரத்துடன் உதிர்த்தான்.

"எப்படி ?" என்று ஏதும் புரியாமல் கேட்டாள் மது, நெகிழ்ந்த மேலாடையைச் சரிப்படுத்திக் கொண்டு.

"சம்மதிக்காவிட்டால் ரிஜிஸ்டர் விவாகம் செய்து கொள்வதாகச் சொன்னேன்," என்றான் மோகன்.

இந்தச் சமயத்தில் அனுமார் கோயில் பிரசாதத்துடன் சம்பாஷணையைக் கேட்டுக்கொண்டு வாசற்படியிலேயே நின்றுவிட்ட ஜெயமும் சங்கரும் ஒருவரையொருவர் நோக்கினார்கள்.

"என்ன இது ! அவர்..." என்றாள் ஜெயம்.

"மோகன்," என்றான் சங்கர் மெதுவாக.

"இதற்கென்ன அர்த்தம்?" என்று கேட்டாள் ஜெயம்.

"இன்னொரு கப்பல் துறைமுகத்துக்கு வந்துவிட்டது, நிலைத்தது," என்று விளக்கினான் சங்கர்.

"நிலைத்ததா ! எதில் ?" என்று புன்முறுவலுடன் கேட்டாள் ஜெயம்.

"நங்கூரத்தில்," சங்கரின் பதில் தெளிவாகவும் உறுதியாகவும் வந்தது. அவன் கண்கள் ஜெயத்தின் தூய முகத்தை ஆழ்ந்து நோக்கின.

"அப்படியா !" என்றாள் அவள்.

பதிலைச் சங்கர் கூறவில்லை, உள்ளேயிருந்து வந்த இதழ் ஒலிகள் கூறின.

முற்றும்

